

திருப்புகழைத் திருவாய்மலர்ந்தருளிய
அருணகிரிநாத சுவாமிகள்



அருணாசலத்திலிருந்து ஸ்ரீ அண்ணாமலையார் ஆலயத் தோற்றம்

தன்னந் தனியாக வீட்டை விட்டு வெளியேறி, அருணாசலத்திற்கு வந்து, சமாதி கூடி, ஆத்மானுபவத்தில் லயித்து, சச்சிதானந்த சொரூபமாய்ப் பிரகாசித்துக் கொண்டிருந்த பால ரமணரைத் தரிசிக்க வரும் அன்பர்கள் நாளும் பெருகிக் கொண்டு வந்ததால், கூட்டத்தைக் கட்டுப்படுத்த அவரோடு யாராவது இருக்க வேண்டியது மிகவும் அவசியமாயிற்று. குருமூர்த்தத்திற்கு வந்த பிறகு அண்ணாமலைத் தம்பிரானும், உத்தண்டி நயினாரும் அவருக்குத் தொண்டு புரிந்து வந்தனர். ஒரு நாள் அண்ணாமலைத் தம்பிரான் தமது மடத்திற்குப் புறப்பட்டுச் சென்றார். பின்னர் ஒரு வருடத்திற்கு அவர் திரும்பி வரவேயில்லை. அவர் அங்கு இல்லாத போது காவல் காத்து வந்த உத்தண்டி நயினாரும் தம் மடத்திற்குச் சென்று விட்டார். அச் சமயத்தில் தான் மலையாளி அன்பரான பழனிசுவாமி அருட்தொண்டு புரிய குருமூர்த்தத்திற்கு வந்தார்.

பழனிசுவாமி, ஐயன்குளம் விநாயகர் கோயிலில் பூஜை செய்து கொண்டிருந்தார். பூஜை முடிந்ததும், கணபதிக்குப் படைத்த நைவேத்தியத்தையே உண்பார். அந்த ஒருவேளை உணவுதான். அதில் உப்பு கூட

இருக்காது. பழனிசுவாமியிடம் ஒரு நாள் சீனுவாச ஐயர் என்ற அன்பர் வந்தார். ''சுவாமி, நீங்கள் இந்தக் கல்லுச் சாமிக்கு இத்தனை வருடங்களாகத் தொண்டு புரிந்து வருகிறீர்களே, என்ன பிரயோஜனம்? குருமூர்த்தத்தில் ஓர் உயிருள்ள சாமி உட்கார்ந்து கொண்டிருக்கார். துருவனைப் போல் மாசில்லா தவத்தில் அவர் ஈடுபட்டிருக்கிறார். அவருக்குத் தொண்டு புரிய தற்போது ஒருவருமில்லை. நீங்கள் அங்கு போய் சேவை செய்து வாருங்கள். போகிற வழிக்காவது புண்ணியமுண்டு'' என்று கூறினர். அதைக் கேட்ட பழனிசுவாமி ஒரு நாள் குருமூர்த்தத்திற்குச் சென்று பால ரமணரைத் தரிசித்தார். அந்தக் கணமே அவருக்கு அடிமையானர். தம் உடல், பொருள், ஆவி அனைத்தையும் அன்னாருடைய சேவைக்கே அர்ப்பணித்து விடுவதென்று உறுதி பூண்டார். சிறிது நாட்கள் கோயிலுக்கும், குருமூர்த்தத்திற்குமாக அலைந்து கொண்டிருந்த பழனிசுவாமி, இறுதியாக அந்தப் பாலயோகியிடமே தஞ்சமடைந்து விட்டார். அந்த ஞான குருவை சம்சாரக் கடலைக் கடக்கும் ஓடமாகக் கருதி; நிழல்போல் அவரைப் பின் தொடர்ந்தார். சுமார் இருபத்தோரு வருடங்கள் அவருக்கு உள்ளத் தூய்மையுடன் கைங்கர்யம் செய்யும் பாக்கியத்தைப் பெற்றார்.

பக்தர்கள் கொண்டு வரும் உணவுப் பண்டங்களை யெல்லாம் ஒன்றாகக் கலந்து பகவானுக்கு ஒரு கவளம் கொடுத்து விட்டு, மீதியைச் சுற்றியிருப்பவர்களுக்குப் பிரசாதமாகக் கொடுக்கும் பழக்கத்தை பழனி சுவாமிதான் தொடங்கினர். பால ரமணருடைய தவத்திற்கு ஓர் இடையூறும் ஏற்படக் கூடாது என்பதில் கண்ணும் கருத்துமாக இருந்த பழனிசுவாமி, சில சமயங்களில் அவரை உள்ளே வைத்துப் பூட்டி விட்டுப் போய் விடுவார்.

குருமூர்த்தத்தைச் சுற்றிலும் நிறைய புளியமரங்கள் உண்டு. ஒரு நாள் ஒரு மரத்தடியில் பால ரமணர் அமர்ந்திருந்தார். அப்போது அங்கு புளியம்பழத்தைத் திருடுவதற்கு இரண்டு பேர் வந்தார்கள். அதில் ஒருவன் கல்நெஞ்சுக்காரன். ஒரு ஜீவனுக்கும் எந்தவிதத் தீங்கும் நினைக்காமல் சாந்த மூர்த்தியாக அமர்ந்திருந்த ரமணரைக் கண்டான் அவன். அவனுக்கு விபரீத எண்ணம் ஒன்று தோன்றியது. அதை நண்பனிடம் கூறினன்: ''அதோ கொட்டு கொட்டுன்னு முழிச்சிகிட்டுப் பேசாமெ உட்கார்ந்துகிட்டிருக்கு பார். வா, கள்ளிப் பாலைக் கொண்டு வந்து அதோட கண்லே ஊத்தலாம். அப்போதாவது பேசுதா பார்க்கலாம்''— அவன் உள்ளத்தில் புகுந்த பேய், பயங்கர யோசனையைக் கூறிற்று. ஆனால், நண்பனே சற்று இரக்கம் உள்ளவன். அவன் சொன்னன்: ''வேண்டாம்டா, பாவம்! அந்தப் புள்ளே நம்மை என்ன செய்யுது? நாம வந்த காரியத்தை முடிச்சிகிட்டுப் போவோம்.''

எல்லாவற்றையும் பார்த்துக் கொண்டும் கேட்டுக் கொண்டும் பரப்பிரும்மமாக அமர்ந்திருந்தார் பால ரமணர். இந்த நிகழ்ச்சியைக் கேள்வியுற்ற பழனிசுவாமிக்குக் கவலை அதிகரித்தது. அதைவிடப் பாதுகாப்பான இடத்திற்கு ஞானகுருவை அழைத்துச் சென்று விட வேண்டும் என்று அப்போதே முடிவு செய்துவிட்டார் அவர்.

அது மட்டுமல்ல; வரவர பால ரமணருக்கு உடல் சக்தி குறைந்து கொண்டே வந்தது. உட்கார்ந்தால் எழுந்திருக்க முடியவில்லை. எழுந்து நின்ருல், நாலடி கூட நடக்க முடிவதில்லை. சுருண்டு சுருண்டு விழுந்தார். அப்போதெல்லாம் பழனிசுவாமிதான் கீழே விழுந்து விடாமல் அவரைத் தாங்கிப் பிடித்துக் கொள்வது வழக்கம்.



ஸ்ரீ ரமண பகவான்

பால ரமணருக்கு ஒய்வு கொடுக்கவும், பார்க்க வருபவர்களின் தொந்தரவைக் குறைக்கவும் பழனிசுவாமி அவரை அருகிலுள்ள மாந்தோப்பிற்குள் அழைத்துச் சென்ருர். அங்குள்ள பரணில் இருவரும் குடி புகுந்தனர். தோப்பின் சொந்தக்காரரான வெங்கடராம நாயக்கரின் அனுமதியின்றி ஒருவரும் உள்ளே நுழைய முடியாதாகையால், ஞானத் தவயோகிக்குத் தேவையான தனிமை கிடைத்தது.

மாந்தோப்பில் இருந்த ஆறு மாதங்களையும் பயனுடன் கழித்தார் பழனிசுவாமி. ஊருக்குள் சென்று நூல் நிலையத்தினின்று கைவல்ய நவநீதம், யோக வாசிஷ்டம், விவேக சூடாமணி போன்ற புத்தகங்களை எடுத்து வந்து, ஒவ்வொரு வரியாக நிதானமாகப் படித்துக் கொண்டிருப்பார். பால ரமணர் அதை உன்னிப்பாகக் கவனிப்பார். சில சமயங்களில் அப்புத்தகத்தை வாங்கி, ஒரு புரட்டுப் புரட்டுவார். அதில் புதைந்துள்ள கருத்துக்களெல்லாம் படம் பிடித்தாற் போல் அவரது மனத்தில் அப்படியே பதிந்து விடும். சுய உணர்வாலும், ஆன்மிக அனுபவத்தாலும் பரிபூரண ஞானம் பெற்றவருக்குப் படித்து அறிந்து கொள்ள வேண்டியது ஒன்றுமேயில்லை. இருப்பினும், உணர்வோடு ஒன்றிவிட்ட தன் அனுபவங்களுக்கான விளக்கங்களை அவர் படித்த அந்த நூல்களில் கண்டார். எண்ணக் குவியல்களின் வடிவங்கள் எழுத்தில் பொறித்திருக்கக் கண்டார். தம்மை நாடி வந்தவர்களின் சந்தேகங்களைப் போக்கவும், உணர்ந்து விட்ட தெளிந்த ஞானத்தை, உலகத்தாரின் உள்ளத்தில் எளிதாகப் பதிய வைப்பதற்கும் அந்நூல்களில் மேற்கோள்கள் பரவியிருக்கக் கண்டார். இவ்வாறே புலமை மிக்கவர்களோடு பால ரமணர் பழகப் பழக,

சமஸ்கிருதத்திலும், மலையாளத்திலும் பிரமிக்கத் தக்க தேர்ச்சி பெற்று தம் கருத்துக்களை அம் மொழிகளில் எடுத்துரைக்கவும் தொடங்கினார்.

மதுரையில் படித்துக் கொண்டிருந்த வேங்கடராமன், திருவண்ணாமலைக்கு ஓடி வந்து இரண்டாண்டுகளுக்கு மேல் ஆகிவிட்டது. இதுவரையில் ஓர் உறவினராவது அவரை வந்து பார்க்கவில்லை. எப்படிப் பார்ப்பார்கள்? 'ஓடிப் போனவர்' எங்கிருக்கிறார் என்பது அவர்களுக்குத் தெரிந்தால்தானே?

'என் தகப்பனாரைத் தேடிக் கொண்டு அவருடைய உத்தரவின்படி இவ்விடத்தை விட்டுக் கிளம்பி விட்டேன்' என்று சாதாரணமாக ஒரு கடிதத்தை எழுதி வைத்துவிட்டு, மூன்று ரூபாய் பணத்துடன் வேங்கடராமன் எளிதாக ஊரைவிட்டுப் புறப்பட்டு விட்டார். ஆனால், சிறிய தந்தையையும், சித்தியையும், மூத்த சகோதரர் நாகசாமியையும் அச்செய்தி இடியெனத் தாக்கியது. படிப்பதற்காகத் தன் பராமரிப்பில் விட்ட பையனை வீட்டைவிட்டு வெளியேறும்படி விட்டு விட்டோமே என்று சுப்பய்யர் தவியாய்த் தவித்து விட்டார். மன்னி அழகம்மாளுக்கு என்ன பதில் சொல்லப் போகிறோம் என்று துடித்துப் போனார். எங்கெல்லாமோ சென்று தேடினார். போலீசில் எழுதி வைத்தார். யார் யாருக்கோ கடிதம் எழுதினார். ஒன்றும் பயனில்லை.

அண்ணன் நாகசாமியின் மனச் சாட்சி உறுத்தியது. 'நாம் கடிந்து பேசியதால்தானே தம்பி ஓடிவிட்டான்! இப்படிச் செய்வான் என்று தெரிந்திருந்தால் அப்படிப் பேசியிருக்க மாட்டேனே... அப்படி என்ன தான் பேசி விட்டேன்? சாதாரணமாகத் தினம் சொல்வது போலத்தானே சொன்னேன்! ஓர் அண்ணனுக்கு இந்த உரிமை கூடக் கிடையாதா?... எங்கே போய் விடப்போகிறான்? கையிலிருக்கும் பணம் தீர்ந்ததும் திரும்பி வந்து விடுவான்.... ஒரு வேளை தம்பி வராவிட்டால்...? அம்மாவுக்கு என்ன பதில் சொல்வது? அவள் முகத்தில் எப்படி விழிப்பது...? ஈச்வரா! எனக்கு இப்படி ஒரு சோதனையா?'

அப்போது அழகம்மாள் மானாமதுரையில், மைத்துனர் நெல்லையப்பையர் இல்லத்தில் இருந்தார். அந்த அம்மாளுக்குச் செய்தி எட்டியதும் வேதனையால் வெதும்பினார். நெஞ்சு குமுறினார். வயிற்றில் அடித்துக் கொண்டார். வாய்விட்டு அலறினார். எப்படியாவது குழந்தை இருக்குமிடத்தைக் கண்டு பிடித்து, அவனை அழைத்து வரும்படி மைத்துனர்களிடமும், பிள்ளையிடமும் வேண்டினார். எந்நேரமும் ஏக்கத்தில் மூழ்கியிருந்தார். உணவு செல்லவில்லை. உறக்கம் கொள்ளவில்லை.

திருவனந்தபுரத்தில் முகாமிட்டிருந்த ஒரு நாடகக் கம்பெனியில் வேங்கடராமன் சேர்ந்து விட்டதாக யாரோ சொன்னார்கள். அது அழகம்மாளின் காதில் விழுந்தது! பெற்ற மனம் பித்தாயிற்றே! உடனே நெல்லையப்பையரைத் திருவனந்தபுரம் போய்த் தேடிப் பார்க்கச் சொன்னார். பையன் அங்கு இருப்பான் என்ற நம்பிக்கை அவருக்குச் சிறிதும் இல்லை. என்ன செய்வது? மன்னியின் ஆசைக்குக் குறுக்கே நிற்க முடியுமா? திருவனந்தபுரம் போய் இரண்டு நாள் சுற்றிவிட்டு வந்தார். நாடகக்

கம்பெனிகளிலெல்லாம் ஏறி இறங்கினர். எங்குமே வேங்கட ராமனைக் காண முடியவில்லை. ஏமாற்றத்துடன் திரும்பி வந்தார். அந்த ஏமாற்றச் செய்தியைத் தாயாரால் ஏற்றுக் கொள்ள முடியவில்லை. தானே நேரில் சென்று பார்த்துவிட்டு வந்துவிடுவது என்று முடிவு செய்தார். தாயின் உணர்ச்சிக்கு யார் தடை போட முடியும்? துணைக்கு யாரையோ அழைத்துக் கொண்டு திருவனந்தபுரம் புறப்பட்டு விட்டார். பிள்ளைப் பாசம் லேசானதா?



ஸ்ரீ அழகம்மாள் 33/3

தெருவில் அலைந்து கொண்டிருந்த அழகம்மாள் ஒருகணம் திடுக்கிட்டு நின்ருர். 'அது யார்? ஆமாம், சந்தேகமில்லை. அது வேங்கடராமனே தான். அதே உயரம், அதே நிறம், அதே சுருண்ட கேசம்!' ஒரே பாய்ச்சலில் அவனருகில் ஓடினுர். ''வேங்கடராமா... டேய், வேங்கடராமா.''—கன்றைத் தேடித் திரியும் பசு போல் கதறினுள்.

தன்னை யாரோ அழைப்பதைக் கேட்டுத் திரும்பினன் அந்தப் பையன். அழகம்மாளுக்கு வயிற்றில் புளியைக் கரைத்தது போலாயிற்று. அது வேங்கடராமன் இல்லை. வேறு யாரோ? ஏமாற்றத்தின் எல்லைக்கே போய்விட்டார் அவர். அழுது புலம்பினுர். உடன் வந்தவர்கள் பரிதாபப் பட்டார்கள். தாயன்பைக் கண்டு அவர்கள் நெஞ்சம் நெகிழ்ந்தார்கள்.

இப்படி எத்தனையோ நிகழ்ச்சிகள். எல்லோரும் எங்கெல்லாமோ தேடிப் பார்த்து ஓய்ந்து விட்டார்கள்.

இரண்டு ஆண்டுகள் உருண்டோடி விட்டன. சுப்பய்யர் காலமானுர். அதற்காக உறவினர்கள் மதுரையில் கூடி யிருந்தார்கள். சடங்குகளில் கலந்து கொள்ளுவதற்காக திருச்சுழியிலிருந்து வந்த ஓர் இளைஞன்தான், வேங்கடராமன் திருவண்ணுமலையில் இருக்கும் செய்தியை முதன் முதலில் எல்லோருக்கும் தெரிவித்தான்.

அவன் முதல் நாள் மதுரையிலுள்ள திருஞானசம்பந்தர் மடத்திற்குச் சென்றிருந்தான். அங்கு வந்திருந்த குன்றக்குடி ஆதீனத்தைச் சேர்ந்த அண்ணுமலைத் தம்பிரான், குருமூர்த்தத்தில் அமர்ந்திருக்கும் பாலயோகியின் மகிமையைப் பற்றி யாரிடமோ உணர்ச்சிப் பெருக்குடன்

பேசிக் கொண்டிருந்தார். அவர் பெயர் வேங்கடராமன் என்றும், அவர் திருச்சுழியைச் சேர்ந்தவர் என்றும் தம்பிரான் கூறியதைக் கேட்ட இளைஞன், மறுநாள் அந்தத் தகவலை உறவினர்களிடம் கூறியிருக்கிறான்.

சகோதரரின் இறுதிச் சடங்குகள் முடிந்ததும் நெல்லையப்பையர் நண்பர் ஒருவருடன் திருவண்ணாமலைக்குப் புறப்பட்டுப் போனார்.

அவர்கள் இருவரும் வந்த போது, பால ரமணர் மாந்தோப்பில் இருந்தார். சொந்தக்காரரின் அனுமதியின்றி ஒருவரும் உள்ளே நுழைய முடியாது என்று அறிந்த நெல்லையப்பையர், வெங்கடராம நாயக்கரிடம் தன் உறவைக் கூறி, பாலயோகியைப் பார்த்துத்தான் ஆகவேண்டும் என்று பிடிவாதம் பிடித்தார். ஒரு துண்டுக் காகிதத்தை எடுத்து, "**மானாமதுரை வக்கீல் நெல்லையப்பையர் தரிசனம் செய்ய விரும்புகிறார்**" என்று எழுதி, நாயக்கரிடம் கொடுத்து, "இதைக் கொண்டு போய் அவரிடம் காட்டுங்கள். அவர் வரச் சொன்னால், உள்ளே விடுங்கள்" என்று கூறினார். அந்தச் சீட்டை எடுத்துக் கொண்டு போய் பால ரமணரிடம் மரியாதை யுடன் கொடுத்தார் நாயக்கர்.

அந்தச் சீட்டை வாங்கிப் பார்த்த பால ரமணர் அவரை உள்ளே அனுமதிக்கும்படிக் கூறினார்.

உள்ளே நுழைந்ததும், 'வேங்கடராமன்' இருந்த கோலத்தைக் கண்டு நெல்லையப்பையருக்குக் கண்கள் கலங்கி விட்டன. வாடிய வயிறு, எலும்புகள் தெரியும் அங்கங்கள், சடை விழுந்த முடி, நீண்டு சுருண்ட நகங்கள். தன் சகோதரனின் பிள்ளை ஞானநிலை அடைந்து விட்டானே என்ற பூரிப்பு ஒருபுறம்; அநாதை மாதிரி கிடக்கிறானே என்ற அஞ்ஞானத் துயரம் ஒருபுறம். 'சுவாமி' களிடம் என்ன பேசுவது என்றே புரியவில்லை அவருக்கு. வெங்கடராம நாயக்கரையும் பழனிசுவாமியையும் பார்த்துப் பேசினார். "எங்கள் குடும்பத்தில் பிறந்த ஒருவர் சந்நியாசியாகி யோக நிலையில் இருப்பதைக் குறித்து எங்களுக்கு மகிழ்ச்சிதான். இருந்தாலும் இன்னும் கொஞ்சம் வசதிகளோடு இருக்கலாமே என்பதுதான் எங்கள் ஆசை. இவர் துறவு வாழ்க்கையை விட வேண்டாம். நான் வசிக்கும் மானாமதுரையில் ஒரு மகானின் சமாதிக் கோயில் இருக்கிறது. அங்கு வந்து தாராளமாகத் தங்கலாம். நாங்கள் எல்லா செளகரியங்களையும் கவனித்துக் கொள்கிறோம்."

நெல்லையப்பையர், ஒரு கண்ணால் 'வேங்கடராம'னைப் பார்த்துக் கொண்டேதான் பேசினார். ஆனால், அதில் ஒரு வார்த்தையாவது பால ரமணரின் இதயத்தைத் தொட்டதாகத் தெரியவில்லை. அவர் கற்சிலையைப் போல, ஒருவித முகபாவமுமின்றி அமர்ந்திருந்தார். கண்ணால்கூட தன் மனத்தில் இருந்ததைத் தெரியப் படுத்த வில்லை. அவருடைய திட சித்தத்தையும் வைராக்கிய யோகத்தையும் நன்கு புரிந்து கொண்ட நெல்லையப்பையர் வேறு வழியில்லாமல் ஊர் திரும்ப வேண்டியதாயிற்று. அழகம்மாளிடம் நடந்ததை யெல்லாம் சொன்னார். அவருக்கு மைத்துனரின் சாமர்த்தியத்தின் மீது நம்பிக்கையில்லை. தானே புறப்பட்டுச்

சென்று, அன்புடன் அழைத்தால், மகன் தன்னுடன் புறப்பட்டு வந்து விடுவான் என்று நினைத்தார். மூத்த மகன் நாகசாமியை அழைத்துக் கொண்டு திருவண்ணாமலைக்குப் புறப்பட்டார். ரயிலில் போகும் போது அந்தத் தாயின் உள்ளத்தில் நம்பிக்கையொளி படர்ந்திருந்தது.

தனிமையை நாடி குருமூர்த்தத்தை யடுத்துள்ள மாந்தோப்பிற்குள் புகுந்த பால ரமணருக்கு அங்கும் நிம்மதியில்லை. சிறிய தந்தை நெல்லையப்பையர் வந்து போனதிலிருந்து, அங்கிருந்து ஓடி விட வேண்டும் என்ற எண்ணம் அவரிடம் வேரூன்றத் தொடங்கி விட்டது. தம் அருகில் பழனிசுவாமி கூட இருக்க வேண்டாம் என்று தோன்றியது. ஒரு நாள் அவரை அழைத்து, ''நீங்க ஒரு திசையில் போய்ப் பிச்சை யெடுங்க. நான் வேறொரு திசையில் போய்ப் பிச்சை யெடுக்கிறேன். ரெண்டு பேரும் ஒண்ணாயிருந்தது போதும்'' என்றார். பழனிசுவாமி ஏதோ சொல்வதற்கு முயன்றார். அதற்குள் பால ரமணர், ஒன்றுமே பேசாமல் அங்கிருந்து கிளம்பினார். வேறு வழியில்லாமல் பழனிசுவாமியும் வேறொரு திக்கில் நடையைக் கட்டினார்.

மாந்தோப்பை விட்டுக் கிளம்பிய பால ரமணர், ஐயன் குளத்தருகில் உள்ள அருணகிரிநாதர் ஆலயத்தில் போய் அமர்ந்து விட்டார். அன்றிரவே பழனிசுவாமி பகலில் பிச்சை யெடுத்த சோற்றுடன் அங்கு வந்து சேர்ந்தார். குருவின் பாதங்களில் விழுந்தார். அவரது கண்ணீர், தரையை நனைத்தது. ''சுவாமி, என்னை உதறித் தள்ளாதீர்கள். தங்களை விட்டால் எனக்கு வேறு கதியேது? தங்களது அருள் நோக்கைக் காணாது நான் வாழ முடியாது'' என்று கதறித் தீர்த்து விட்டார். மௌன குருவும் இளநகை புரிந்து, தம்முடன் இருக்க அவருக்கு அனுமதி தந்தார். சரணாகதி அடைந்தவனை குருவும் தெய்வமும் என்றுமே கைவிட்டதில்லை!

சில வாரங்கள் அருணகிரிநாதர் ஆலயத்தில் தங்கிவிட்டு, மீண்டும் அண்ணாமலையார் ஆலயத்தில் குடியேறினார் பால ரமணர். அங்குள்ள கோபுரங்களில் தங்கி, சமாதி கூடினார். பூந்தோட்டத்திலும், அவ்வப் போது வந்து அமர்ந்து, தவமியற்றினார். அங்கும் நிம்மதி குலையவே, பவழகிரீச்வரர் உறையும் பவழக்குன்றிற்குக் குடி பெயர்ந்தார். அன்று கௌதம முனிவர் தவம் புரிந்த குன்றில், குமரனும் ரமணப் பெருந்தகை அருந்தவம் ஆற்றப் புகுந்தார்.

அன்பு மகன் இருக்குமிடம் அறிந்து அன்னை அழகம்மை மூத்த மகன் நாகசாமியுடன் பவழக் குன்றுக்கு வந்த போது, பால ரமணர் பரட்டைத் தலையுடன், வாடிய வயிற்றோடு, கோவணாண்டியாக ஒரு பாறையில் படுத்திருந்தார். அதைக் கண்ட தாயின் வயிறு பற்றி எரிந்தது. துயரம் தாங்காது, தொண்டைக் குழியில் பேச்சு அடைத்துப் போக, பீறிட்ட கண்ணீருடன் கலக்கமுற்று நின்றார் அழகம்மை! தம்பியின் 'பரிதாப' நிலை கண்டு உள்ளம் குமைந்தார் நாகசாமி. அவர்களிருவரையும் பார்த்துவிட்டு, ஒருவித முக பாவமுமின்றி தன்னில் லயித்திருந்தார் மௌன குரு.

அழகம்மாள் மகனுடன் பேசினர், கெஞ்சினர், குழைந்தார், குமுறினர், குழந்தையைப் போல் தேம்பித் தேம்பி அழுதார். ''அப்பா, என் கண்ணே, செல்வமே, உன்னை இந்தக் கோலத்தில் பார்க்கவா பத்து மாதம் சுமந்து பெற்றேன்? எனக்குக் கல் மனசுடா. இல்லாவிட்டால் உன்னை இரண்டு வருஷம் பிரிந்து இருந்தும் நான் உயிர் வாழ்ந்து கொண்டிருப்பேனு? நீ கல் தரையில் படுத்திருக்கும் போது, நான் பாயில் படுப்பேனு? நீ பட்டினி கிடக்கும்போது நான் வயிறு புடைக்கத் தின்பேனு? இனிமேலும் என்னுல் தன்னந்தனியாக இருக்க முடியாது. நீ என்னுடன் புறப்பட்டு வந்து விடு. நீ வராமல் நான் ஊர் திரும்பப் போவதில்லை.'' —உணர்ச்சி கொப்பளிக்க, அடி வயிற்றிலிருந்து கதறினுள் அன்னை. அருள் மகன் அசைந்து கொடுக்கவில்லை. தவ மலைமீது, தாய்ப் பாசம் முட்டி, மோதி, தோல்வியே கண்டது.

மூன்று நாட்கள் முயன்று பார்த்தாள் அன்னை. முற்றும் துறந்த முனிவனைப் பாச வலையில் சிக்க வைக்க முடியவில்லை. கருணையே வடிவானவர், மனத்தைக் கல்லாக்கிக் கொண்டு பாச அலைகளைத் தாங்கிக் கொண்டார். உள்ளம் இளகவில்லை. அன்னைக்கு ஆறுதலாக மறுமொழியும் கூறவில்லை.

அருணுசலமாகவே அமர்ந்திருந்த அருமை மைந்தனை விட்டுப் பிரிய மனம் வரவில்லை தாய்க்கு. தன் வேண்டுகோளுக்குச் செவி சாய்க்காத மகன், பிறர் பேச்சுக்கு இரங்கலாம் என்று நினைத்தார். அங்கிருந்தவர்களிடம் பரிதாபமாக முறையிட்டார்.

''நான் இந்தப் பிள்ளையைப் பெற்றவள். எத்தனை கதறியும் என்னுடன் ஒரு வார்த்தை கூடப் பேச மாட்டேன் என்கிருன். நீங்களாவது எனக்காகப் பரிந்து பேசக் கூடாதா? மூன்று நாட்களாகத் தூக்கமின்றி, அன்ன ஆகாரமின்றி, அழுது புலம்பிக் கொண்டிருப்பதைப் பார்த்துக் கொண்டிருக்கிறீர்களே, உங்கள் மனமும் கல்லா?'' என்று உரிமையுடன் கடிந்து கொண்டார் அன்னை அழகம்மாள்.

அங்கிருந்தவர்களில் பச்சையப்பப் பிள்ளை பச்சையுள்ளம் படைத்தவர். தாயின் கண்ணீர் அவரை உலுக்கி விட்டது. குருநாதரிடம் சென்ருர். பாதங்களில் விழுந்தார். கண்ணீருக்கிடையே விசும்பினர்.

''சுவாமி, உங்கள் வைராக்கியம் எங்களுக்குப் புரிகிறது! பெற்ற தாய்க்குப் புரியுமா? நீங்கள் தாயோடு ஊருக்குத் திரும்பிப் போக வேண்டாம். உங்கள் மனத்தில் உள்ளதையாவது தெரிவிக்கக் கூடாதா? உங்கள் மீது உயிரையே வைத்திருக்கும் இந்த அம்மாளுக்கு ஆறுதலாக ஒரு வார்த்தையாவது பேசக் கூடாதா?''

இதைக் கேட்டு லேசாகப் புன்முறுவல் பூத்தார் பால ரமணர்.

அதன் பொருளைப் புரிந்து கொண்டார் பச்சையப்பப் பிள்ளை. தொடர்ந்து பேசினர்:

''சுவாமி, நீங்கள் இதற்காகத் தங்கள் மௌன விரதத்தைக் கலைக்க வேண்டாம். உங்கள் தாய்க்குப் பதிலளிக்கும் வகையில் இரண்டு வரிகளாவது எழுதிக் காட்டுங்களேன்'' என்று பேப்பரையும் பென்சிலையும் அவரிடம் கொடுத்தார்.

அதை வாங்கித் தவப் புதல்வர் தெளிவாக எழுதினர்:

> அவரவர் பிராப்தப் பிரகாரம் அதற்கானவன் ஆங்காங்கிருந்து ஆட்டுவிப்பன். என்றும் நடவாதது என் முயற்சிக்கினும் நடவாது. நடப்பதென்றடை செய்யினும் நில்லாது; இதுவே திண்ணம். ஆகலின், மௌனமாயிருக்கை நன்று.

'முற்பிறவியின் நல்வினைத் தீவினையை யொட்டி நம்மை யெல்லாம் ஒரு சக்தி ஆட்டுவிக்கிறது. நாம் நடக்க வேண்டும் என்று நினைப்பது நடக்காது. நடக்கப் போவதைத் தடுத்து நிறுத்த ஒருவராலும் முடியாது. இது நிச்சயம். எனவே, மௌனமாயிருப்பது நல்லதே.'

மகன் எளிதாகக் கூறிவிட்டான்.அவன் அடைந்த பக்குவ நிலையைத் தாய் இன்னும் அடையவில்லையே!

மகன் கூறிய சமாதானம் தாயின் உள்ளத்தைத் தொடவில்லை. இருப்பினும் அவர் மனத்தை மாற்ற முடியாது என்பது அந்தத் தாய்க்கு நன்றாகப் புரிந்து விட்டது. இனி அங்கிருப்பதில் பயனில்லை என்று உணர்ந்து, நாகசாமியை அழைத்துக் கொண்டு மானமதுரைக்கே திரும்பி விட்டார்.

அழகம்மாளின் துயரத்திற்கு முடிவு இருப்பதாகத் தெரியவில்லை. ஒரு பிள்ளையை அருணசலம் அழைத்துக் கொண்டு விட்டார். திருவண்ணமலையிலிருந்து திரும்பிய ஓராண்டுக்கெல்லாம் மூத்த மகன் நாகசாமி இறந்து விட்டார். சம்பாதித்துத் தன்னைக் காப்பாற்ற வேண்டிய பிள்ளை போய் விட்டான். அன்னையின் வேதனைக்கு அளவேயில்லை.

இனி அவளுக்குக் கடைசிப் பிள்ளை நாகசுந்தரம்தான் கதி. கோயிலில் கணக்குப் பிள்ளை உத்தியோகம் பார்த்துக் கொண்டிருந்தார் அவர். அண்ணனைப் பார்க்க வேண்டும் என்று ஒருநாள் அவருக்கு ஆவல் பிறந்தது. உடனே திருவண்ணமலைக்குப் புறப்பட்டு வந்தார்; சகோதரரைக் கண்டு மனம் கலங்கினர். கண்ணீர் பொங்க அவரைத் தழுவிக் கொண்டார். அந்நேரத்திலும் பால ரமணர் உணர்ச்சி வசப்படவில்லை.

தாயும் சேயும்



அப்போது பால ரமணர் பவழக்குன்றை விட்டு அருணசலத்தின் குகையொன்றில் வாசம் செய்து கொண்டிருந்தார். அதற்கு சத்குரு சுவாமி குகையென்று பெயர். விருபாட்ச தேவர் குகையிலிருந்து அங்கு வந்திருந்தார். விருபாட்ச குகையில், ரமணரைக் காண வருகிறவர்களிடமிருந்து அதன் நிர்வாகிகள் பணம் வசூல் செய்தார்கள். தன்னைக் கருவியாக்கிக் கொண்டு பணம் சம்பாதிப்பதை இளம் சுவாமிகள் வெறுக்கவே, அங்கிருந்து புறப்பட்டு இந்தக் குகைக்கு வந்தார். மலர்த் தேனை நாடி வரும் வண்டுகள் போல் அங்கும் பக்தர்கள் அவரைச் சூழ்ந்து கொண்டார்கள்.

தம்பி நாகசுந்தரம், அண்ணனேடு தங்கிச் சேவை செய்ய வேண்டும் என்று விரும்பினர். தம் விருப்பத்தை அண்ணனிடம் தெரிவித்தார். அவர், 'கூடாது' என்று தலையை அசைத்து விட்டார். அண்ணன் அபிப் பிராயத்திற்குத் தலை வணங்கிவிட்டு, தம்பியும் ஊர் திரும்பி விட்டார்.

பின்னர், அழகம்மாளும் இதர உறவினர்களும் ஓரிரு முறை திருவண்ணமலைக்கு வந்து போனர்கள். ஒரு சமயம் காசி யாத்திரை சென்றபோது, மகனைத் தரிசித்து விட்டுப் போனர். 1914-ம் வருடம் வேங்கட ரமண சுவாமியைத் தரிசிக்கத் திருப்பதி சென்று திரும்பிய போது, திருவண்ணமலையில் இறங்கி, விருபாட்ச குகையில் இருந்த பால ரமணருடன் சில நாட்கள் தங்கினர். அப்போது அழகம்மாளுக்கு டைபாயிடு காய்ச்சல் கண்டது. அன்னையின் உடல்நிலை கண்டு அண்ணல் வேதனைப்பட்டார். பெற்ற தாயைப் பொறுமையுடனும் அக்கறையுடனும் பேணிக் காத்தார்.

ஒரு சமயம் தாயின் உடல்நிலை மோசமாகியது. நிலைமை கவலைக்கிடமாகி விட்டது. அத்தருணத்தில் தெய்வ மகன், அப்பன் அருணசலேசனைக் குறித்துப் பிரார்த்தித்தார். அது தீந்தமிழ்ப் பாக்களாக மலர்ந்தது.

1. அலையா வருபிறவியத்தனையு மாற்ற
மலையா யெழுந்த மருந்தே—தலைவாநின்
ருள்கதியாய் வாழுமென் ருய்தாப மாற்றியே
யாள்வதுவு முன்கடனே யாம்.

2. காலகா லாவுன் கமல பதஞ்சார்ந்த
பால னெனையீன்ருள் பாலந்தக் காலன்ருன்
வாரா வகையுன்கால் வாரிசமே காட்டுவா
யாராயிற் காலனுமே யார்?

3. ஞானங்கி யாயோங்கு நல்லருண வோங்கலே!
ஞானங்கி யாலன்னை நல்லுடலை—ஞானங்க
மாகச்செய் துன்பதத்தி லைக்கியமாக் கிக்கொள்வாய்
சாகத் திமூட்டுவதேன் சாற்று.

4. மாயா மயக்கமதை மாற்றருண மாமலையென
ருயார் மயக்கற்றத் தாமதமேன்—ருயாகித்
தன்னையடைந் தார் வினையின் ருக்கறுத்தாள் வாருலகி
லுன்னையலா லுண்டோ வுரை!



ஸ்ரீ அருணகிரிநாதர் ஆலயம் (திருவண்ணுமலை)

ஞான மகனின் வேண்டுகோளுக்கு ஞானத் தந்தை செவி சாய்த்தார். அன்னையின் உடல் நிலை தேறியது. மகனிடம் விடை பெற்றுக்கொண்டு ஊருக்குத் திரும்பி விட்டார் அழகம்மை.

பாசத் துடிப்புடன் மகனை நாடிப் போன தாயை அருணுசல ஞானமலை தன் வயப்படுத்திக் கொண்டு விட்டது. மகனை அழைத்துக் கொண்ட தந்தை, அன்னையையும் அழைத்துக் கொள்ளத் திட்டம் வகுத்து விட்டார். அதற்கான சூழ்நிலையும் விரைவில் உருவாகியது. அழகம்மாளின் குடும்பத்திற்குப் பெரும் ஆதரவாக இருந்த நெல்லையப் பையரும் இறைவனடி சேர்ந்தார். அதையடுத்து, நாகசுந்தரத்தின் இளம் மனைவியும் போய்ச் சேர்ந்து விட்டாள். மரணம் அடுத்து அடுத்து கொடுத்த அடி, அன்னையின் விரக்திக்கு வித்தூன்றியது. அது வைராக்கியச் செடியாக வளரத் தொடங்கியது.

வாழ்க்கையில் இனி அழகம்மாளுக்கு என்ன இருக்கிறது? இறுதி நாட்களை அருமை மகன் சேவையில் கழிக்க நினைத்தார். திருவண்ணுமலைக்குப் பயணமானுர். எச்சம்மாள் என்ற லட்சுமி அம்மாளுடன் தங்கி, விருபாட்ச குகையில் இருந்த மகனை அடிக்கடி தரிசித்து வந்தார். அன்னை மீண்டும் வந்த செய்தி பக்தர்களுக்கு அச்சத்தை அளித்தது. உறவு ஒட்டிக் கொண்டுவிடுமோ என்று அஞ்சி உத்தம குரு வேறு எங்காவது சென்று விடுவாரோ...?

சேஷய்யா என்ற பக்தர் இதைப் பற்றி அழகம்மாளிடம் மனம் விட்டுப் பேசினுர். சொந்த மகனிடமிருந்து தன்னைப் பிரிக்க நினைக்கும் விதியை நினைத்து மனம் குமுறினுர் அன்னை. அருணுசலேசன் விரைவிலேயே விதியைத் தகர்த்தெறிந்தார். இறுதியில் அன்னையின் ஆசை நிறைவேறியது. மகனிடம் போய்த் தங்கியவர், விருபாட்ச குகையிலிருந்த ஆச்ரமத்தோடு இணைந்து விட்டார்.

தாய்க்கு எல்லாக் குழந்தைகள் மீதும் அன்பும் பாசமும் இருப்பது இயற்கைதானே! தன்னந் தனியாய்த் தவித்துக் கொண்டிருந்த நாகசுந்தரத்திற்கும் ஆள்விட்டு அனுப்பித் தன்னிடம் வரவழைத்துக் கொண்டார். எந்தக் குடும்பத்தைவிட்டு வேங்கடராமன் பிரிந்து வந்தாரோ, அந்தக் குடும்பம் அவரைத் தேடி வந்து விட்டது! ஆனுல், நிலைமை முற்றிலும் தலைகீழாக மாறிவிட்ட நிலையில்தான் இந்தச் சேர்க்கை ஏற்பட்டது. எல்லாமே ஈச்வரனின் லீலைகள்தானே!

நாகசுந்தரம் அண்ணனின் பக்தர்களில் ஒருவரானுர். நாளடைவில் காஷாயம் ஏற்றுக் கொண்டு நிரஞ்சனுனந்த சுவாமிகளானுர்.

அன்னைக்கு ஆச்ரமத்தில் வேலை சரியாக இருந்தது. தன் பிள்ளைகளுக்கும், தனக்கும், அங்கு வரும் அன்பர்களுக்கும் அவர்தான் சமையல் செய்தார். ரமணாச்ரமத்தில் இன்றும் நடந்து கொண்டிருக்கும் அன்ன வேள்வி, அன்னை அழகம்மாள் எழுப்பிய அக்னியாகும்.

அன்னை வந்த சில மாதங்களுக்குள் ரமணர், மேலேயுள்ள ஸ்கந்தாச்ரமத்திற்கு இடம் மாறி விட்டார். இன்றுள்ள ரமணாச்ரமத்திற்கு அடிகோலியது ஸ்கந்தாச்ரமம்தான்.

அங்கிருந்த ஆறு ஆண்டுகளும் அன்னைக்கு ஞான பாடம் நடந்து கொண்டிருந்தது. விரக்தி ஏற்பட்ட நிலையிலும் அவருக்கு அஞ்ஞானம் முழுமையாக மறையவில்லை. பாசத்திரை, சத்திய தரிசனத்திற்குத் தடையாக நின்றது. உலகிற்கெல்லாம் ஞான குருவாக விளங்கியவரை இன்னும் 'தன் மகன்' என்றே நினைத்தார். தன்னிடம் தனி அன்போடு மகன் பழக வேண்டும் என்று எதிர்பார்த்தார்.

தன் அன்னையின் மனத்திலிருந்து 'சொந்த பந்த' எண்ணங்களை அகற்றுவதில் முனைந்திருந்தார் ரமணர். தாயிடம் அவர் நேராகப் பேசுவது கிடையாது. எச்சம்மாள் போன்றவர்களுடன் மட்டும்தான் பேசுவார். இது அன்னையை வாட்டியது. ஒரு நாள் ஆதங்கம் தாங்க முடியாமல் மகனிடம் இதைப் பற்றிக் கேட்டும் விட்டார். அதற்கு ரமணர், ''எல்லாரும் எனக்குத் தாயார்தான். நீ மட்டுமல்ல'' என்று பதில் கூறினார். அன்னையை ஆன்மிகத் துறையில் படிப்படியாக உயர்த்திக் கொண்டிருந்தார் அந்த உத்தம மைந்தன்.

இளம் வயது முதற்கொண்டே தெய்வ பக்தியில் திளைத்திருந்த அழகம்மாளுக்குச் சிறுகச் சிறுக வேதாந்த மனப்பான்மையும் ஏற்பட்டது. அதற்கேற்ப, அவரது உள்ளம் மாறியது. உடையும் மாறியது. அவரும் காஷாயம் தரித்துக் கொண்டார். அந்தக் குடும்பத்திற்கும் காவியுடைக்கும் மிக நெருங்கிய உறவு இருந்ததே!

சத்தியப் பொருளைத் தரிசித்து விட்ட ஆத்ம ஞானிகள் கருணைக் கடலாகக் காட்சி தருவார்கள். தங்களை நாடிவரும் எல்லா ஜீவன்களிடமும் வேற்றுமையின்றி மாசற்ற அன்போடு பழகுவார்கள். 'அனைவருக்கும் ஞானம் வர வேண்டும். அதனால் துயரம் தீர்ந்த பெருவாழ்வு வாழ வேண்டும்' என்ற பேரன்போடு ஆசி வழங்குவார்கள். உபதேச மொழிகள் கூறி நம்மை உயர்த்துவார்கள்; கண்ணால் பார்த்தே கரையேற்றுவார்கள்; கரத்தால் தீண்டி நற்கதி யருளுவார்கள்.

பாசத்தோடு பெற்று வளர்த்தவளின் உரிமையோடும் தம்மைத் தேடி வந்த அன்னை அழகம்மாளின் மீது ஸ்ரீ ரமணர் எல்லையற்ற

கந்தாச்ரமம்



கருணையைப் பொழிந்தார். தாயின் அஞ்ஞானத்தைக் களைவதில் தீவிரமாக ஈடுபட்டார். அருள் விழியாலேயே, மௌன மொழியாலேயே அன்னையை மேலான நிலைக்கு அழைத்துச் சென்றார்.

குமரக் கடவுளும் தந்தைக்குத்தான் ஞான உபதேசம் செய்தார். அன்னைக்கு உபதேசம் செய்யும் உரிமை தெய்வத்திற்கே இல்லாதபோது, மானிடப் பிறவியெடுத்தவர்களுக்கு அந்த உரிமை இருக்க முடியுமா? அதனால் தான் ரமணரும் தம் தாய்க்கு நேரடியாக உபதேசம் செய்யவில்லை போலும்!



அன்னையின் முக்தி

ஆச்ரமத்திற்கு வருபவர்களிடம் ரமணர் பேசுவதை அழகம்மை உன்னிப்பாகக் கவனிப்பார். சஞ்சலத்தோடும் சந்தேகங்களோடும் தம்மிடம் வருபவர்களுக்கு, உலக பந்தங்களிலிருந்து விடுபட்டு, தியானத்தாலும், தியாகத்தாலும் ஞானநிலை எய்தும் வழிமுறைகளை மகன் எடுத்துக் கூறும்போது, எல்லா அறிவுரைகளும் தனக்காகத்தான் என்று அந்தத் தாய் நினைப்பாள். உள்ளத்தில் எழும் கேள்விகளுக்கெல்லாம் உறுதியான விடை கிடைப்பதை உணர்வாள்.

தன் மகனை வீட்டுக்கு அழைத்துப் போகலாம் என்ற சுயநல எண்ணத்தோடு வந்த அழகம்மாளுக்கு, ஆச்ரமத்திலுள்ள அனைவருமே தன் பிள்ளைகள் என்ற எண்ணம் ஏற்படும்படி செய்தார் ரமணர். 'நீ மட்டும் எனக்குத் தாய் இல்லை; நான் மட்டும் உனக்கு மகன் இல்லை' என்று தாய்க்கு உணர்த்தியதன் மூலம் மாபெரும் தத்துவத்தையே விளக்கி விட்டார்.

ஞானச் செல்வனின் அமிர்த மொழிகளைக் கேட்டு, பற்றும் பாசமும் மெள்ள மெள்ள விலகி, 'நான்' 'எனது' என்ற அகங்காரம் நீங்கி, 'தாய்' 'மகன்' என்ற மாயத்திரை அகன்று, தோத்திரப் பாடல்களில் மூழ்கி, அழகம்மாள் எந்நேரமும் ஆத்ம தியானத்தில் ஈடுபட்டிருந்தார். தவச் செம்மலை ஈன்றெடுத்த தெய்வத்தாய், தன்னையும் அறியாமல் மெய்த் தவமியற்றிக் கொண்டிருந்தார்.

தன்னில் ஆழ்ந்து, தன்னலமற்ற தொண்டு புரிவதும் ஞானப் பெரு வாழ்வுக்கு ஒரு சாதனமே. எனவேதான், ஆச்ரமத்திலிருந்தவர்களுக்கும்

தரிசனத்திற்கு வருபவர்களுக்கும் உணவளிக்கும் அருந் தொண்டாற்றி வந்தார் அழகம்மை. அன்புப் பணி, அவருடைய ஆன்மிக மலர்ச்சிக்குப் பெருந் துணையாய் நின்றது.

உள்ளம் உறுதியாய் இருந்த போதிலும், மூப்பின் அயர்ச்சியும் உடலின் தளர்ச்சியும் அவரது அன்றாட அலுவல்களில் நன்றாகத் தெரியத் தொடங்கின. தென்பு குறைந்தது. அசதி மேலிட்டது. உடல் நலம் குன்றியது. தன் இறுதிக் காலம் நெருங்கி விட்டது என்பதை அன்னை ஒருவாறு உணரத் தொடங்கினார். பற்று அற்று விட்டதால் மரணத்தைக் குறித்து அவர் சிறிதும் சலனப்படவில்லை. 'நம் உடல்தான் மடிகிறது; உண்மைப் பொருளுக்கு அழிவே யில்லை' என்று உணர்ந்தவர்களிடம் காலன் தோல்வியுற்று ஓடவேண்டியவன்தானே?

அன்னை இறுதிக் காலத்தை நெருங்கிக் கொண்டிருக்கிறாள் என்பது ரமணருக்குத் தெரிந்து விட்டது. சில மாதங்களாகவே, தாய் அசதியால் சுருண்டு சுருண்டு படுப்பதையும், ஆயாசம் தாங்காமல் பெருமூச்சு விடுவதையும் அவர் கவனித்து வந்தார். அவ்வப்போது தாயின் உடல் நிலைபற்றி அன்புடன் விசாரிப்பார். ஓய்வு எடுத்துக் கொள்ளும்படி கூறுவார். அருகில் அமர்ந்து பணிவிடைகள் செய்வார். தம் உடலைப் பற்றிப் பகவான் கவலைப்படவேயில்லை. ஆனால், பிறருக்கு உடல் நலம் சரியில்லை யென்றால் அவரால் தாங்கவே முடியாது.

அழகம்மாளுக்கு மருத்துவ சிகிச்சையளிக்கப்பட்டது. அவை யெல்லாம் தாற்காலிக நிவாரணமாக இருந்ததே தவிர, பிணியைக் குணப்படுத்தியதாகத் தெரியவில்லை. அன்னையின் உடல்நிலை வரவர மோசமாகிக் கொண்டே வந்தது. தெய்வ மகனின் கவனிப்பு அதிகமாகிக் கொண்டே போயிற்று. இரவெல்லாம் கண் விழித்திருப்பார். 'ஏம்மா முனகுகிறாய்? வலிக்கிறதா? எங்கேம்மா வலிக்கிறது?' என்று பரிவோடு விசாரித்துத் தடவிக் கொடுப்பார்.

*1922*-ம் ஆண்டு, மே மாதம், *19*-ம் தேதி. ஸ்கந்தாச்ரமத்தில் எல்லோரும் அன்னையின் உடல் நிலையைப் பற்றித்தான் பேசிக் கொண்டிருந்தார்கள். 'இன்று இரவு தாண்டுவது கஷ்டம்தான்' என்று ஒருவருக்கொருவர் ரகசியமாகச் சொல்லிக் கொண்டார்கள். இனி மருந்துகளால் பயனில்லை. மனித முயற்சியும் முடிவடைந்து விட்டது. தற்போது இயற்கையின் ஆதிக்கத்திற்குட்பட்டிருந்தாள் அன்னை.

ரமண பகவான் பொறுமையே உருவாக அருகில் அமர்ந்திருந்தார். கர்மவினையில் முழு நம்பிகை யிருந்தும், பறந்து செல்லும் உயிரைப் பிடித்து வைக்க முடியாது என்று தெரிந்தும் அன்னைக்கு அருட் தொண்டு புரிந்து கொண்டிருந்தார் அவர். 'அருணாசலா, அருணாசலா' என்று வாய் முணுமுணுக்க, 'பெற்றவள் பேரமைதியுடன் மெள்ள மெள்ள அடங்குவதை அண்ணல் அருள் நோக்கோடு பார்த்துக் கொண்டிருந்தார்.

காலன் மிக நெருங்கி வந்து விட்டான்.

ஆச்ரமத்தின் மீது துயர மேகம் சூழ்ந்திருந்தது. செய்து வைத்த சமையலை அன்று ஒருவரும் சாப்பிடவில்லை. பகவான் நீராகாரம்கூட உட்கொள்ளவில்லை.

அன்னைக்கு சுவாசம் கண்டு விட்டது. அடங்கிப் போகும் பிராண சக்தி மெள்ள மெள்ள ஒடுங்கிக் கொண்டிருந்தது. இறுதி மூச்சு மார்புக் கூட்டினுள் துடித்துக் கொண்டிருந்தது.

சுற்றிலும் நின்றிருந்த சீடர்கள் ராமநாம தாரக மந்திரத்தை உரக்க ஜபித்துக் கொண்டிருந்தனர். ஓரிருவர் வேதம் ஓதிக் கொண்டிருந்தனர். தேவார திருப்புகழ் பஜனை ஒருபுறம் ஒலித்தது. தாயுமானவர், பட்டினத்தார் பாடல்களை அன்பர் ஒருவர் ஒரு மூலையில் அமர்ந்து பாடிக் கொண்டிருந்தார்.

அருணுசலத்திற்குப் பின்னுல் அருணனும் மறைந்து விட்டான்.

அருணுசல ஜோதியோடு அழகம்மாளின் ஜீவன் கலந்து கொண்டிருந்தது.

அன்னையின் புனித ஜீவனை முக்திபுரிக்கு அழைத்துச் சென்று கொண்டிருந்தார் ரமணர். தெய்வங்களும், தேவர்களும் ஆசி வழங்க அங்கு அருவமாக எழுந்தருளி யிருந்தார்கள்.

மணி எட்டு அடிக்க ஐந்து நிமிடங்கள்.

பகவானின் வலக்கரம் அன்னையின் இதயக்கமலத்தில் இருந்தது. இடக் கரம் நெற்றியில் பதிந்திருந்தது. திருக்கரங்களிலிருந்து அருட்சக்தி பாய, அன்னைக்கு 'ஹஸ்த தீட்சை' அளித்துக் கொண்டிருந்தார் அருணை வள்ளல். ஜீவாத்மாவை பரமாத்மாவுடன் இணைத்துக் கொண்டிருந்தார். உயிரீந்தவள் உயர் நிலையடைய உதவிக் கொண்டிருந்தார். மாமுனிவருக்குக்கூட தாயை மிஞ்சிய தெய்வமில்லை என்று உலகிற்கு உணர்த்திக் கொண்டிருந்தார் அந்த உத்தம மைந்தன்.

மணி எட்டு. ஜோதியோடு ஜீவன் கலந்து, உள்ளுக்குள்ளே ஒடுங்கி விட்டது.

அன்னை அழகம்மாள் புனிதனைப் பெற்றதனுல் புண்ணியவதியானுள். இறுதிக் காலத்தில், ஜீவன் முக்தரின் அருட்கரம் தீண்டப்பட்டதால், புண்ணிய லோகம் பெற்றுள். மாதவத்தின் பயனுய் மகனையே குருவாகப் பெற்ற அந்த மாதரசி, மரணத்தை வென்று, மாத்ருபூதேச்வரர் ஆனுர்.

அன்னை அடங்கிய பிறகுதான் அவ்விடத்தை விட்டு எழுந்தார் பகவான். மரணத்தின் உண்மை நிலையை உணர்ந்திருந்த மகானுக்கு மன சஞ்சலம் இருக்கக் காரணம் இல்லை. ஒரு தெய்வப் பணியை வெற்றிகரமாக முடித்துவிட்ட நிம்மதியை அவர் திருமுகத்தில் காண முடிந்தது.

பின்னர், எல்லோரையும் அழைத்து, ''வாருங்கள், சாப்பிடுவோம். அழுவதற்கோ துக்கம் கொண்டாடுவதற்கோ ஒன்றுமில்லை. நமக்குத் தீட்டும் கிடையாது'' என்று கூறிய போது, அவர் எந்த நிலையிலிருந்து அப்படிப் பேசுகிறுர் என்று புரியாமல் சிலர் திகைத்துப் போனுர்கள்.

முதலிலேயே தகவல் போய்ச் சேர்ந்து விட்டிருந்ததால் ஊரிலிருந்து உறவினர்கள் எல்லோரும் அங்கு வந்து கூடி யிருந்தார்கள். சீடர்கள் அன்னையின் திருமேனியைச் சுமந்துகொண்டு மலையிலிருந்து இறங்கி, தெற்கில், பாலி தீர்த்தத்தின் அருகில் கொண்டு வந்து வைத்தார்கள். துறவியாக வாழ்ந்த அன்னையின் உடலுக்கு எரியூட்டாமல், அடக்கம் செய்வதுதான் முறை என்று மகரிஷி கொண்டிருந்த கருத்தை அறிந்தவர்கள் அவ்வாறே செய்யத் தீர்மானித்தார்கள்.

சமாதிக் குழியில் சடலம் இறக்கப்பட்டு, அதில் விபூதி, கற்பூரம், உப்பு, சாம்பிராணி எல்லாம் நிறைக்கப்பட்டது. ரமணர், தாமும் ஒரு பிடி மண்ணை எடுத்து அதில் போட்டார். பின்னர், பகவானின் முன்னிலையில், சாத்திர முறைப்படி அன்னை அடக்கம் செய்யப்பட்டார். அதன் மீது ஒரு கட்டடம் கட்டப்பட்டு, சிவலிங்கம் ஒன்றும் பிரதிஷ்டை செய்யப்பட்டது. அதைக் கருவறையாகக் கொண்டு, பின்னர் மாத்ருபூதேச்வரர் ஆலயம் எழும்பியது. நிரஞ்சனனந்த சுவாமிகளின் இடையருத நன்முயற்சியினுலும், ரமண பகவானின் நல்லாசியாலும் அக் கோயில் சிறுகச் சிறுக வளர்ந்தது.

அன்னை அடக்கமான ஆறு மாதங்களுக்கெல்லாம், ரமணரின் மலை வாசமும் முடிவுற்றது. அவ்வாண்டு இறுதியில், ஸ்கந்தாச்ரமத்திலிருந்து புறப்பட்டு, அன்னையின் ஆலயத்தின் அருகிலேயே வந்து தங்கி விட்டார் அவர்.

அருணசலத்தின் இதயக் குகைகளில் வாசம் செய்த நாட்களில்தான், 'பிராம்மணசுவாமி' என்று அழைக்கப்பட்டு வந்த வேங்கடராமன், 'பகவான்' ஆனர். ரமணர் என்றும், ரமண மகரிஷி என்றும் உலகிற்கு அறிமுகமானர். அத் திருநாமங்களை அவருக்குச் சூட்டியவர் காவ்யகண்ட கணபதி சாஸ்திரிகள் என்ற முனிவர். வேத உபநிடதங்களிலும், சகல சாஸ்திரங்களிலும், காவியங்களிலும், இதிகாச புராணங்களிலும் ஈடு இணையற்ற பண்டிதராக விளங்கிய அவர், பகவானுடன் தொடர்பு கொண்டு உன்னத நிலையடைந்தது மறக்க முடியாத வரலாறு ஆகும்.



ஸ்ரீ தியாகராஜசுவாமி ஆலயம் (திருவொற்றியூர்)

சுமார் இருநூறு வருடங்களுக்கு முன், கும்பகோணத்திற்கு அருகிலுள்ள வலங்கைமானிலிருந்து கௌண்டின்ய கோத்திரத்தைச் சேர்ந்த ஒரு குடும்பம் ஆந்திராவில் குடியேறியது. அக் குடும்பத்திற்கு 'அய்யல ஸோமயாஜி' என்ற குலப் பெயர் வழங்கப்பட்டது.

அப்பரம்பரையைச் சேர்ந்தவர்களுக்கு ஸ்ரீவித்யா உபாசனை உண்டு. அவர்கள் ஜோதிஷ சாஸ்திரத்திலும், தந்த்ர சாஸ்திரத்திலும், ஆயுர் வேதத்திலும் தேர்ச்சி பெற்றவர்கள். வேத சாஸ்திரங்களிலும் கரை கண்டவர்கள்.

அந்த வம்சத்தில் வந்தவர் நரசிம்ம சாஸ்திரியார். அவர் விசாகப் பட்டணத்திற்கு அருகில், பொப்பிளி சமஸ்தானத்தில் 'கலவராயி' என்ற சிற்றூரில் வசித்து வந்தார். ஒரு சமயம் அவர் தமது மனைவியுடனும், மூத்த மகனுடனும் காசிக்குச் சென்றார். அங்குள்ள ஒரு விநாயகர் கோயிலுக்குத் தரிசனத்திற்காக நரசிம்ம சாஸ்திரியார் சென்றிருந்தார். அப்போது மூலஸ்தானத்திலிருந்து ஒரு குழந்தை மெள்ள இவரை நோக்கித் தவழ்ந்து வந்தது. அதை அப்படியே வாரி

அணைத்துக் கொள்வதற்காகக் குனிந்தார் அவர். ஆனல், அக் குழந்தை அவர் கண்களிலிருந்து மறைந்து விட்டது. அந்த நிகழ்ச்சி சாஸ்திரியாரை உலுக்கி விட்டது.

ஊருக்குத் திரும்பியதும் சாஸ்திரியாரின் மனைவி கருவுற்ருள். பத்து மாதங்கள் கழித்து ஓர் ஆண் மகவை ஈன்ருள் அந்தப் பெண்மணி. காசியில் நடந்த அதிசயத்தை மறக்க முடியாத சாஸ்திரியார், அக்குழந்தைக்குக் கணபதி என்று பெயரிட்டார். ஸ்ரீ மகா கணபதியின் அம்சமாகவே அந்தக் குழந்தை பிறந்திருப்பதாக அவர் நம்பினர்.

ஆறு வயது வரையில் அந்தப் பாலகன் சரியாகவே பேசவில்லை. மழலைச் சொல்லில் உளறிக் கொட்டிக் கொண்டிருந்தான். எப்போதும் ஏதாவது ஒரு நோய் அவனை வாட்டிக் கொண்டிருந்தது. இடையிடையே வலிப்பு வந்து கஷ்டப்படுவான். அதைக் கண்டு பெற்ருேர் பெரும் வேதனைக்குள்ளானர்கள்.

எந்த மருந்தினலும் குணமாகாத நோய்க்கு அசுர வைத்தியம் செய்தார்கள். அவன் உடம்பில் சூடு போட்டார்கள். மறுநாளிலிருந்து அவன் உடல்நலம் தேறியது. தங்கு தடையின்றிப் பேசும் திறனும் பெற்ருன்; பொழிந்து தள்ளினன்.

எட்டாவது வயதில் சமஸ்கிருதத்தில் நல்ல தேர்ச்சி பெற்ருன். இலக்கண நூல்களைக் கற்றுத் தேர்ந்தான். பத்தாவது வயதிலேயே குலத்திற்குரிய சாஸ்திரங்களில் வல்லவனுனன். பஞ்சாங்கம் கணிக்கும் அளவுக்கு ஜோதிஷத்திலும் கணிதத்திலும் திறமை பெற்ருன்.

பின்னர், காவியங்களிலும் இலக்கிய நூல்களிலும் கணபதியின் மனம் நாட்டம் கொண்டது. காளிதாசனின் படைப்புக்களில் உள்ளத்தைப் பறிகொடுத்தான். கவியின் மேக சந்தேசத்தைப் போலவே 'பிருஞ்க சந்தேகம்' என்ற நூலை இரண்டு காண்டங்களாகப் பாடி முடித்தான்.

பதினன்காவது வயதில், வியாகரணத்திலும் அலங்கார சாஸ்திரங்களிலும் பயிற்சி பெற்றுவிட்டு, ராமாயணம், மகாபாரதம் முதலிய புராணங்களையும் இதிகாசங்களையும் ஆராய்ச்சி நோக்கோடு பலமுறை படித்து முடித்தான்.

பதினெட்டாவது வயதில் விசாலாட்சி என்ற உத்தமியைக் கணபதி கரம் பற்றினர். அவள் பஞ்சதசி மகாவித்தையை அறிந்தவள். பராசக்தியின் அருள் பரிபூரணமாக நிரம்பப் பெற்ற நல்லாள். கணவனின் அருள் வாழ்வுக்கு உற்ற துணையாக நின்ற தூயவள்.

இள வயதிலேயே தந்தையிடம் மந்திரோபதேசம் பெற்ருர் கணபதி. அப்போதிருந்தே ஜபதபங்களில் அவருக்கு ஈடுபாடு உண்டு. மந்திரஜபத்தினல் பல ஸித்திகளைப் பெறலாம் என்ற நம்பிக்கை அவருக்கு இருந்தது. தவசக்தியால் துருவனைப் போலவும் விசுவாமித்திரரைப் போலவும் உன்னத நிலையை அடைய வேண்டும் என்ற வேட்கை அவருள் கொழுந்து விட்டு எரிந்தது. அந்த எண்ணத்துடன் ஒருநாள் வீட்டை விட்டே வெளியேறி விட்டார்.

கோதாவரி, கங்கை, யமுனை முதலிய புண்ணிய நதிகளின் கரையோரங்களிலுள்ள ஆலயங்களில் அமர்ந்து, சிவபஞ்சாட்சரி மந்திர ஜபம் செய்தார். அதன் பலனாக, பல சாஸ்திரங்களில் இவருக்குப் பிரமிக்கத் தக்க புலமை ஏற்பட்டது. பல மந்திரங்களின் பொருள் விளங்கியது.

புவனேச்வரத்தில் அவர் தங்கியிருந்த போது, ஒருநாள் கனவில் ஒரு பெண்மணி வந்து இவர் நாவில் தேன் துளிகளைச் சொட்ட விட்டுச் சென்றாள். கலைவாணி கருணை மழை பொழிந்தாள். கவிதை வெள்ளம் கரை புரண்டோடியது. கணபதி, ஆசு கவியானார்.

சமஸ்கிருத புலமையும் சாஸ்திர ஞானமும் கவிதைத் திறனும் உடைய கணபதி, பண்டிதர்களைப் போற்றி வணங்கும் காசித்தலம் சென்றார். அங்கிருந்த சிவகுமார பண்டிதர் இந்த 'சிவகுமார'ருக்குப் பழக்கமானார். அப்போது வங்காளத்திலுள்ள நவத்வீபத்தில் நடைபெற விருந்த வித்வத் சபைக்கு கணபதியை அனுப்புவது என்று முடிவு செய்த சிவகுமார பண்டிதர், அந்தச் சபையின் காரியதரிசிக்கு சிபாரிசுக் கடிதம் கொடுத்தனுப்பினார். அதை எடுத்துக் கொண்டு வங்காளம் சென்றார் சாஸ்திரி. அப்போது அவருக்கு வயது இருபத்தொன்று.

வயதில் சிறியவராகவும் உடலமைப்பில் மெலிந்தவராகவும் இருந்த கணபதி, சபையினுள் நுழையும்போதே தன்னை மிஞ்ச இங்கு ஒருவரும் இல்லை யென்ற தன்னம்பிக்கையுடன் கம்பீரமாக நடந்து சென்றார். அங்கு அனைவரையும் பரீட்சை செய்ய வீற்றிருந்த ஆசு கவியான அம்பிகா தத்தரைச் சுட்டிக் காட்டி, 'இவர் யார்?' என்று வினவினார். அதைச் செவி மடுத்த அந்த வயதான பண்டிதர், ''நான் கௌடன், சீக்கிரமாகக் கவிதை புனைவதில் சூரியனைப் போன்று பிரகாசிப்பவன். அம்பிகாதத்தன் என்று பெயர்'' என்று ஓர் அழகான அனுஷ்டுப் விருத்தத்தில் கூறினார்.

அதற்கு ஆரியா விருத்தத்தில் 'பட்'டென்று பதில் கூறினார் கணபதி. ''நான் கணபதி. தெற்கு தேசத்திலிருந்து வந்திருக்கிறேன்.'' - அதாவது 'நீ கேவலம் அம்பிகையின் தத்துப் பிள்ளைதானே! நான் அம்பிகையின் சொந்தப் பிள்ளையாயிற்றே' என்ற பொருள் அவர் வாசகத்தில் தொக்கி நின்றது. பிரமித்துப் போனார் அம்பிகாதத்தர்.

பின்னர் சில சுலோகங்களின் இரண்டாவது அடியைக் கூறி அதற்கு முதல் அடியைக் கற்பனை செய்யும்படி கணபதியைப் பார்த்துக் கூறினார் அம்பிகாதத்தர். உதாரணமாக—

**அம்பிகா:**—எறும்புகள் சந்திர மண்டலத்திற்குச் சென்றன.

**கணபதி:**—தட்சனின் யாகத்திற்கு பார்வதிதேவி சென்ற சமயத்தில் பிரிவாற்றாமையில் சிவபெருமான் துயரத்துடன் படுத்துக் கொண்டிருந்த போது, அமிருதத்தை சாப்பிடுவதற்காக எறும்புகள் அவர் முடியிலிருந்த சந்திரனிடம் சென்றன.

பின்னர் காவிய பிரகாசத்திலிருந்து ஒரு சுலோகத்தையும், ரகுவம்சத்திலிருந்து ஒரு சுலோகத்தையும் கூறி, பொருள் கேட்டார் அம்பிகா தத்தர். அவற்றுக்குப் பிழையின்றி விளக்கம் கூறினார் கணபதி சாஸ்திரி.

கணபதி சாஸ்திரியின் எல்லையற்ற புலமையைக் கண்டு அம்பிகா தத்தர் அதிசயித்த போதிலும், அவரைத் திணற அடிப்பதற்காக அவரிடம் ஓர் இலக்கணப் பிழையைக் கண்டு பிடித்தார். 'சர்வாஸாம்' என்று பெண்பாலில் உபயோகிக்க வேண்டியதற்கு மாருக 'சர்வேஷாம்' என்று ஆண்பாலில் பயன்படுத்தி விட்டார். அதைச் சுட்டிக்காட்டி ''உனக்கு அம்பிகையின் அருள் இருக்கிறது என்று கூறுகிருயே, இந்தப் பிழை எப்படி வந்தது?'' என்று கேட்டார் அம்பிகாதத்தர். அதற்கு நேரடியாகப் பதில் கூருமல், அம்பிகாதத்தரின் கேள்வியிலேயே ஒரு தவற்றைக் கண்டு பிடித்து மடக்கினுர் கணபதி சாஸ்திரி: ''தாங்கள் மகா பண்டிதர் ஆயிற்றே. 'ஸார:' என்று இருக்க வேண்டிய ஆண்பாலுக்குப் பதில் 'ஸாரா' என்ற பெண்பாலை எதுகைமோனைக்காகப் பயன்படுத்தி விட்டீர்களே. உங்கள் வாக்கில் இந்தப் பிழை எப்படி வந்தது? தங்களுக்கு ஈச்வரனின் அருள் இல்லை போலும்'' என்று ஏளனம் செய்தார்.

அம்பிகாதத்தருக்குக் கோபம் வந்துவிட்டது. ''யானையைப் போல் மதம் பிடித்து அலையாதே. உன் மண்டையைப் பிளந்து மாமிசத்தை உண்ணக் காத்திருக்கும் சிங்கம் நான்'' என்று கர்ஜித்தார். அதைக் கண்டு கணபதி சாஸ்திரி பயந்து விடவில்லை. அம்பிகாதத்தரின் அந்த சுலோகத்திலும் வியாகரணத்தின் அடிப்படையில் ஒரு பிழையைச் சுட்டிக்காட்டினுர்.

இவ்வாறு இவ்விரு கவிகளுக்கிடையே வாக்குவாதம் வலுக்க ஆரம்பிக்கவே, சபையின் காரியதரிசி குறுக்கிட்டு, நடுவராக நின்று இருவருக்குமிடையே சமாதானம் செய்து வைத்தார்.

இறுதியாக அம்பிகாதத்தர், கணபதி சாஸ்திரியை அவமானப்படுத்த வேண்டும் என்ற எண்ணத்துடன், ''தெற்குத் தேசத்தவர்கள் கள்ளைக் குடித்து விட்டுத் திண்ணையில் உருண்டு கொண்டிருப்பார்கள்'' என்று ஒரு சுலோகமாகப் பாடினுர். அதைப் பூர்த்தி பண்ணுவது போல் கணபதி சாஸ்திரி, ''கௌடர்கள் உயிர் போனுலும், செல்வத்தை இழந்தாலும் மீன் தின்னும் பழக்கத்தை மட்டும் ஒருபோதும் விடமாட்டார்கள்'' என்று ஓர் அடியை எடுத்துச் சொன்னுர்.

அம்பிகாதத்தர் திணறிப் போய் விட்டார். பண்டிதர்கள் நிறைந்த சபை கைகொட்டி ஆரவாரம் செய்தது.

வாக்குவாதத்தின் போது தாம் அவமரியாதையாக நடந்து கொண்டதற்குத் தலைவரிடம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டார் கணபதி சாஸ்திரி. ''கடைசி சுலோகத்தில் நீ பயன்படுத்திய 'அமீ ந மீனம்' என்ற இரண்டு 'மீ'க்களும் உன் குறைகளை யெல்லாம் மறைத்து விட்டன'' என்று கூறிய அம்பிகாதத்தர், மகிழ்ச்சியில் திளைத்துப் போய் கணபதி சாஸ்திரியைக் கட்டித் தழுவிக் கொண்டு, அவருக்கு 'காவிய கண்டர்' என்ற விருதைக் கொடுத்து, உளமாரப் பாராட்டி அனுப்பி வைத்தார்.

காவிய கண்ட கணபதி சாஸ்திரிகள், பின்னர் தமிழ் நாட்டை நோக்கிப் பயணமானுர். ஸ்ரீ காமாட்சியின் அருளாட்சி நடக்கும்

காஞ்சிக்கு வந்தார். அங்கிருந்து, அன்னே தவமிருந்து ஐயனின் இடப் பாகம் பெற்ற அருணுசலத்திற்குச் சென்ருர்.

1903-ம் வருடம் அருணேயின் கருணே நிழலில் வந்து தங்கிய கணபதி சாஸ்திரிகள், புத்துணர்ச்சி பெற்ருர். அருணேசனின் தரிசனம் அவரைப் பரவசப்படுத்தியது. அதனுல் அவருக்கு ரமணரின் தரிசனம் கிடைத்தது.

மலே மீதுள்ள விருபாட்ச குகையில் மெய்த்தவம், இயற்றிக் கொண் டிருந்த பிராம்மண சுவாமியைப் பற்றி யாரோ ஒருவர் அவரிடம் கூற, அம்மகானேத் தேடிச் சென்ருர் கணபதி சாஸ்திரிகள். அங்கு தட்சிணு மூர்த்தியாக அமர்ந்திருந்த குருநாதரைக் கண்டதும் விநாயகமூர்த்திக்கு உரிய வணக்கத்தைக் கூறினுர்:

சுக்லாம் பரதரம் விஷ்ணும் சசிவர்ணம் சதுர்புஜம்
ப்ரஸன்ன வதநம் த்யாயேத் சர்வவிக்நோப ஸாந்தயே!

இந்த மந்திரம் பிராம்மண சுவாமிகளுக்கும் பொருத்தமாக அமைந்துள்ளதை விளக்கினுர் கணபதி சாஸ்திரிகள்.

சுவாமிகளும் வெள்ளே ஆடையைக் கோவணமாகக் கட்டி யிருக்கிருர்; பிரும்ம சொரூபமாக இருப்பதால் எங்கும் வியாபித் திருக்கிருர். நிலவைப் போன்ற தேக காந்தியுடன் சோபிக்கிருர். மனம், புத்தி, சித்தம், அகங்காரம் நான்கையும் வசப்படுத்தி அடக்கி யிருக்கிருர்; இன்முகத்துடன் கூடியவராயிருக்கிருர்; ஆத்ம தரிசனத்துக்கு இடையூராக இருக்கும் நம் சந்தேகங்களேக் களேகிருர். தம்மை நாடி வருபவர்களுக்கு மனச் சாந்தியளிக்கிருர்.

இதை யெல்லாம் மௌனமாகக் கேட்டுக் கொண்டிருந்தார் ரமணர். அருள் வெள்ளம் பொங்கிப் பாய்ந்தது. கணபதி சாஸ்திரிகளின் வாக்கில் கலேவாணி நர்த்தனம் புரியத் தொடங்கினுள். அடுத்த கார்த்திகை தீபப் பெருவிழாவின் போது காவிய கண்டர், அருணுசலேச்வரரின் மீது பக்திப் பரவசத்தில், பல கவிதைகள் இயற்றினுர்.

அருணேயில் ஓராண்டு காலம் வசித்த பிறகு வேலூர் கல்லூரியில் தெலுங்கு ஆசிரியராகப் பணி புரியச் சென்ருர் கணபதி சாஸ்திரிகள்.

ஆசிரியராகப் பணி புரிந்து கொண்டிருந்த நேரத்திலும் தல யாத்திரை போவதை அவர் விட்டு விடவில்லே. பல ஆலயங்களுக்குச் சென்று, தியானத்தில் அமர்ந்தார். சக்தி உபாசனே அவருக்கு ஆத்ம சக்தியைக் கொடுத்தது. ஆனுல், எதிர்பார்த்தது போல் அவருக்குத் தெய்வ தரிசனம் கிட்டவில்லே. தாம் புரியும் தவத்தில் ஏதோ குறை இருக்க வேண்டும் என்று மனச்சஞ்சலமுற்ருர். பக்தன் துயருற்ருல் பரமன் பார்த்துக் கொண்டிருப்பானு? அருணுசலேசனிடமிருந்து அவருக்கு அழைப்பு வந்தது. அடுத்தகணம் வேலேயை ராஜினுமா செய்து விட்டு மீண்டும் அருணுசலத்திற்கே வந்து சேர்ந்தார்.

அருணுசலத்தில், அருணுசலேசனே மனத்தில் இருத்தி, சிவ பஞ்சாட்சரி மந்திரத்தை ஜபித்துக் கொண்டு கடுந் தவம் மேற் கொண்டார் காவிய கண்ட கணபதி முனிவர்.

அன்று கார்த்திகை மாதம் சோம வார புண்ணிய நாள். தவத்தில் ஆழ்ந்திருந்த கணபதி முனிவரின் இதயக் குகையில், 'அருணசலா அருணசலா' என்ற தெய்வ ஒலி எழும்பி, 'புறப்படு புறப்படு' என்று அவருக்கு ஆணையிட்டது. சட்டென்று எழுந்தார். அருணசல மலையை நோக்கி ஓடினர். கரடு முரடான பாதையில் வேகமாக ஏறினர். விரூபாட்ச தேவர் குகையில் கோவணாண்டியாக, தனிமையில் வீற்றிருந்த பிராம்மண சுவாமியின் மலரடிகளில் சரணகதியாக விழுந்து கும்பிட்டார்.

எப்போதும் பக்தர்களால் சூழப்பட்டிருக்கும் சுவாமிகள் அன்று தம்மை எப்படியோ தனியனாக்கிக் கொண்டிருந்தார். தவயோகத்தைப் பற்றி கணபதி சாஸ்திரிகளுக்குத் தனிமையில் உபதேசம் செய்தாக வேண்டுமே! தூய பக்தனின் ஏக்கத்தைப் போக்க கடவுள் ஓடோடி வருவார். அன்புச் சீடனின் துயரைத் துடைக்க குரு, கருணையோடு காத்திருப்பார். இது சத்தியம்!

முதல் தரிசனத்திலேயே ஞான குருவை விநாயகனோடு ஒப்பிட்டு மகிழ்ந்த கணபதி சாஸ்திரிகளின் உள்ளம் தற்போது பாகாய் உருகியது. கண்ணீர் பெருகியது. தமது இடக் கையால் ரமணரின் இடப் பாதத்தையும், வலக் கையால் அவரது வலப் பாதத்தையும் பற்றிக் கொண்டு, சாஸ்திர முறைப்படி சாஷ்டாங்க நமஸ்காரம் செய்தார். பின்னர் மெள்ள எழுந்தார். கைகளைக் கட்டிக் கொண்டு, ஏதோ பேச முயன்றார். அழுகைதான் வந்தது. பேச்சு வரவில்லை.

அன்புக் கனல் தெறிக்க சாஸ்திரிகளை ஒருகணம் நோக்கினர் ரமண சுவாமிகள். அருளொளி இவரை ஆட்கொண்டது. ஆனந்த சிலிர்ப்பு ஏற்பட்டது.

நாத் தழுதழுக்கப் பேசினர் கணபதி சாஸ்திரிகள்:

''சுவாமி, நான் வேத வேதாந்தங்களையும் சகல சாஸ்திரங்களையும் கசடறக் கற்றிருக்கிறேன். இதிகாச புராணங்களைக் கரைத்துக் குடித்திருக்கிறேன். நான் போகாத ஆலயம் இல்லை; தரிசிக்காத தெய்வம் இல்லை. அந்த சந்நிதிகளிலெல்லாம் அமர்ந்து கோடிக் கணக்கில் மந்திர ஜபம் செய்திருக்கிறேன். சிரத்தையுடன் தவத்தில் ஆழ்ந்திருக்கிறேன். இத்தனை இருந்தும் என் மனத்தில் சாந்தி ஏற்படவில்லை. தவத்தின் பலனை நான் அனுபவிக்க முடியவில்லை. உண்மையான தபஸ் என்ன வென்றே எனக்குப் புரியவில்லை. தாங்கள், தவமலையாக, அருணசல மாகவே எனக்குக் காட்சி தருகிறீர்கள். தபஸ் என்றால் என்ன வென்று சுவாமிகள் இந்தச் சிறியேனுக்குச் சொல்லி அருள வேண்டும்.''

ஞான மலையின் எதிரில் சிறு அறிவுக் குன்றாக, உடல் குன்றிப் போய் நின்றிருந்தார் கணபதி சாஸ்திரிகள்.

குருநாதனின் கமலக் கண்கள் கருணையைப் பொழிந்தன.

பின்னர், மௌனத்தைக் கலைத்துத் தேனினும் இனிய குரலில் குழந்தையைப் போல் பேசினர் பகவான்.

பகவத் கிதையில், ஸ்ரீ கிருஷ்ண பகவான், குழப்பமுற்றிருந்த அர்ஜுனனுக்கு வேத சாரத்தையும், வேதாந்த தத்துவத்தையும் பிழிந்து ஞான ரச மாகத் தந்தருளினர். அது உலக மக்களுக்குச் சாந்தி தரும் அரு மருந்தாக அமைந்தது.

ஸ்ரீ ரமண பகவான், கலக்கமுற்றிருந்த காவிய கண்ட கணபதி முனிவருக்கு, தவயோகத்தின் உண்மைப் பொருள் பற்றி நல்லுபதேசம் செய்தார். அதில் வேதசாரம் அடங்கி யிருந்தது. உபநிடதங்களின் தத்துவம் மிளிர்ந்தது. அருணசலத்தின் ஞான ஒளி பளிச்சிட்டது. உலக மாந்தர் ஆன்ம விடுதலே பெறும் அருமருந்தாக அது அமைந்தது.



ஸ்ரீ காவியகண்ட கணபதி முனிவர்

பகவான் சொன்னர்:

'நான்' 'நான்' என்பது எங்கிருந்து புறப்படுகிறது என்பதை உன்னிப்பாகக் கவனித்தால், அந்த இடத்தில் நம் மனம் லயித்து விடும். அதுதான் தபஸ்.

ஒரு மந்திரத்தை உச்சரிக்கும்போது, அந்த மந்திரத்தின் ஒலி எங்கிருந்து புறப்படுகிறது என்பதை உன்னிப்பாகக் கவனித்தால், அங்கே நம் மனம் லயித்துவிடும். அதுதான் தபஸ்.

இரண்டே வரிகளில், இதுவரை இத்தனே தெளிவாக யாருமே சொல்லாத வகையில் தபசின் பொருளேயும் பயனேயும் ஞான குரு எடுத்துரைத்து விட்டார். அதைக் கேட்ட சீடர் மெய்ஞ்ஞானம் பெற்று விட்டார். காதால் கேட்ட சொற்களே விட, அச்சொற்களில் அடங்கி யிருந்த சத்தியப் பொருள் அவர் உள்ளத்தை நிறைத்தது. ரமண பகவானின் அருள் நோக்கும், ஆன்ம ஒளியும் சீடருக்கு அப் பொன்மொழிகளேப் புரிய வைத்தது, அவர் மனத்தில் பசுமரத்து ஆணிபோல் பதிய வைத்தன.

உபதேசம் பெற்ற உத்தமச் சீடர், ஞான குருவின் சந்நிதியிலேயே வெகு நேரம் அமர்ந்திருந்தார். வாய் திறந்து பேசவோ, வேறெதுவும் கேட்கவோ அவருக்குத் தோன்றவில்லை. அவரது சந்தேகங்களெல்லாம் அறவே மறைந்து, உள்ளத்தை அரித்த சஞ்சலமெல்லாம் ஒழிந்து, பேரமைதியும் பேரானந்தமும் அவரிடம் குடிகொண்டன.

அருகில் இருந்த பழனிச்சாமியிடம் பிராம்மண சுவாமியின் திரு நாமம் என்னவென்று கேட்டார் கணபதி முனிவர். 'வேங்கடராமன்' என்று அவர் ரகசியமாகச் சொல்ல, அக்கணமே கணபதி முனிவர், 'ரமணன்' என்ற புதுப் பெயரைச் சூட்டினார். ஆனந்த மயமாகவே ஆகி விட்டவருக்கு எத்தனை பொருத்தமான பெயர் அமைந்து விட்டது! 'ரமண மகரிஷி' யென்றும், 'ரமண பகவான்' என்றும் அழைத்து, அந்தத் திருநாமமே நிலைக்கும்படி செய்தவர் கணபதி முனிவரே.

பகவானிடம் தாம் பெற்ற உபதேசத்தைத் தமது சீடர்களுக்கும் உறவினருக்கும் தெரியப்படுத்தினார் கணபதி முனிவர். அவர்களையெல் லாம் மகரிஷியிடம் ஈடுபாடு கொள்ளும்படி செய்தார்.

காவிய கண்ட கணபதி முனிவர், சக்தி உபாசகர். சக்தியின் ஆவேசம் அவரை உள்ளிருந்து இயக்க, அவர் கவிதை மாரி பொழிந்தார். அந்த பராசக்தியின் அருளாலேயே தமக்கு ரமணரின் தரிசனமும், தபசை பற்றிய அரிய விளக்கமும் கிடைத்ததாக அவர் நம்பினார். உலகநாயகியின் மகிமையைப் போற்றி வணங்க வேண்டும் என்ற ஆர்வம் அவருள் பொங்கியது. மூன்று வாரங்களில் உமாதேவியைப் பற்றி ஆயிரம் சுலோ கங்கள் இயற்றுவது என்று முடிவு செய்தார். கவிதை ஊற்றுப் பெருக் கெடுத்தது. அருட்பாக்கள் பிறந்தன. சீடர்கள் அப்படியே எழுதிக் கொண்டார்கள்.

பத்தொன்பது நாட்கள் பக்தி மழை பொழிந்தது. எண்ணூறு சுலோகங்கள் உருவாகிவிட்டன. மறுநாளுக்குள் ஆயிரம் முடித்தாக வேண்டும். ஒரு நாளுக்குள் இருநூறு சுலோகங்கள் எழுதியாக வேண்டும்.

அப்போது மாரத்து குகையில் பகவான் அமர்ந்திருந்தார். அவர் சந்நிதியில் பாக்கியுள்ள சுலோகங்களை இயற்றலாம் என்ற எண்ணத்துடன் அங்கு சென்றார் கணபதி முனிவர்.

கண்களை மூடி, நிஷ்டையில் ஆழ்ந்திருக்கும் பகவானின் எதிரில் அமர்ந்து கொண்டார் கணபதி முனிவர். நான்கு சீடர்கள் மாறிமாறி எழுதிக் கொள்ள, சுலோகங்களை வேகமாகக் கூறினார். அவரா கூறினார்? எந்தச் சக்தியாலோ உந்தப்பட்டு, கவிதை ஊற்று வெள்ளம் போலப் பாய்ந்து வந்தது. இரவு எட்டு மணிக்குத் தொடங்கி, பன்னிரண்டு மணிக் குள் இருநூறு சுலோகங்களை இயற்றி விட்டார் அவர். கடைசி சுலோகம் முடிந்ததும், உவகை மேலிட, நிறைவு பெற்ற மனத்துடன், ரமண மகரிஷி யின் பாதங்களில் விழுந்து எழுந்தார். பகவான் லேசாகக் கண்களைத் திறந்து, ''என்ன சாஸ்திரிகளே, முடிந்து விட்டதா? நான் சொன்னதை யெல்லாம் எழுதி விட்டீரா?'' என்று திருவாய் மலர்ந்தருளினார்.

குருநாதரின் கருணையை எண்ணி எண்ணிப் பரவசமானுர் கணபதி முனிவர்.

அந்த ஆயிரம் சுலோகங்களும் 'உமாசகஸ்ரம்' என்ற பெயரில் ஒரு தெய்விக நூலாக உருவெடுத்தது. அதற்கு, கணபதி முனிவரின் மாணவ மாமணியான கபாலி சாஸ்திரிகள், சமஸ்கிருதத்திலேயே மிக அருமை யான விளக்கவுரை ஒன்று எழுதி யிருக்கிருர்.

'உமாசகஸ்ரம்' உருவான மறு வருடம்- அதாவது 1908-ம் ஆண்டு, முதல் மூன்று மாதங்கள் கணபதி முனிவர், ரமண மகரிஷியுடன் பச்சை யம்மன் கோயிலில் தங்கி யிருந்தார். நேரம் கிடைக்கும் போதெல்லாம் சுலோகங்களை அங்குமிங்கும் சற்றுத் திருத்தி யமைத்து, 'உமாசகஸ்ர'த் தைப் பூர்த்தி செய்ததோடு பகவானின் உபதேசத்திற்கிணங்க கடும் தவத்திலும் ஈடுபட்டிருந்தார்.

பச்சையம்மன் கோயிலில் பகவான் தங்கி யிருந்தபோது ஓர் அதிசயம் நடந்தது. ஒருநாள் பகவானுக்கு எதிரில் அமர்ந்து தியானம் செய்து கொண்டிருந்தார் கணபதி முனிவர். அப்போது வான மண்டலத்திலிருந்து புறப்பட்ட நட்சத்திரம் ஒன்று பகவானின் நெற்றியை வந்து தொட்டு விட்டுச் சென்றது போல் கணபதி முனிவருக்குத் தரிசனம் ஆயிற்று. பிரமையோ என்று சந்தேகித்த முனிவர், கண்களைத் துடைத்துக் கொண்டு உற்றுக் கவனித்தார். அந்த நட்சத்திரம் மீண்டும் இறங்கிவந்து, முன் மாதிரியே மகரிஷியின் சிரசைத் தொட்டு விட்டுச் சென்றது. அம்மாதிரி ஆறுமுறை நடந்தது. இந்த அபூர்வக் காட்சியைக் கண்டு அதிசயித்துப் போனுர் கணபதி முனிவர்.

இது மாயத் தோற்றமல்ல, சத்திய தரிசனமே என்பது பின்னர் உறுதி ஆயிற்று. மகரிஷியே இந்த அதிசயத்தைத் தம் கண்ணுல் கண்ட தாகக் கூறியபோது கணபதி முனிவர் தாம் பெற்ற பெரும் பேற்றை நினைத்துப் புளகிதம் அடைந்தார்.

ஆறுமுகனை நினைவுபடுத்துவது போல் வான மண்டலத்திலுள்ள கிருத்திகா நட்சத்திரங்கள் ஒவ்வொன்ருக வந்து பகவானின் நெற்றியைத் தொட்டு விட்டுச் சென்றிருக்க வேண்டும் என்று தோன்றியது கணபதி முனிவருக்கு.

ஸ்ரீ ரமண மகரிஷியை சுப்பிரமணியரின் அம்சமாகவே கருதினுர் கணபதி முனிவர். அவ்வாறே பலமுறை அவருக்குத் தோற்றம் அளித்திருக்கிருர் பகவான்.

கணபதி சாஸ்திரிகள், ஸ்ரீ ரமண மகரிஷியிடம் தாமும் இதர பக்தர் களும்கேட்ட சந்தேகங்களையும், அவற்றுக்குப் பகவான் அவ்வப்போது அளித்த விடைகளையும் முந்நூறு சுலோகங்களாக எழுதி, பதினெட்டு அத்தியாயங்களாகப் பிரித்து, பகவத் கீதையைப் போலவே 'ரமண கீதை' யாக உருவாக்கி யிருக்கிருர். 'ரமண கீதை'யின் பதினேராவது அத்தியா யத்தில் ''ஈச்வரன் கொடுத்த ஞான திருஷ்டியால் உங்களை முருகப் பெருமானுகவே நான் காண்கிறேன்'' என்று கூறியிருக்கிருர் கணபதி முனிவர்.

ஒரு சமயம் விருபாட்ச தேவர் குகையில், மகரிஷியைத் தரிசிக்க வந்த கணபதி முனிவருக்கு, பகவானிடமிருந்தே இந்த உண்மையை அறிந்து கொள்ள வேண்டும் என்ற ஆவல் மேலிட்டது. ஆனால், அதை வெளியில் சொல்லவே இல்லை. வாயைத் திறந்து சொன்னால்தான் குருவுக்குப் புரியுமா? சீடரின் உள்ளக்கிடக்கையைத் தாமே அறிந்து, தக்க சமாதானம் சொல்லுவது அன்றோ உத்தம குருவுக்கு அடையாளம்?

விருபாட்சி குகையிலிருந்த மாடம் ஒன்றில் ஒரு பிள்ளையார் விக்கிரகம் இருந்தது. அதன் மீது ஆளுக்கொரு வெண்பா பாடலாம் என்று அப்போது அங்கிருந்த ஈசுவர சுவாமிகள் கூறினார். அவர் கூறிய யோசனையைப் பகவான் ஏற்றுக்கொண்டு மாடத்துப் பிள்ளையார் மீது ஒரு வெண்பா இயற்றினார்:

*பிள்ளையாப் பெற்றவனைப்*
*பிச்சாண்டி யாக்கி யெங்கும்*
*பிள்ளையாப் பேழ்வயிற்றைப்*
*பேணினீர்—பிள்ளையான்*
*கன்னெஞ்சோ மாடத்துப்*
*பிள்ளையரே கண்பாரும்*
*பின்வந்தான் தன்னைநீர் பெற்று*

விளையாட்டாக ஒரு வெண்பா பாடி, கணபதி முனிவரின் சந்தேகத்தைத் தீர்த்து வைத்து விட்டார் பகவான். **பின் வந்தான் தன்னை** என்று தம்மைக் கணபதிக்கு இளைய சகோதரராகச் சொல்லிக் கொண்டது கணபதி முனிவரைப் பரவசத்தில் ஆழ்த்தியது. இனி அதைப்பற்றி அவருக்குச் சந்தேகம் தோன்றுவதற்கே சிறிதும் இடமின்றி உறுதியாய்க் கூறி விட்டார் மகரிஷி.

வயதைக் கொண்டு பார்த்தால், கணபதி முனிவருக்குப் பகவான் இளையவர்தான். இருவருக்கும் ஒரு வயது வித்தியாசம்.

காவிய கண்ட கணபதி சாஸ்திரிகள் கணபதியின் அம்சம் என்று கூறுவதற்கு ஒரு நிகழ்ச்சியுண்டு.

கொண்டய்யா என்பவர் ஒரு சமயம் கணபதி ஹோமம் செய்தார். அப்போது அக்கினி ஜ்வாலைகளுக்கிடையே முனிவர் போன்ற திருமேனியை உடைய ஒரு மகானின் உருவத்தைக் கண்டு அவர் பிரமித்துப் போனார். அந்த உருவத்தை அதற்கு முன் கொண்டய்யா பார்த்ததேயில்லை.

சில மாதங்களுக்குப் பிறகு கொண்டய்யா, அருணாசலத்திற்கு வந்து கிரிப் பிரதட்சணம் செய்தார். மலையைச் சுற்றி முடிக்கும் சமயத்தில் ஏதோ ஒரு சக்தி அவரைப் பச்சையம்மன் கோயிலுக்கு இழுத்துச் சென்றது.

ஆலயத்தில் நுழைந்த கொண்டய்யா, அங்கு கணபதி சாஸ்திரிகளைக் கண்டு ஒருகணம் திகைத்துப் போய் அப்படியே நின்று விட்டார். அவரை அதற்கு முன் எங்கேயோ பார்த்திருப்பது போல் தோன்றியது அவருக்கு.

சிந்தித்துப் பார்த்தார். 'ஆம். சந்தேகமில்லை, அவரேதான் கணபதி ஹோமத்தின் போது அக்கினி ஜ்வாலைகளுக்கிடையே காட்சியளித்த அதே மகான்தான்' என்று நிச்சயமான பின்னர், அவர் காலில் விழுந்தார். அன்று முதல் முனிவரின் சீடரானர் கொண்டய்யா.



அண்ணலிடம் அருளுபதேசம்

'உமா சகஸ்ர'த்தில் வரும் ஒரு சுலோகத்தில், அருணசலேச்வரரை அர்த்த நாரீச்வரராகத் தரிசித்து, அவர் மடியில் கணபதியும் சுப்பிரமணியரும் அமர்ந்திருக்கும் கண் கொள்ளாக் காட்சியையும் கண்டு களிக்கிறுர் கணபதி முனிவர். வலது மடியில் (அதாவது ஈச்வரனின் பாகத்தில்) கணபதி வீற்றிருக்கிறுர் என்றும், இடது மடியில் (அம்பிகையின் பாகத்தில்) சுப்பிரமணியர் வீற்றிருக்கிறுர் என்றும் கூறி, விநாயகர் பிரணவ சொரூபமான சிவனின் அம்சம் பொருந்தியவர் என்பதையும், சுப்பிரமணியர் பராசக்தியின் அம்சம் பொருந்தியவர் என்பதையும் வெகு அழகாக எடுத்துக் காட்டியுள்ளார்.

ரமண மகரிஷிகள், கணபதி முனிவரை ஆட் கொண்டதற்கு அடையாளமாக ஒரு சமயம் ஓர் அதிசய நிகழ்ச்சி நடந்தது.

ஒரு சமயம் கணபதி சாஸ்திரிகள் தவம் புரிவதற்காகச் சென்னையை அடுத்துள்ள திருவொற்றியூருக்கு வந்தார். தியாகராஜப் பெருமானையும், வடிவுடையம்மனையும் தரிசித்துவிட்டு, அத் தலத்திலுள்ள விநாயகர் கோயில் ஒன்றில் தவத்திற்காக அமர்ந்தார். பதினெட்டு நாட்கள் மௌன விரதம் ஏற்றுக் கடும் தவம் புரிந்தார். கடைசி தினத்தன்று, முனிவர் கண் விழித்துப் படுத்துக் கொண்டிருந்த போது ஓர் அதிசயத்தைக் கண்டார்.

ரமண மகரிஷிகள் மெள்ள வந்து அவர் பக்கத்தில் அமர்ந்தார். திடுக்கிட்டுப் போன கணபதி முனிவர், உடனே எழுந்திருக்க முயன்றுர். ஆனல், மகரிஷி தம் கரத்தை அவர் தலையில் வைத்து அழுத்தி, அவரை எழுந்திருக்க விடாமல் தடுத்து விட்டார். அக்கணம் தம்முள் அருட்சக்தி புகுந்து பரவசத்தில் ஆழ்த்தியதை உணர்ந்தார். பகவான் தமக்கு ஹஸ்த தீட்சை தந்து அருளியதை நினைத்து உளம் மகிழ்ந்தார்.

இது நடந்து பல ஆண்டுகள் கழித்து, இது ஒரு மாயத் தோற்றம் அல்ல என்பதைப் பகவான் உறுதிப் படுத்தினுர். மகரிஷி கூறியதையே கேட்போம்:

'ஒரு நாள் இது படுத்துக் கொண்டிருந்தது. ஆனால், சமாதியில்லை; திடீரென்று உடல் மேலே தூக்கிச் செல்லப்பட்டது. சற்றைக்கெல்லாம் சுற்றிலுமுள்ள பொருள்கள் யாவும் மறைந்து, எங்கும் பேரொளி சூழ்ந்தது. பின்னர், உடல் கீழே இறங்கியது. பொருள்கள் மீண்டும் கண்ணுக்குத் தெரிந்தன. திருவொற்றியூரிலிருப்பதாக எண்ணம் தோன்றியது. பெரிய வீதியில் நடந்து கொண்டிருக்கும் போது, கொஞ்ச தூரம் சென்றதும் ஒரு விநாயகர் கோயில் தென்பட்டது; உள்ளே சென்றது. அங்கு ஏதோ பேசியது. ஆனால், என்ன பேசியது, செய்தது என்று சரியாக நினைப்பில்லை. திடீரென்று கண் விழித்தபோது, விருபாட்சி குகையில் இது படுத்திருந்தது. அருகில் இருந்த பழனிச்சாமியிடம் நடந்ததை யெல்லாம் சொன்னது. இப்படித்தான் சித்தர்களும் உலவுவார்கள் என்று தெரிந்து கொண்டது.'

காவிய கண்ட கணபதி முனிவர் பராசக்தியின் பரிபூரண அருளுக்கும் ஆசிக்கும் பாத்திரமா யிருந்ததோடு, உச்சிஷ்ட கணபதியின் உபாசகராகவும் இருந்து வந்தார். அத்துடன் மந்திர ஜபத்தாலும், தியானத்தாலும், தவத்தாலும் அரும் பெரும் சக்திகளைப் பெற்றிருந்தார். ஸ்ரீ ரமண பகவானின் ஆன்மிக ஒளி அவரது தவ வலிமையைப் பன்மடங்காகப் பெருக்கியது.

இளைஞராக திருவண்ணாமலைக்கு வந்த கணபதி சாஸ்திரிகளின் புகழ் நாற்றிசையும் பரவியது. அவரது கல்வியறிவும், வாதம் புரியும் திறனும், நுண்ணறிவும் கேட்போரை வியக்கச் செய்தன. இதைக் கண்டு வயதான பண்டிதர்கள் சிலர் பொறாமை கூட அடைந்தார்கள்.

திருவண்ணாமலையிலிருந்த வேத சாஸ்திரப் பாடசாலையில் கணபதி சாஸ்திரிகள் சிறிது காலம் பண்டிதராக இருந்தார். அப்போது வயதான பண்டிதர் ஒருவர் இவருடன் தர்க்கம் புரிந்து தோற்கடிக்கும் எண்ணத்துடன் திருவண்ணாமலைக்கு வந்தார். பாடசாலையின் வாயிலில் நின்று பேசிக் கொண்டிருந்த இளைஞர்களை அணுகி, ''கணபதி சாஸ்திரிகள் எங்கே இருக்கிறார்?'' என்று கேட்டார். அவர்களில் ஓர் இளைஞன், ''நான்தான் கணபதி. உங்களுக்கு என்ன வேண்டும்?'' என்று கேட்டார். தன்னை அந்தப் பையன் ஏளனம் செய்கிறான் என்று நினைத்து முகத்தைச் சுளித்துக் கொண்டார் அந்த வயோதிகப் பண்டிதர். பின்னர், உண்மையை அறிந்து ஆச்சரிய மடைந்தார்.

''கணபதி சாஸ்திரிகள் என்றால் ரொம்ப வயதானவராக இருக்கும் என்று நினைத்து வந்தேன். இத்தனை இள வயதில் உன் புகழ் இத்தனை தூரம் பரவியிருப்பது ஆச்சரியத்திலும் ஆச்சரியம். நீ ரொம்ப புத்திசாலி என்கிறார்களே! உன்னிடம் சில கேள்விகள் கேட்கலாம் என்றுதான்

மாமரக் குகை (உட்புறம்)



வந்தேன்'' என்று அந்தப் பண்டிதர் கூறவும், ''தாராளமாகக் கேளுங்கள். எனக்குத் தெரிந்தவரையில் பதில் கூறுகிறேன்'' என்று தன்னடக்கத்துடன் கூறினர் கணபதி முனிவர்.

பெரியவர் ஒரு கேள்வியைக் கேட்டார். அடுத்த கணம் சற்றும் யோசிக்காமல் இள முனிவர், உபநிடதங்களிலிருந்தும், சாஸ்திரங்களிலிருந்தும் மேற்கோள்கள் காட்டி மூச்சு விடாமல் பேசத் தொடங்கி விட்டார். பல ஆதாரங்களைக் காட்டி, பலவித அர்த்தங்களை எடுத்துக் கூறி, பெரியவரின் சந்தேகத்தைத் தீர்த்து வைத்தார். அவற்றையெல்லாம் சரிவரப் புரிந்து கொள்ளக் கூட முடியாமல் அந்தப் பெரியவர் திக்கு முக்காடிப் போனர். கணபதி சாஸ்திரிகள் ரொம்பவும் பெரியவராகவும், அவர் எதிரில் தாம் மிகவும் சிறியவராகவும் அவருக்குத் தோன்றவே, மேல் வேட்டியை எடுத்து இடுப்பில் கட்டிக் கொண்டு கைகூப்பி நின்று பேசினர்:

''அப்பா, உன்னை நான் தவருக எடை போட்டு விட்டேன். உன்னை சோதிக்க வேண்டும் என்றும், உன்னை மட்டம் தட்ட வேண்டும் என்றும் தான் நான் இங்கு வந்தேன். ஆனல், உன் அறிவின் ஆழத்தைக் கண்டதும் என் புத்தியின் சிறுமை எனக்கு நன்ருகப் புரிந்து விட்டது. நீ மகா மேதை. பண்டிதர்களுக்கெல்லாம் பண்டிதன். என்னை மன்னித்து விடு'' என்று அழமாட்டாத குறையாகக் கூறினர்.

கணபதி முனிவர், பெரியவரின் கால்களில் விழுந்தார். ''தாங்கள் அப்படி யெல்லாம் சொல்லக் கூடாது. நான் கற்றது கைம்மண் அளவு தான்; கல்லாதது உலகளவு. உங்களைப் போன்ற பெரியவர்களிடமிருந்து நான் கற்றுக் கொள்ள வேண்டியது இன்னும் எத்தனையோ இருக்கிறது'' என்று மிக மிகப் பணிவுடன் கூறினர்.

தீவிரமாக ஸ்ரீ வித்யையை உபாசனை செய்ததால், முனிவரின் குண்டலினி சக்தி பிரமிக்கத்தக்கதா யிருந்தது. அது அவர் உடலை வாட்டி வதைத்தது. எப்போதும் எறும்பு கடிப்பது போன்று ஓர் எரிச்சல் இருந்து கொண்டே இருக்கும். அவ்வப்போது தலையில் தாங்க முடியாத கொதிப்பும் ஏற்படும். மண்டையே பிளந்து விடுவது போல் பலமான தலையிடி வரும். அப்போதெல்லாம் அவர் படும் வேதனையை விவரிக்கவே முடியாது.

ஒருநாள் முனிவர், மண்டைக் கொதிப்புத் தாங்க முடியாமல் பகவானிடம் சென்று முறையிட்டார். ''சாஸ்திரிகளே, உங்களுக்கு ஓர் ஆபத்தும் நேராது. கவலைப்பட வேண்டாம்'' என்று கூறிய பகவான், கணபதி முனிவரின் தலையைத் தமது கரத்தால் தடவிக் கொடுத்தார். உடனே கொதிப்பு அடங்கி விட்டது. அன்று மாமரக் குகையில் வந்து தியானத்தில் அமர்ந்த முனிவரின் நடு மண்டையிலிருந்து ஒரு திவ்விய ஜோதி வெளிச் சென்றதை சில சீடர்கள் கண்டு அதிசயித்தார்கள். அன்றையிலிருந்து முனிவருக்கு மண்டையைப் பிளப்பது போன்ற உணர்வு ஏற்படவே இல்லை.

ஆச்ரமத்திலிருந்த பிரம்மசாரி விசுவநாத சுவாமி, கணபதி முனிவரிடம் மிக ஈடுபாடு கொண்டவர். உபநிடதங்களை ஆராய்வதில் விருப்பம் கொண்ட அவரை பகவான், கணபதி முனிவரிடம் சென்று பாடம் கேட்கும்படி அனுப்பி வைத்தார். மறுநாள் மாலை மாமரக் குகையில் முனிவரைக் காணச் சென்றார் விசுவநாத சுவாமி. முனிவர் அவரை இன்முகத்துடன் வரவேற்றார். அவர் எதிரில் அமர்ந்ததுமே தன்னுள் ஒரு தெய்விக அமைதி சூழ்ந்ததை உணர்ந்தார் விசுவநாத சுவாமி. பின்னர், தைத்ரேய உபநிடதத்தில் திரிசங்குவின் அனுபவத்தை விவரிக்கும் பகுதியைத் தனக்கு விளக்கிக் கூறும்படி அவர், முனிவரைக் கேட்டுக் கொண்டார். அப் பகுதியைக் கணபதி முனிவர் தெளிவாகவும் விரிவாகவும் எடுத்து விளக்கியதைக் கேட்ட விசுவநாத சுவாமி அவரை ஓர் மாமுனிவராகவே மதித்தார். அன்று முதல் அவர் காலடியில் அமர்ந்து சந்தேகங்களை யெல்லாம் தீர்த்துக் கொள்ள வேண்டும் என்று எண்ணம் கொண்டார்.

ஒரு நாள் குண்டலினி சக்தியைப் பற்றி விசுவநாத சுவாமி, கணபதி முனிவரிடம் பேசிக் கொண்டிருந்தார். அப்போது முனிவர் அதைப்பற்றி தமது அனுபவங்களைக் கூறி விட்டு, அதன் சக்தியையும் அவருக்கு உணர்த்திக் காட்டினார். தம் தலைக்கு மேல் கையை உயர்த்திப் பிடிக்கும்படி விசுவநாத சுவாமியிடம் சொன்னார் முனிவர். சற்றைக்கெல்லாம், அவரது உச்சி மண்டையிலிருந்து நீராவியைப் போல் வெப்பம் நிறைந்த சக்தி புறப்பட்டு, தம் உள்ளங் கையைத் தாக்கியதை விசுவநாத சுவாமி உணர்ந்தாராம்.

மின் சக்திக்கு அதி தேவதை இந்திரன். அதற்கு அவனே தலைவன். கணபதி முனிவர், 'உலகம் மின் சக்தியினால் இயங்குகிறது' என்ற 'இந்திர மத'த்தில் பெரும் நம்பிக்கை கொண்டிருந்தார். நம் பண்டைய மகரிஷிகள் தங்களுக்குள் மின் சக்தியைப் பெருக்கியே அநேக காரியங்களைச் சாதித்திருக்கின்றனர். காவிய கண்ட கணபதி முனிவரும் அத்தகைய அதிசய சக்தியைப் பெற்றிருந்தார். அவரைத் தரிசிக்கச் சென்ற பலர் தங்கள் உடலில் மின் அதிர்ச்சி ஏற்படுவதை உணர்ந்திருக்கிறார்கள்.

வேதகால ரிஷிகளும் முனிவர்களும் சந்நியாசத்தை ஏற்றுக் கொள்ளவில்லையாதலால் தாமும் அம் மகரிஷிகளைப் போல் தர்ம பத்தினியுடன் இல்லறம் நடத்துவதாக அவர் அடிக்கடி கூறுவதுண்டு. திருவண்ணாமலையில், மனைவி விசாலாட்சி அம்மையாருடனும், மகன் மகாதேவனுடனும், மகள் வஜ்ராம்பாளுடனும் அவர் குடித்தனம் நடத்தி வந்தார். குடும்பத்துடன் இருந்தாலும், உருவத்திலும், நடையுடை பாவனைகளிலும், ஆத்ம சக்தியிலும் மாமுனிவர்களையே நினைவுபடுத்தி வந்தார் அவர். பாதக்குறடு இல்லாமல் நடக்க மாட்டார்; மான் தோல் இல்லாமல் உட்கார மாட்டார்.

கடந்த நூற்றாண்டில் பாரதம் பெற்றெடுத்த தவப் புதல்வர்களில் கணபதி முனிவரும் ஒருவர். நாட்டுப் பற்று மிக்க அந்த மகான்,



அமைதியே உருவான ரமண மகரிஷி

கதராடையைத்தான் அணிவார். பாரதம் எல்லாத் துறைகளிலும் சிறந்தோங்க வேண்டும் என்று கனவு கண்டார் அவர். காலத்திற் கொவ்வாத பழக்க வழக்கங்களைக் களைந்தெறிந்து விட்டு, வேத நெறியையும் நம் புராதன கலாசார நெறிகளையும் தழைக்கச் செய்ய வேண்டும் என்பதுதான் அவருடைய எண்ணமாக இருந்து வந்தது.

காவிய கண்ட கணபதி முனிவருக்கு வேதம் தான் பிரமாணம். வேதத்தில் தீண்டாமையைப்பற்றிக் கூறவில்லை என்று அவர் அடிக்கடி வாதிப்பார். பெல்காமில் நடந்த காங்கிரசுக்குத் திருவண்ணாமலைப் பிரதிநிதிகளில் ஒருவராகச் சென்ற அவர், தீண்டாமையை எதிர்த்து சமஸ்கிருதத்தில் ஓர் அரிய சொற்பொழிவை நிகழ்த்தினார். அவருடைய வாதத் திறமையையும், மன உறுதியையும் கண்டு மகாத்மா காந்தி, இவரைக் கட்டித் தழுவிக் கொண்டாராம்.

நம்முடைய பண்டைய பழக்க வழக்கங்களைப் பற்றி அரிய ஆராய்ச்சிகள் செய்து வைத்திருந்த அவர், அத்தனைக்கும் விஞ்ஞான முறையில் விளக்கம் தருவாராம்.

நாட்டின் மேம்பாட்டைப் பற்றியே எந் நேரமும் எண்ணிக் கொண்டிருந்த முனிவர், அந்த எண்ணம் ஈடேறும் பொருட்டு தீவிரமாக மந்திர ஜபத்தை மேற் கொண்டார். ஒவ்வொருவரும் தம் ஆத்ம சக்தியைப்

பலப்படுத்திக் கொண்டாலன்றி, பாரத சமுதாயத்தை மாற்றி அமைக்கும் வலிமையை நாம் பெற முடியாது என்று உணர்ந்து, அதற்கென பல சிட்டர்களைச் சேர்த்துக் கொண்டு, சங்கம் அமைத்து ஜபதபங்களில் ஈடுபடும்படி பணித்தார் அவர்.

கணபதி முனிவரின் தீராத 'வேட்கை'யைப் பகவான் அறிவார். உள்ளத்தில் உறுதியும், மனத்தில் சாந்தியும் ஏற்படும் பொருட்டு அவ்வப்போது அவருக்கு நல்லுபதேசங்கள் செய்து வந்தார். 'நான் யார்?' என்ற ஆத்ம தியானத்தில் ஆழ்ந்து, எல்லா பாரங்களையும் ஈச்வரனிடம் விட்டு விடும்படி அவருக்கு அறிவுரை கூறினுர். 'ஈச்வரன் எல்லா பாரங்களையும் தாங்குவான். பிறகு நாம் பாரமின்றி நிம்மதியாக இருக்கலாம். பகவான், அவனுடைய காரியத்தைச் செய்வான்' என்று ஒரு சமயம் சந்தேகத்துடன் வந்த முனிவருக்கு அருள்மொழி கூறி அனுப்பினுர் பகவான்.

காவிய கண்ட கணபதி முனிவர், நினைத்த போது சுலோகங்கள் இயற்றும் திறன் படைத்தவர். பிறருடன் பேசும்போதும், சொற்பொழிவுகள் ஆற்றும் போதும் அக்கணமே சொந்தமாகச் சுலோகங்களை இயற்றி, எல்லோரையும் பிரமிக்க வைப்பாராம்.

ரமண கீதையை அவர் எழுதுவதற்கு முன்பே, தமது உபந்நியாசங்களின் போது சில சுலோகங்களைக் கூறி, அவை அதில் வருவதாகச் சொல்லியிருக்கிறுர். "இது ரமண கீதையில் மூன்ரும் அத்தியாயத்தில் ஐந்தாவது சுலோகம்" என்று கூசாமல் கூறி விடுவாராம். இப்படிப் பல சுலோகங்களை முதலில் சொல்லிய பின்னரே ரமண கீதையை எழுதி முடித்தார் அவர்.

இந்த அதிசயத்தைப்பற்றிப் பகவான் ஒரு சமயம் பக்தர்களிடம் பேசிக்கொண்டிருந்தபோது, ஒருவர், "அப்போது யாராவது 'ரமண கீதை எங்கே யிருக்கிறது?' என்று கேட்டிருந்தால் 'முனிவர்' என்ன செய்திருப்பார்?" என்று கேட்டார்.

"அவரை அப்படிக் கேட்பதற்கு யாருக்குத் தைரியம் இருக்கு?" என்று திருப்பிக் கேட்ட பகவான், மற்ருெரு விஷயத்தையும் கூறினுர்.

ரமண கீதை வெளியான பிறகு அவர் பல சமயங்களில் அதில் இல்லாத சுலோகங்களை உதாரணமாக எடுத்துக் காட்டுவார். யாராவது அந்த சுலோகங்கள் ரமண கீதையில் இல்லையே என்று சுட்டிக் காட்டினுல், "இது மகா ரமண கீதையில் இருக்கிறது" என்பார்! அப்படியொரு நூல் எழுத வேண்டும் என்று அவர் திட்டமிட்டிருந்தது என்னவோ உண்மை. அது நிறைவேருமலே போய் விட்டது.

ஒரு சமயம் திருவண்ணுமலையில் நடைபெற்ற சைவ சித்தாந்த மகாநாட்டில் கணபதி முனிவரைப் பேசும்படி அழைத்தார்கள். அவர் திருவண்ணுமலைக்குப் புதிதாக வந்திருந்த சமயம் அது. அவருக்கு சைவ சித்தாந்தத்தைப் பற்றி அப்போது ஒன்றுமே தெரியாது. மகாநாட்டை ஏற்பாடு செய்திருந்தவர்களோ, 'கணபதி சாஸ்திரிகள், சைவ

சித்தாந்தத்தைப் பற்றி விரிவாகப் பேசப் போகிறார்' என்று விளம்பரப்படுத்தி யிருந்தார்கள்.

அவர் பேச வேண்டிய நாள் வந்தது. காலையில் பகவானிடம் சென்று ''எனக்கு சைவ சித்தாந்தத்தைப் பற்றி ஒன்றுமே தெரியாது. இவர்கள் என்னைப் பேச அழைத்திருக்கிறார்கள்; என்ன செய்வதென்றே புரியவில்லை'' என்றார். பகவான், 'சிவஞான போத'த்தை எடுத்து சில பகுதிகளைப் படித்துக் காட்டி, பொருள் கூறி விளக்கினார். பின்னர், சைவ சித்தாந்தத்தின் சாரத்தைச் சுருக்கமாக எடுத்துரைத்தார். அது போதும் அவருக்கு.

மகா நாட்டில் கணபதி முனிவரின் பேச்சுத்தான் மிகச் சிறப்பாக அமைந்தது. தாமே செய்யுட்களை இயற்றி, தமிழில் அரியதொரு சொற்பொழிவாற்றி விட்டார். அவருடைய புலமையையும், மதி நுட்பத்தையும் கண்டு அத்தனை பேரும் வியந்தார்கள்.

மகாநாடு முடிந்த பிறகு கணபதி முனிவர் பகவானிடம் வந்து, ''இன்று உண்மையில் நான் பேசவேயில்லை. எனக்கு ஒன்றுமே தெரியாது. எல்லாம் பகவானின் அருளாசி விசேஷம்தான். இதுவரை சைவ சித்தாந்தத்தையே படிக்காத எனக்கு, அதைப் பற்றி யெல்லாம் ரொம்ப நாட்களாகத் தெரிந்து வைத்திருப்பது போல் மனத்தில் தோன்றியது'' என்று கூறினார்.

ஆச்ரமத்திற்கு கணபதி முனிவர் வந்த பிறகுதான் பகவானுக்கு சமஸ்கிருத மொழியில் பெரும் ஆர்வம் ஏற்பட்டது. வேத சாஸ்திரங்களைப்பற்றியும் கணபதி முனிவரிடம் அடிக்கடி பேசி, பயனுள்ள பல ஆராய்ச்சிகள் செய்திருக்கிறார் மகரிஷி. சமஸ்கிருத சுலோகங்களை இயற்றி இலக்கணப்பிழை யில்லாமல் இருக்கிறதா என்று கணபதி முனிவரிடம் மகரிஷி கேட்பது வழக்கம். 'அருணசல பஞ்சரத்னம்' என்ற சமஸ்கிருத கவிதைகளை இயற்றும்படி பகவானைத் தூண்டியதே காவிய கண்ட கணபதி முனிவர்தான். பகவான் இயற்றிய 'உள்ளது நாற்பது' என்ற நூலை கணபதி முனிவர் 'ஸத்தர்சனம்' என்ற பெயரில் சமஸ்கிருதத்தில் மொழி பெயர்த்திருக்கிறார். அதற்குக் கணபதி முனிவரின் சீடர், கபாலி சாஸ்திரிகள் விளக்க உரை ஒன்று எழுதி யிருக்கிறார். பகவானின் 'உபதேச சாரம்' என்ற நூலுக்கு கணபதி முனிவர் வியாக்கியானம் எழுதி யிருக்கிறார். மகரிஷியின் மீது அவர் அவ்வப்போது பல சுலோகங்களை எழுதி யிருக்கிறார்.

முதலில் 'சாஸ்திரிகளே' என்று கணபதி முனிவரை அழைத்துக் கொண்டிருந்தார் பகவான். ஒருநாள் கணபதி முனிவர், தம்மை சாதாரணமாகவே அழைக்கும்படி பகவானிடம் கேட்டுக் கொள்ளவே, எல்லோரையும் போல் தாமும் அவரை 'நயனு' என்றே அழைப்பதாகக் கூறினார். 'நயனு' என்றால் தெலுங்கில் தந்தை என்று பொருள். அந்தச் சொல்லுக்குள் அன்பும், கனிவும், மதிப்பும் ஒருங்கே யடங்கி யிருந்தது. 'நயனு குழந்தையைப் போன்றவர்' என்று மகரிஷி அடிக்கடி கூறுவது வழக்கம்.

1903-ம் ஆண்டு முதன் முதலில் ஸ்ரீ ரமணரை பிராம்மண சுவாமி யாகத் தரிசித்துவிட்டுச் சென்ற கணபதி சாஸ்திரிகள், 1907-ம் ஆண்டு மீண்டும் திருவண்ணுமலைக்கு வந்து சேர்ந்தார். அதற்குப் பிறகு சுமார் இருபத்து மூன்று வருடங்களுக்கு மேல் பகவானுடன் தொடர்பு கொண் டிருந்தார். பெரும்பாலும் மலையிலுள்ள மாமரக் குகையிலேயே வாசம் செய்து வந்த அவர், பல உபாசகர்களுக்கு உறுதுணையாயிருந்து உன்னதத் தொண்டு புரிந்திருக்கிறுர்.

பின்னர், வட கானராவிலுள்ள ஸிரஸி என்ற இடத்தில் ஆனந்தாச்ரமம் அமைத்து, சிறிது காலம் அங்கே தங்கி யிருந்தார். இறுதியில் காரக்பூரில் குடியேறி, உடல் நலம் குன்றி, 1936-ம் ஆண்டு தமது ஐம்பத்தெட்டாவது வயதில், நிம்பூரா நதிக்கரையில் இயற்கை எய்தினுர்.

அந்தத் துயரச் செய்தியைத் தாங்கி வந்த தந்தியைக் கையில் வைத்துக் கொண்டு ரமண பகவான் உள்ளம் உருகிய காட்சியைக் கண் முன் நடப்பதுபோல் விசுவநாதசுவாமி என்னிடம் விவரித்தபோது, முனிவரின் மகிமையையும், மகரிஷியின் கருணையையும் ஒருங்கே உணர முடிந்தது.

தந்தியைப் படித்து விட்டு முதலில் யாரிடமும் ஒரு வார்த்தையும் பேசவில்லை பகவான். மாலையில் வேத பாராயணம் முடிந்த பிறகு, எல்லோரையும் அருகில் அழைத்து, ''இதில் உள்ள செய்தி தாங்க முடியாத அதிர்ச்சியைத் தருகிறது. நயன போயிட்டாராம்!'' என்று கூறிய பகவான், சற்றுத் தயங்கி ''அவர் நிஜமா போயிட்டாரா? எங்கே போயிட்டார்?'' என்று கேட்டார். அதாவது 'அவர் எங்கும் போக வில்லை. அவருக்கு மரணமே இல்லை' என்று கூறுமல் கூறினுர். பகவானின் பேச்சில் கலக்கமில்லை. ஆனுல், அவரது கண்கள் கலங்கின. உணர்ச்சி யால் நெகிழ்ந்த உள்ளத்தோடு, கண்ணீர்த்துளிகள் கன்னங்களை நனைக்க, ''நயனவைப் போல் இன்னொருத்தரை இனி பார்க்க முடியுமா?'' என்று உருக்கமுடன் கூறினுர் மகரிஷி.



ஸ்ரீ அருணாசலேச்வரர் ஆலய ராஜ கோபுரம்

இளம் துறவியான பிராம்மண சுவாமியின் மகிமையை அறிந்த காவிய கண்ட கணபதி முனிவர், அவரது மலரடிகளில் சரணடைந்து, அருளாசியை வேண்டி, அதிசயிக்கத்தக்க சக்திகளைப் பெற்று மேன்மையடைந்தார். அவ்வாறே பல சம்சாரிகள், ரமணானுபவத்தில் திளைத்து, உள்ளத்தால் துறவறம் பூண்டு, பேரமைதியில் ஆழ்ந்திருந்தார்கள். ஆனால், காவியுடை, விபூதி, உருத்திராட்சங்களால் ஒப்பனை செய்து கொண்டு, ஆன்மிக வேடதாரிகளாக நாடகமாடிய ஓரிரு 'சாது'க்கள், இளம் சுவாமிகளின் உன்னத நிலையைப் புரிந்து கொள்ளாமல், அவரை மிகவும் துன்புறுத்தினார்கள். தங்கள் பிழைப்பைக் கெடுக்க வந்தவராகவே நினைத்து, அவரை மலையிலிருந்து விரட்டியடிக்கப் பெரும் முயற்சிகள் செய்தார்கள். புகழ்ச்சியையும் இகழ்ச்சியையும் சமநோக்கோடு ஏற்றுக் கொண்ட ஜீவன் முக்தரான ரமணர் இந்தச் சோதனைகளுக்கு உட்பட்டு, தீயிலிட்ட தங்கமென புத்தொளி வீசி, புனித மெருகுடன் பிரகாசித்த வரலாறு படிப்போர் நெஞ்சத்தை உருக்கும்; உள்ளத்தைத் தூய்மைப்படுத்தும்.

# 17

நல்லதையே நினைத்து, நல்லதையே செய்யும் நல்லோர்களின் பெயரைச் சொன்னுல் புண்ணியமுண்டு. தீயதையே நினைத்து, தீங்குகள் புரியும் சிறுமதி படைத்தோரின் பெயரைச் சொல்லாமல் இருப்பதே நல்லது.

அந்த சாதுவின் பெயர் எம். ஜே. என்று வைத்துக் கொள்வோம். வயதானவர். மலையின் மீது வசித்து வந்தார். கடுமையான தவமிருந்தார். பிரும்மச்சரியத்தைக் கடைப்பிடித்தார். சிறிது ஆகாரமே உட்கொள் வார். எல்லோரும் அவரை ஒரு மகான் என்றே கருதினர்.

ரமணர் பவளக் குன்றிலிருந்து, மலைக்கு வந்த போது, எம். ஜே. யைக் காணச் செல்வார். தம்மாலான தொண்டுகள் புரிவார். ஆனுல், நாளடைவில் இளம் சுவாமியைத் தேடி வந்த கூட்டம் பெருகியது. எம். ஜே.யைக் காண வந்த கூட்டம் குறைந்தது. அதனுல் அவருக்கு வழக்கமாக வரும் காணிக்கையும் குறைந்தது. உதட்டளவில் வேதாந்தம் பேசி, உள்ளம் பக்குவம் அடையாமலிருந்த எம். ஜே. இதைக் கண்டு வருந்தினுர். அவருள் பொருமைத் தீ கொழுந்து விட்டு எரிந்தது.

'மதிப்பும் மரியாதையும் போனுல் பரவாயில்லை; வரும்படியும் போகிறதே' என்று அந்தப் போலிச் சாமியார் உள்ளம் குமுறினுர். 'நம்ம பிழைப்பில் மண்ணைப் போடப் பார்க்கும் இவரை இங்கிருந்து எப்படியாவது விரட்டி விட வேண்டும்' என்று முடிவு செய்தார். சாதா ரணமாக புது சாமியார்களைப் பயமுறுத்த அவர் கையாளும் தந்திரத் தையே அப்போதும் பின்பற்றினுர்!

பிராம்மணச் சுவாமி மலைச் சரிவில் அமர்ந்திருக்கும் போது, எம். ஜே. மேலே ஏறிப் போய்ப் பெரிய கற்களை உருட்டி விடுவார். சில சமயம் அந்தக் கற்கள் சுவாமியின் வெகு அருகில் வந்து விழும். ஆனுல், அதைக் கண்டு அவர் அஞ்சி நடுங்க வில்லை.

ஒருநாள், கல் உருண்டு வரும்போது, சட்டென்று மேலே ஓடிச் சென்று எம். ஜே.யைக் கையும் களவுமாகப் பிடித்து விட்டார் பிராம்மண சுவாமி. எம். ஜே. அசட்டுச் சிரிப்புச் சிரித்தார். "சும்மா விளையாட்டுக் குச் செய்தேன்" என்று எதையோ கூறி மழுப்பி விட்டார். இப்படிச் செய்ததற்காக எம். ஜே.யிடம் ரமணர் பகை பாராட்டவில்லை. அதை அந்தக் கணமே மறந்து விட்டார்.

ஆனுல், எம். ஜே. தமக்கு நேர்ந்த அவமானத்தை மறக்கவில்லை. தமது தோழரான மற்ருெரு சாதுவுடன் சேர்ந்து கொண்டு, ரமணரைத் திருவண்ணுமலையை விட்டே விரட்ட சதியாலோசனை செய்தார். இருவரும் செயல்படுத்திய அந்தத் திட்டம் ஒரு சுவையான கதை!

எம். ஜே.யின் அருமைத் தோழருக்கு எஸ். ஆர். என்று பெயர் கொடுப்போம். வேதத்திலும், பகவத் கீதையிலும், பிரும்மசூத்திரத் திலும் அவருக்குக் கொஞ்சம் கொஞ்சம் தெரியும். ஆங்கிலம், தமிழ், பிரெஞ்சு, மராத்தி, இந்தி, சமஸ்கிருதம், மலையாளம் என்று பல மொழி களில் சிறிதளவு அறிந்து வைத்திருந்தார். எந்த மொழிக்காரர்

வந்தாலும் அவர் 'வெளுத்து வாங்கி' விடுவார். சிவந்த மேனி; உருண்டு திரண்ட உருவம்; நேர்த்தியான உடை; பார்ப்பவர்கள் எளிதில் மயங்கி விடும் கம்பீரத் தோற்றம். படித்தவரோ-பாமரரோ, தொண்டைமானோ-தோட்டியோ, பெரியவரோ-சிறியவரோ, யார் வந்தாலும் அவரவர்களுக்குத் தகுந்தவாறு பேசி அனுப்புவதில் நிகரற்றவர். குருமூர்த்தத்தில் இருக்கும் போது ரமணரை 'எடை போட'ப்போனது உண்டு அவர். பிராம்மண சுவாமிகளோ, எந்நேரமும் கண்களை மூடிக்கொண்டு வாயைத் திறக்காமல் உட்கார்ந்திருந்ததால் எஸ். ஆர். அவர் வம்புக்குப் போகவில்லை. இளம் சுவாமியிடம் ஆன்ம ஒளியைத் தரிசித்த மக்கள் அவரை நாடிச் சென்றதைக் கண்டு எஸ். ஆர். பொருமினார். தம்மை எல்லோரும் அலட்சியம் செய்ததைக் கண்டு குமுறினார். 'எனக்கு இருக்கும் சாமர்த்தியமும் சாதுர்யமும் இந்தப் பையனுக்கு ஏது? ஒரு கை பார்த்து விடுகிறேன்' என்று கண்ணை மூடிக்கொண்டு காரியத்தில் இறங்கி விட்டார்.

பிராம்மண சுவாமி இருப்பிடத்திற்குப் போய் அவருடைய 'குரு' வைப் போல் தம்மைக் காட்டிக் கொள்வார். புதிதாக யாராவது சுவாமியைத் தரிசிக்க வந்தால் எஸ். ஆர். குறுக்கிட்டு, ''குழந்தைக்குத் தின்பண்டங்கள் கொடுங்கள்'' என்று கூறுவார். சுவாமியைப் பார்த்து, ''குழந்தே, வெங்கடராமா, அவா ஏதோ கொண்டு வந்திருக்கா பாரு, அதை எடுத்துக்கோப்பா'' என்பார். பட்சணக் கடையில் தின்பண்டங்கள் வாங்கிக் கொண்டு வந்து, ''உனக்காக வாங்கிண்டு வந்தேன். எடுத்துக்கோ'' என்று பரிவுடன் கூறுவார். வருபவர்களிடம் ''இந்த சின்ன சுவாமி என்னோட சிஷ்யந்தான். நமஸ்காரம் பண்ணுங்கோ'' என்று அறிமுகம் செய்து வைப்பார். மௌனமாக அமர்ந்திருந்த ரமணர் எல்லாவற்றையும் பார்த்துக் கொண்டிருந்தார். மறுத்து ஒரு வார்த்தை கூடப் பேசவில்லை. எஸ். ஆரைக் கண்டு கோபப்படவில்லை; மாறாக பரிதாபப்பட்டார்.

சில சமயங்களில் எஸ். ஆர். இளம் சுவாமியிடம் வந்து, ''எல்லார் கிட்டேயும் நீ என் சிஷ்யப்பிள்ளை என்று சொல்லி, கொஞ்சம் பணம் சம்பாதிச்சுக்கிறேன். உனக்கு அதனாலே ஒண்ணும் நஷ்டம் இல்லே. நீ ஒன்றுமே பேசாம இருந்துடு'' என்று சற்றும் வெட்கமில்லாமல் கூறுவார். மௌனவிரதம் ஏற்றிருந்த சுவாமி இந்த அற்ப விஷயத்திற்காகவா வாயைத் திறக்கப் போகிறார்? அது எஸ். ஆருக்கு நன்றாகத் தெரியும்.

சுவாமி இதையெல்லாம் பொறுத்துக் கொண்டிருந்தாலும் அவருடைய பக்தர்களுக்கு எஸ். ஆரின் பித்தலாட்டம் சற்றும் பிடிக்கவில்லை. முதலில் முணுமுணுத்துக் கொண்டிருந்தவர்கள் போகப் போக வெளிப்படையாகவே கண்டிக்கத் தொடங்கினார்கள்.

பிறர் தன்னை எளிதில் நம்பிவிடும்படி வெகு சாமர்த்தியமாக நடிப்பதில் எஸ். ஆர். வல்லவர். திடீரென்று ரமணர் இருக்கும் குகைக்குள் வருவார். யாரையாவது அழைத்து, ''டேய், பையா! இந்த சட்டைப்

பையில் நூறு ரூபா இருக்கு, எடுடா, எவனோ திணிச்சுட்டுப் போயிட்டான். நான் பணத்தைக் கையால் தொடுவதே இல்லே'' என்பார். அந்தப் பணத்தை 'சூறை' விடுவார். அப்பாவிகளாகப் பார்த்து, ''உனக்கு அடுத்த மாசம் நிச்சயம் வேலே கிடைக்கும்'', ''இரண்டு மாசத்தில் உன் கஷ்டமெல்லாம் விடிஞ்சுடும்'' என்றெல்லாம் சொல்லி நிறையப் பணம் சம்பாதிப்பார். தன் சாமர்த்தியத்தைப் பற்றி சுவாமியிடம் ஜம்பம் அடித்துக் கொள்வார்.

ஒருநாள் விருபாட்சி குகைக்கு வந்து, ''என்னே என்னன்னு நினேச்சே: நான் இப்போ ஒரு அவதூதராயிட்டேன். நிர்வாணமாக எல்லார் வீட்டுக்குப் போறேன். எல்லாரும் வந்து எனக்கு நமஸ்காரம் பண்ரு. வேணுங்கிறதைக் கொடுக்கிரு'' என்று பெருமையாகப் பேசினுர். அத்துடன் நிற்கவில்லே. அன்று இரவு குகையின் தாழ்வாரத்தில் படுத்து, அங்கே அசுத்தம் செய்து விட்டார்.

மறுநாட் காலே, தன் துணிமணிகளே யெல்லாம் குகையில் வைத்து விட்டு, அவதூதர் வேடம் புனேந்து வெளியே போய் விட்டார் எஸ். ஆர். தூக்கம் கலேந்து எழுந்து வந்த ரமண சுவாமி, எஸ். ஆரின் விஷமத்தனத்தைக் கண்டு, பேசாமல் இருந்து விட்டார். ஆனுல், பழனிச்சாமிக்குக் கோபம் பற்றிக் கொண்டு வந்தது. அந்த இடத்தைச் சுத்தப்படுத்தினுர். பின்னர், சுவாமியுடன் குளத்திற்குக் குளிக்கப் போவதற்கு முன் எஸ். ஆரின் உடைகளேத் தூக்கி வெளியே எறிந்து விட்டு, குகையின் கதவைத் தாளிட்டுக் கொண்டு போய் விட்டார்.

திரும்பி வந்து பார்த்த எஸ். ஆருக்குக் கோபம் தாங்க முடியவில்லே. தன் 'சில்க்' சட்டையையும் பட்டுக் கரை வேட்டியையும் பழனிச்சாமி தான் தூக்கி யெறிந்திருக்க வேண்டும் என்று ஊகித்து விட்டார். உதவியாளர்களிடமிருந்து சுவாமியைப் பிரித்தால்தான், அவரை அடக்கி ஆள முடியும் என்று முடிவு செய்து, பிராம்மண சுவாமியைப் பார்த்து, ''அந்த பழனிச்சாமியை உடனே இங்கேயிருந்து துரத்தி விடு. என் துணியைத் தூக்கி யெறிகிருனே, என்ன தைரியம் அவனுக்கு? இங்கே அவன் இனி மேல் ஒரு நிமிஷம்கூட இருக்கக் கூடாது'' என்று இரைச்சல் போட்டார். பழனிச்சாமி அசையவேயில்லே. சுவாமியும் வாயைத் திறக்கவில்லே. எஸ். ஆருக்கு அடி வயிற்றில் ஆத்திரம் பற்றிக் கொண்டு வந்தது. பற்களே நர நரவென்று கடித்தார். பிராம்மண சுவாமியின் மீது காறி உமிழ்ந்தார். அப்போதும் பொறுமையே உருவாக, சாந்த மலேயாக ஒன்றுமே பேசாமல் அசையாமல் நின்றிருந்தார் ரமணர். ஜீவன் முக்தர்களுக்குப் பாலபிஷேகம் செய்தால் என்ன, எச்சில் அபிஷேகம் செய்தால் என்ன? இரண்டும் ஒன்றுதான்.

உண்மைப் பொருளே உணர்ந்து விட்ட உத்தமர் அவமானத்தைத் தாங்கிக் கொள்ளலாம். அவருடைய சீடர்களும் பக்தர்களும் வாயை மூடிக் கொண்டு இருப்பார்களா? முத்தையசாமி என்ற பக்தர் இந்தச் செய்தியைக் கேட்டு துடித்தே போனுர். குருவைக் கேவலப்படுத்திய சாமியாரைத் தேடிக் கொண்டு போய் ''எங்க சுவாமி மேலேயா எச்சில்

துப்பினே? உன்னே விட்டேனு பார்'' என்று கையை ஓங்கிக் கொண்டு கிளம்பி விட்டார். எஸ். ஆரின் மீது அடி விழாமல் யாரோ தடுத்து விட்டார்கள். இல்லாவிட்டால் அன்று அவருக்குக் கிடைக்க வேண்டியது சரியாகக் கிடைத்திருக்கும்.

இந்த நிகழ்ச்சிக்குப் பிறகு, எஸ். ஆர். மலே மீது பயமில்லாமல் நடமாட முடியவில்லே. 'யாரிடம், எப்போது, என்ன கிடைக்குமோ?' என்ற அச்சத்துடனேயே அலேந்து கொண்டிருந்தவர், ஊரை விட்டுப் போய்விடுவதுதான் நல்லது என்று தீர்மானித்து, ரயில்வே ஸ்டேஷனே அடைந்தார்.

ரயில் வந்ததும், இரண்டாம் வகுப்பில் ஏறினர். அதில் ஓர் இளேஞன் ஒரு பெண்மணியுடன் பிரயாணம் செய்து கொண்டிருந்தான். அவனே வம்புக்கிழுத்து, வாயில் வந்தபடி பேசினர். அந்தப் பெண்மணியைக் காட்டி, ''இந்தச் சிறுக்கியின் மேலே இருக்கிற மோகத்தாலே நீ என்னே மதிக்கமாட்டேங்கிறே'' என்று ஏசினர். அந்த இளேஞன் சும்மா இருப் பானு? அவன் என்ன ஞானியா? காலில் இருந்ததைக் கழற்றினன். எஸ். ஆரை வெளுத்து வாங்கி விட்டான்!

இரண்டு வருடங்கள் எஸ். ஆர். திருவண்ணுமலே பக்கமே தலே காட்டவில்லே. ஒரு நாள் திடீரென்று மலேக்கு வந்தார். மாமரக் குகையின் எதிரிலுள்ள வில்வ மரத்தடியில் வந்து நின்று கொண்டு, பிராம்மண சுவாமியை அழைத்து வரும்படி ஒருவரை அனுப்பினர். கருணுமூர்த்தியும் நடந்ததையெல்லாம் மறந்து அவரைக் காணச் சென்ருர். அவ்விருவரைத் தவிர அங்கு வேறு யாருமில்லே.

''ரயில்வே ஸ்டேஷனில் நடந்தது உனக்குத் தெரியுமா?'' என்று கேட்டார் எஸ். ஆர்.

''தெரியும்'' என்று பதில் கூறினர் சுவாமி.

''எனக்கு அதுவும் வேண்டும்; இன்னமும் வேண்டும், இல்லேயா?'' என்று கேட்டார் எஸ். ஆர்.

சுவாமி வாயைத் திறக்கவேயில்லே.

தனிப் பெருங்கருணே



''வெங்கடராமா, என்னை மன்னிச்சுடு. உன் மேலே எச்சிலைத் துப்பியது ரொம்பத் தப்பு. ஏதோ கோபத்திலே செஞ்சுட்டேன். இப்போ திரும்பி வந்திருக்கேன். எத்தனை தரம் வேணுமோ அத்தனை தரம் என் மேல் துப்பு'' என்றார் எஸ். ஆர். பரிதாபமாக.

பகவான் பழிக்குப் பழி வாங்குவாரா? எதுவுமே பேசாமல் அந்த இடத்தை விட்டகன்றார்.

எஸ். ஆர். உண்மையிலேயே திருந்தி விட்டார் என்றுதான் எல்லோரும் நினைத்தார்கள். ஆனால், சீக்கிரத்திலேயே வேதாளம் முருங்கை மரத்தில் ஏறிக் கொண்டது. முன்பு போல், சுவாமி இருந்த குகைக்கு வந்து, எல்லோரையும் அதட்டி அதிகாரம் செய்யத் தொடங்கினார். செல்வாக்கு மிக்க பக்தர்களிடமும் அவமரியாதையாக நடந்து கொண்டார். ஆனால், அவர்கள் யாருமே அவரை மதிப்பதாகத் தெரியவில்லை.

பிராம்மண சுவாமியின் சீடர்கள் தம்மை அவமரியாதையாக நடத்துகிறார்கள் என்று அறிந்த எஸ். ஆர். ''இந்த மலை வசிப்பதற்குத் தகுந்த இடம் இல்லை'' என்று உணர்ந்து, அதை விட்டுப் போய் விடுவது என்று முடிவு செய்தார். ஆனால், போவதற்கு முன் சுவாமியை நன்றாகச் சபித்து விட்டுப் போனார். ''உன்னிடம் இருக்கும் சக்தி யெல்லாம் போய் விடும். இனிமேல் உன்னை ஒருவரும் மதிக்க மாட்டார்கள். உன்னைத் தேடிக் கொண்டு யாருமே வரமாட்டார்கள்.'' ஆத்திரத்தைக் கொட்டித் தீர்த்து விட்டார் அந்தப் போலிச் சாமியார். அமைதியே உருவாக அமர்ந்திருந்தார் அந்த அருள் முனிவர்.

மலையை விட்டு வேகமாக இறங்கியவர் ஊருக்குள் சென்று, ஒரு பலகாரக் கடைக்காரரிடம் தாம் பிராம்மண சுவாமியைச் சபித்து விட்டு வந்ததைப்பற்றிப் பெருமையுடன் கூறினார் எஸ்.ஆர்.இளம் சுவாமியிடம் அன்பும் பக்தியும் கொண்டிருந்த அந்தக் கடைக்காரர், எஸ். ஆரை நன்றாக உதைத்து அனுப்பி விட்டார். அந்த 'பூசை'க்குப் பிறகு ஊரில் அவரைக் காணவேயில்லை. சில மாதங்கள் கழித்து மீண்டும் திருவண்ணாமலைக்கு வந்தார். மலைமீது ஏறினார். ரமணரிடம் சென்று தமது ஆத்திரத்தைக் காட்டினார். அநாகரிகமான முறையில் வாயில் வந்தபடி ஏசினார். சீடர்களை அவமானப்படுத்தினார். அப்போதும் ரமண பகவான் அருணாசல மலையாக, சலனமின்றி வீற்றிருந்தார். ஏமாற்றமடைந்த எஸ். ஆர். மனம் நொந்து எங்கோ போய் விட்டார். பின்னர் அவரைப் பற்றிய செய்தியே இல்லை!

இது நடந்து எட்டு ஆண்டுகளுக்குப் பிறகு, சில 'சாது'க்கள் ரமணரைக் கடத்திக் கொண்டு போய் விட வேண்டும் என்ற தீய எண்ணத்துடன் விருபாட்சி குகைக்கு வந்தனர். தாங்கள் பொதிகை மலையிலிருந்து வருவதாகவும், அங்கு தவம் புரிந்து கொண்டிருக்கும் அகத்திய முனிவர், தீட்சை யளிப்பதற்காக ரமணரை அழைத்து வரும்படி தங்களைப் பணித்துள்ளதாகவும் கூறினார்கள். அதைக் கேட்டுக் கொண்டிருந்த ரமணரின் சீடரான பெருமாள்சாமி, ''வாங்க, வாங்க. உங்களுக்காகத்தான் காத்துக் கொண்டிருக்கிறோம். நீங்கள் வருவதைப்பற்றி எங்களுக்குத்

தகவல் வந்தது. உங்களை ஒரு கொப்பரையில் போட்டு, நெருப்பில் கொதிக்க வைக்கும்படி உத்தரவா யிருக்கிறது. என்ன சொல்றீங்க?'' என்று கூறி, அருகிலிருந்த மஸ்தான் என்ற சீடரிடம், ''சீக்கிரம் குழியை வெட்டி நெருப்பை மூட்டு'' என்று சொன்னார். அவ்வளவுதான்; அந்த சாதுக்கள் சொல்லிக் கொள்ளாமல் ஓடி விட்டார்கள்!

தங்கள் பிழைப்பைக் கெடுக்க வந்தவர் என்று நினைத்து சில போலிச் சாமியார்கள் ரமண பகவானுக்கு இன்னல்கள் விளைவித்துக் கொண்டிருந்தனர். அதே சமயத்தில், 'அவர் வாழ்வே தங்கள் வாழ்வு' என்று நினைத்து, மகரிஷியின் சேவைக்கே தங்கள் வாழ்க்கையை அர்ப்பணித்துக் கொண்ட தியாகச் செம்மல்களுக்கும் கணக்கே இல்லை. அதிலும், தூய்மையான பக்திக்கும், திட வைராக்கியத்திற்கும் எடுத்துக் காட்டாக விளங்கிய சபரிக்கு ஈடான பெண் ரத்தினங்களின் வரலாற்றைப் படிக்கும் போது, பெருமிதத்தால் நெஞ்சம் விம்மிப் புடைக்கிறது.

போளூருக்கும் சேத்துப்பட்டுக்கும் இடையேயுள்ள மண்டகளத்தூர் கிராமத்தைச் சேர்ந்தவள் லட்சுமி அம்மாள். ஆஸ்திக்கு ஒரு பிள்ளையும் ஆசைக்கு ஒரு பெண்ணும் பெற்று, கண் நிறைந்த கணவனோடு இல்லறம் நடத்தி வந்த லட்சுமியின் இருபத்தைந்தாவது வயதிலேயே விதி அவளுக்கு விதவைக் கோலத்தைத் தந்து வேடிக்கை பார்த்தது! மாலுமி திடீரென்று மறைந்து விட்டான். லட்சுமியின் குடும்பக் கப்பல் கவிழ்ந்து விட்டது.

துயரக் கடலில் நீந்தி கரை சேர்ந்தவள், உயிருக்குயிரான இரு செல்வங்களுக்காகத் தன் உயிரைப் பிடித்து வைத்துக் கொண்டிருந்தாள். அவளுக்கு வாழ விருப்பமில்லை. ஆயுசு இருந்ததால் உண்டு, உடுத்து, உறங்கிக் கொண்டிருந்தாள்.

விதி அவளை நிழலாகத் தொடர்ந்தது. மகன் இருந்தால், அவன் பெரியவனாகி தாயைக் காப்பாற்றி விடப் போகிறானே என்று அவனையும் கையோடு அழைத்துச் சென்று விட்டது. கணவன் மறைந்ததற்காக வடித்த கண்ணீர் உலருவதற்கு முன்பே, மற்றொரு கடும் சோதனையா? ஆறாத் துயரப் புண்ணில் வேல் கொண்டு தாக்கினால் எப்படித்தான் தாங்குவது? சோகச் சித்திரமாய் இருந்தவள், நடைப் பிணமானாள்.

பூமி பிளந்ததோ, வானம் இடிந்ததோ, பிரளயம் சூழ்ந்ததோ என்று கதி கலங்கிப் போயிருந்த லட்சுமி, பெண்ணின் அழகு முகம் பார்த்து, அவள் சிரிப்பொலி கேட்டு, மழலைப் பேச்சில் சொக்கி, சூன்ய வாழ்வில் சுகத்தைத் தேடிக் கொண்டிருந்தாள். அவளைத் தேடிக் கொண்டு விதி மீண்டும் ஓடி வந்தது. ஐயோ, இதென்ன வேகம்? அதன் தாகம் இன்னும் அடங்கவில்லையா?

இல்லை, இல்லவே இல்லை! அது மரண தாகம்! அந்தப் பெண்ணின் உயிரையும் அது குடித்து விட்டுச் சென்றது. சென்று விட்டதா? இனி திரும்பி வரவே வராதே! யார் கண்டது?

அடுத்து அடுத்து மரணம் கொடுத்த அடி, லட்சுமியைப் படுக்க வைத்து விட்டது. பேயறைந்தவள் போல், பேச்சற்றுக் கிடந்தாள்

பேதை. 'அந்த விதி மீண்டும் வராதா, தன்னையும் கொண்டு போகாதா?' என்று காத்திருந்தாள்.

அழைத்தவுடன் நம்மைத் தேடி வருவதற்குக் காலன் என்ன நம் அடிமையா? அவன் விதியின் அடிமை. விதி அழைத்தால்தான் துணைக்கு வருவான். நாம் வாழ்ந்து துன்பப்பட வேண்டுமென்று தலையில் எழுதி யிருந்தால் அவன் விலகியே நிற்பான்.

மரணம் வரும் என்று காத்திருந்த லட்சுமி ஏமாற்றமடைந்தாள். சுருண்டு படுத்திருந்தவள் எழுந்து உட்கார்ந்தாள். சற்று நடமாடினாள். வீடு வெறிச்சோடிக் கிடந்தது. வெளியுலகம் வறட்சியாயிருந்தது. வாழ்க்கையே கசந்தது.

இருண்ட அறையிலேயே லட்சுமி முடங்கிக் கிடந்தாள். அதன் ஜன்னலைத் திறப்பதற்கும் அவள் அஞ்சினாள். கதவைத் திறந்தால், தன் பெண் படித்த பள்ளிக்கூடம் கண்ணுக்குத் தெரியும். அங்கே சிறுமி நடந்து வருவது போல் தெரியும். அவள் பேச்சில் கிளி கொஞ்சும். சிரிப்பில் இன்பம் துள்ளும். பழைய நினைவுகள் நிழற்படமாக ஓடும். அடி வயிற்றில் குடல் நெளியும்; நெஞ்சு வெடிக்கும்; 'வேண்டாம்! அந்த ஜன்னல்கள் அடைத்தே கிடக்கட்டும். என் உயிர் பிரிந்த பிறகு அதை யாராவது திறக்கட்டும்.'

மகள் பட்ட வேதனையை, வயதான தந்தை பார்த்து நொந்து போனார். ஆறுதல் வார்த்தைகள் சொன்னார். மகளுக்குத் தைரிய மொழிகள் கூறினார். தத்துவ உபதேசம் செய்தார். ஒன்றும் பயனில்லை. பேரிழப்பால் பரிதவித்தவள் நிம்மதியிழந்து வாடினாள்.

வீட்டிலேயே முடங்கிக் கிடந்தால் மன நிம்மதி பெற முடியாது என்று பலர் கூறினார்கள். தல யாத்திரை சென்றால், துக்கத்தைச் சிறுகச் சிறுக மறக்கலாம் என்று அனுபவமிக்கவர்கள் அறிவுரை வழங்கினார்கள். தந்தைக்கும் அதுவே சரியென்று தோன்றியது. பயணத்திற்கு மகளை உடன்பட வைத்தார்.

பம்பாய் ராஜதானியிலிருக்கும் கோகர்ணம் சென்றாள் லட்சுமி. தேவாலயங்களுக்குச் சென்று வழிபட்டாள். பல சாதுக்களைத் தரிசித்தாள். அவர்களிடம் அருளுபதேசம் பெற்றாள். அங்கிருந்து வட நாட்டில் வேறு சில இடங்களுக்குப் பயணமானாள். மகான்களின் சேவையில் தன்னை ஈடுபடுத்திக் கொண்டதன் மூலம், நடந்ததை யெல்லாம் மறக்க முயன்றாள். முடியவில்லை. உள்ளத்தை அழுத்திய பாரம் நீங்கவில்லை. நெஞ்சைப் பிழிந்த துயரம் மறையவில்லை. மனச்சாந்தி திரும்பவே இல்லை. சொந்த ஊருக்கே திரும்பி வந்து விட்டாள் லட்சுமி அம்மாள்.

அருணாசல மலையில் வசித்து வந்த பிராம்மண சுவாமியைப் பற்றி அப்போதுதான் முதன் முதலாக லட்சுமி அம்மாள் கேள்விப்பட்டார். 'அந்த மௌன சாமியாரைத் தரிசித்தாலே, துக்கமெல்லாம் மறைந்து போய் விடும். ஒளி நிறைந்த அவரது கண் பார்வை, நம் உள்ளத்தில் அமைதியை நிலவச் செய்யும். அவர் ஒரு மகான். சந்தேகமில்லை' என்று

யாரோ சொன்னது லட்சுமி அம்மாளுக்கு சற்று நம்பிக்கையை அளித்தது. உடனே திருவண்ணுமலைக்குப் புறப்பட்டு விட்டார். வருடம் 1907. துணைக்கு ஒருத்தியை அழைத்துக் கொண்டு, மலையேறி, நேரே ரமண பகவான் அமர்ந்திருந்த குகைக்குச் சென்ருர். அமைதியாக அமர்ந்திருந்த ஞான குருவைத் தரிசித்தார். அவரது மலரடிகளில் விழுந்து வணங்கி விட்டு, ஒரு வார்த்தையும் பேசாமல் எதிரே நின்ருர். அசையாமல் அப்படியே ஒரு மணி நேரம் நின்றிருந்தார். பகவானின் அருள் நோக்கால் அம்மாளின் உள்ளத்தில் எல்லையற்ற அமைதி குடி கொண்டது. அதுவரை அனுபவித்தறியாத ஆனந்தத்தில் மிதந்தார். அந்த இடத்தை விட்டு நகரவே அம்மாளுக்கு மனம் இல்லை. இறுதியில் சிறிதும் மனமின்றி கீழிறங்கி வந்தார்.

இருள் கவிந்த பாதையில் ஒளி படர்ந்தது. மனத்திலிருந்த மருள் அகன்று அருள் சூழ்ந்தது. நம்பிக்கை மலர்ந்தது. தினமும் மலையேறிச் சென்று, மகானின் சந்நிதியில் சிறிது நேரம் தங்கி புத்தொளியும் புதுத் தென்பும் பெற்று வந்தார் லட்சுமி அம்மாள்.

அதற்குப் பிறகு தன் துயரக் கதையைப் பிறரிடம் சொல்லும் போதெல்லாம் அவருக்குத் துக்கம் தொண்டையை அடைக்கவில்லை. கண்ணீர் பெருகவில்லை. இதயம் குமுறவில்லை. எல்லாம் லேசாகி விட்டது. அவர் வாழ்வில் ஓர் அற்புதமே நிகழ்ந்து விட்டது. அமைதி தேடி அலைந்தவருக்கு அருணுசல பகவான் அடைக்கலம் தந்து விட்டார். தன் வாழ்நாளையெல்லாம் அவர் மலரடி நிழலிலேயே கழித்து விடுவது என்று அந்த அம்மாள் உறுதி பூண்டார். அவருக்குத் தன் கையால் சமைத்து உணவு அளிப்பது என்று ஒரு புனித விரதமும் மேற்கொண்டார்.

பகவாஞலும், பக்தர்களாலும் 'எச்சம்மாள்' என்று அன்புடன் அழைக்கப்பட்ட லட்சுமி அம்மாள், தினமும் சாப்பாடு தயார் செய்து, பகவான் இருக்கும் இடம் தேடிச் சென்று, அவருக்கும் ஆச்ரம வாசிகளுக்கும் உணவளித்து வந்தார். அவர்கள் சாப்பிட்ட பிறகே தான் உண்பது என்ற விரதத்தை மிகத் தீவிரமாகக் கடைப்பிடித்து வந்தார்.

சுகமோ துக்கமோ, எச்சம்மாள் பகவானிடம் சென்று முறையிடுவார். அவரது தூய பக்தியைக் கண்டு மனமிரங்கிய பகவான், எல்லா செய்திகளையும் அக்கறையோடு கேட்பார். அவ்வப்போது ஆறுதலாக இரண்டு வார்த்தைகள் கூறுவார்.

பகவானைக் கலந்தாலோசித்த பின்னர், எச்சம்மாள், செல்லம்மாள் என்ற பெண்ணை சுவீகாரம் எடுத்துக்கொண்டார். அவளுக்கு நல்ல பையனுகப் பார்த்துத் திருமணம் செய்து வைத்தார். அவர்களுக்கு ஓர் ஆண் குழந்தை பிறந்தது. தன் பேரப் பிள்ளையை எடுத்துக்கொஞ்சினுர் எச்சம்மாள். தன் தெய்வத்தின் நினைவாக 'ரமணன்' என்று அவனுக்குப் பெயர் சூட்டினுர். அவன் மழலை மொழியைக் கேட்டு மகிழ்ந்தார்.

எச்சம்மாள் சிரித்து மகிழ்ந்தது பொல்லாத விதிக்கு எப்படித்தான் தெரிந்ததோ? எங்கிருந்தோ அது மீண்டும் ஓடி வந்தது!

ஒரு நாள் வீட்டில் தோத்திரப் பாடல்களை மெய்ம்மறந்து பாடிக் கொண்டிருந்த எச்சம்மாளுக்கு ஒரு தந்தி வந்தது. அது பயங்கரச் செய்தியைத் தாங்கி வந்தது. அந்தத் தந்தியை கிராமத்திலிருந்த எச்சம்மாளின் மாப்பிள்ளை அடித்திருந்தார்:

'செல்லம்மாள் இறந்து விட்டாள்.'

இந்தத் திடீர்ப் பேரிடியை எச்சம்மாளால் தாங்க முடியவில்லை. செல்லம்மாளுக்கு உடல் நலம் சரியில்லை என்ற செய்தி கூட அவருக்குத் தெரியாததால்,பெண்ணின் மரணச் செய்தி தாயைத்திடுக்கிட வைத்தது. தந்தியைக் கையில் எடுத்துக் கொண்டு நேரே பகவானிடம் ஓடினார். வேறு எங்கே போவார், பாவம்?

தந்தியை வாங்கிப் படித்த பகவான் கண் கலங்கினார். அவரது விழியோரத்தில் துளிர்த்த கண்ணீர், எச்சம்மாளின் துயரத்தைத் துடைத்தது. முன்பு, மக்கள் மாண்ட போது துயரத்தில் மூழ்கிப் போனவள், தற்போது ஒரு நொடியில் மனத்தைத் தேற்றிக் கொண்டாள். பகவானின் ஆசியும் அருட்பிரசாதமும் அவருக்கு அந்தகைய மனப் பக்குவத்தை ஏற்படுத்தித் தந்திருந்தன.

அன்றைக்கே கிராமத்திற்குச் சென்று, பேரப் பிள்ளை ரமணனை எடுத்து வந்து ரமண பகவானின் அன்புக் கரங்களில் தவழ விட்டார் எச்சம்மாள். பகவானுக்கு மீண்டும் கண்கள் பனித்தன. இனி அந்தப் பேரனுக்கும் பாட்டிக்கும் பகவான்தானே கதி. அவரது ஆசி இருக்கும் வரை தனக்கு ஏது குறை என்று நினைத்தார் எச்சம்மாள். அந்த நம்பிக்கையே அவரது வாழ்க்கைக் கப்பலின் நங்கூரமாக அமைந்தது. இனி எத்தனை பயங்கரமான புயல் வீசினாலும், துன்பமும் துயரமும் தொடர்ந்து வந்தாலும், எந்த அதிர்ச்சி ஏற்பட்டாலும் எச்சம்மாளால் தாங்கிக் கொள்ள முடியும்!

எச்சம்மாளுக்கு எந்நேரமும் பகவானின் சிந்தனைதான். அதனால் அவருக்குப் பல ஆன்மிக அனுபவங்கள் ஏற்பட்டிருக்கின்றன.

ஒரு சமயம் விருபாட்சி குகையில் இருந்த பகவானுக்கு சாப்பாடு எடுத்துக் கொண்டு மலையேறிக் கொண்டிருந்தார் எச்சம்மாள். சத்குரு சுவாமி குகையைக் கடந்து சென்ற போது, பாதையில் இரண்டு பேர் நின்று பேசிக் கொண்டிருப்பது போல் அவருக்குத் தோன்றியது. ஒருவர் ரமண ரிஷியைப் போலவும் மற்றவர் யாரோ ஒரு பக்தர் போலவும் இருந்தனர். அங்கு நிற்காமல் எச்சம்மாள் குகையை நோக்கி நடக்க ஆரம்பித்தார். அப்போது 'இங்கே இருக்கும் போது மேலே என்னத்துக்குப் போகிறது?' என்ற குரல் கேட்டது. பகவானின் குரல் போல் இருக்கிறதே என்று துணுக்குற்ற எச்சம்மாள் திரும்பிப் பார்த்தார். ஆனால், அங்கு யாருமே இல்லை. சுற்றுமுற்றும் பார்த்தார். ஒருவருமே இல்லை. கண்ணுக்குத் தென்படவில்லை. அந்த அம்மாளை ஒருவித பயம் பற்றிக் கொண்டது. உடலெல்லாம் வியர்த்தது. அந்த நடுக்கத்துடனேயே விருபாட்சி குகையை அடைந்தார்.

அப்போது ரமண பகவான், வட நாட்டிலிருந்து வந்திருந்த ஒரு சாஸ்திரியுடன் பேசிக் கொண்டிருந்தார். எச்சம்மாளின் நடுக்கத்தைக் கண்ட ஒருவர், அவரிடம் காரணத்தை விசாரித்தார். வரும் வழியில் தான் கண்டதையும் கேட்டதையும் கூறினுர் எச்சம்மாள்.



எச்சம்மாள்

அதைக்கேட்ட சாஸ்திரி, ''சுவாமி, நீங்கள் என்னுடன் இங்கே பேசிக் கொண்டிருக்கும் போதே, இந்த அம்மாளுக்கு மலேயில் தரிசனம் தருகிறீர்களே, எனக்கு மட்டும் அந்த அனுக்கிரகம் இல்லேயே'' என்று குறைப்பட்டுக் கொண்டார். அந்த பக்தரின் மனக் குறையைப் போக்குவதற்காக பகவான், ''அதெல்லாம் அவளுடைய பிரமை. எப்போதும் அவள் என்னேயே நினேத்துக் கொண்டிருப்பதால் அப்படி யெல்லாம் தோன்றுகிறது'' என்று சமாதானமாகக் கூறி விட்டார்.

தன்னலமற்ற தொண்டே எச்சம்மாளின் மதம், வழிபாடு எல்லாம். வடநாட்டு குரு ஒருவர் மனத்தை ஒருநிலேப்படுத்தி தியானத்தில் ஆழ்ந்திருக்கும் யோகத்தை அவருக்குக் கற்றுத் தந்திருந்தார். தன்னே மறந்த நிலேயில், ஒரு நாள் முழுதும் தியானத்தில் ஆழ்ந்திருப்பார். சில சமயம் அவருக்கு ஜோதி தரிசனம் ஆவதும் உண்டு. இதைப் பற்றி ஒரு நாள் எச்சம்மாள், பகவானிடம் கூறி விளக்கம் கூடக் கேட்டார். அதற்கு பகவான் ''இதெல்லாம் உனக்குத் தேவையில்லே. அந்த ஒளி தரிசனம் உன் லட்சியமாக இருக்கக் கூடாது. உன்னேயே நீ அறிந்து கொள்ள வேண்டும். அதுதான் முக்கியம்'' என்ருர். அதற்குப் பின்னர், எச்சம்மாள் ஆன்ம விசாரத்தில் தீவிரமாக மனத்தைச் செலுத்தினுர். பகவானின் அருளாசியால் 'நான் யார்?' என்பதை எளிதில் அறிந்து கொண்டு விட முடியும் என்ற நம்பிக்கை அவருள் வேரூன்றி விட்டது.

எச்சம்மாளுக்குத் தந்தையிடமிருந்து பணம் வந்து கொண்டிருந்தது. அவர் இறந்த பிறகு அந்த அம்மாளின் சகோதரர் தவருமல் பணம் அனுப்பி வந்தார். அந்தப் பணத்தை யெல்லாம் பகவானின் கைங்கரியத்திற்கே செலவு செய்தார் அந்த உத்தமப் பெண்மணி. அவர் குடியிருந்த வீட்டில் எப்போதும் பக்தர்களின் கூட்டம் இருந்துகொண்டே யிருக்கும். அவர்களே உபசரித்து, உணவளிப்பதைப் பகவானுக்குச் செய்யும் தொண்டாகவே மதித்து வந்தார் அவர்.

பகவான் எச்சம்மாளின் மீது அன்பைப் பொழிந்தார். அவரைப் பற்றி யார் குறை கூறினுலும் ஒப்புக் கொள்ள மாட்டார்.

ஒருநாள் ஆசிரமத்தின் சமையல் அறையில் பகவான் காய்கறி அரிந்து கொண்டிருந்த போது, ஒருவர் எச்சம்மாளின் சமையலேப் பற்றிக் குறை கூறினுர். உடனே பகவான் அவர் பக்கம் திரும்பி, ''இதோ பாரு,

அவ சமையல் உங்களுக்குப் பிடிக்காவிட்டால் நீங்க சாப்பிட வேண்டாம். எனக்கு அவ கொண்டு வந்து ஆசையா கொடுக்கிறது அமிர்தமாயிருக்கு. நான் ஆனந்தமா சாப்பிடறேன்'' என்று கூறினர்.

ஆசிரமத்தில் எல்லாரும் சாப்பிட உட்கார்ந்தால் பகவான் 'சாப்பிட ஆரம்பிக்கலாம்' என்று சைகை காட்டிய பிறகுதான் அனைவரும் சாப்பிடத் தொடங்குவார்கள். ஒரு நாள் எல்லோரும் பகவானின் சைகைக்காகக் காத்துக் கொண்டிருந்தார்கள். ஆனல், பகவான் கன்னத்தில் ஒரு கையும் இலையில் ஒரு கையுமாகப் பேசாமல் அமர்ந்திருந்தாரே தவிர 'சாப்பிடலாம்' என்று கூறவேயில்லை. அவர் ஏன் இப்படி இருக்கிருர் என்பது யாருக்குமே புரியவில்லை.

சற்றைக்கெல்லாம் ஒரிருவருக்குக் காரணம் விளங்கி விட்டது. எச்சம்மாள் கொண்டு வந்து வைத்திருந்த சாப்பாட்டை, பகவானுக்கும் பிறருக்கும் பரிமாற மறந்தது அப்போதுதான் அவர்களுக்கு நினைவிற்கு வந்தது. எல்லோரும் தங்கள் சாப்பாட்டைப் பற்றி நினைத்துக் கொண்டிருந்த போது, பகவான் மட்டும் அந்தத் தூய பக்தையின் அன்பு உள்ளத்தை நினைத்துக் கொண்டிருந்தார்.

எச்சம்மாளின் சாப்பாடு பரிமாறப்பட்ட பிறகுதான் 'சாப்பிடலாம்' என்று அனுமதி தந்தார் பகவான்.

ஒரு நாளா இரண்டு நாளா? முப்பத்தெட்டு ஆண்டுகள் எச்சம்மாளின் அன்புத் தொண்டு தொடர்ந்து நடைபெற்று வந்தது. ஆனல், இந்த உலகில் எந்தப் பணியும் ஒருநாள் முடிந்துதானே ஆக வேண்டும்.

1945-ம் ஆண்டு டிசம்பர் மாதம் இறுதியில் ஒரு நாள். எச்சம்மாள் சமையலை முடித்து விட்டு, பகவானுக்கும் பக்தர்களுக்கும் உணவளித்து விட்டு, வழக்கப்படி மாலையில் ஓய்வெடுத்துக் கொண்டிருந்தார். அவருக்குத் திடீரென்று உடலில் என்னவோ வேதனை செய்தது. தொண்டை வறண்டு, தாகம் எடுத்தது. தண்ணீர் அருந்தினர். ஆனல், வேதனை அடங்கவில்லை.

மார்பு படபடவென்று அடித்துக் கொண்டது. அப்படியே படுத்து விட்டார். பிறகு நடமாட்டமே இல்லை.

இரண்டு நாட்களுக்கெல்லாம் நிலைமை மோசமாகியது. பேச்சு அடங்கியது. கண்கள் செருகிக் கொண்டன. நினைவு தப்புவதும் திரும்புவதுமாக இருந்தது.

மாலை நான்கு மணி இருக்கும். அவருக்கு சரியான நினைவு இருக்கிறதா என்று அறிவதற்காக, அருகிலிருந்த ஓர் அம்மாள், ''இன்னிக்கு பகவானுக்கு சாப்பாடு போகலே'' என்று குனிந்து, எச்சம்மாளின் காதருகில் கூறினள். அப்போது சட்டென்று கண்களைத் திறந்து, ''என்ன, நிஜமாகவா?'' என்பதுபோல் இருபுறமும் வெறிக்கப் பார்த்தார் எச்சம்மாள். பெரும் துயரத்தின் சாயல் அவர் முகத்தில் படர்ந்தது. மரணத்தின் தலைவாயிலில் நின்றிருந்த நிலையிலும் அப்படியோர் அபசாரம் நடந்து விட்டதை நினைத்து வேதனைப்பட்டார் அவர். அப்போது அருகிலிருந்த

உறவினள் ஒருத்தி, ''இல்லே, அத்தை! பகவானுக்கு சாப்பாடு வழக்கப்படி கொடுத்தனுப்பியாச்சு'' என்று கூறிய பிறகுதான் எச்சம்மாள் முகத்தில் சற்று அமைதி நிலவியது.

அன்று இரவு எச்சம்மாளுக்கு சுவாசம் கண்டு விட்டது. மூச்சு விட முடியாமல் திண்டாடினர். நா குழறிப் போயிற்று. ஏதேதோ பிதற்றத் தொடங்கினர். யாரோ ஒருவர் ஓடிப்போய்ப் பகவானிடம் செய்தியைக் கூறினர். ஆசிரமத்திலிருந்த டாக்டர் வந்து பரிசோதித்துப் பார்த்தார். ஒன்றும் பயனில்லே. அவர் கையை விரித்து விட்டு, வருத்தத்துடன் திரும்பி விட்டார்.

அன்று மாலேயிலிருந்து பகவான் யாருடனும் அதிகம் பேசாமல், கண்கள் பேரருளேப் பொழிய, உடலேச் சுற்றியும் பேரொளி படர, ஆழ்ந்த தியானத்தில் ஈடுபட்டிருந்தார். அதைக் கண்ட பக்தர்கள், ஏதோ ஒரு ஜீவனேக் கடையேற்றவே பகவான் தவநிலே மேற்கொண்டிருப்பதாக நினேத்தார்கள். அன்று இரவு எச்சம்மாளின் உடல்நிலேயைப் பற்றிப் பகவானின் காதில் போட்ட கணத்திலிருந்து அந்த அம்மாளின் சிரமமெல்லாம் சிறிது சிறிதாகக் குறைந்தது. மூச்சு லேசாக இயங்க, அது மெள்ள மெள்ள அடங்கியது. தூங்குவது போலவே காணப்பட்ட எச்சம்மாள், சற்று நேரத்தில் மீளாத் துயிலில் ஆழ்ந்து விட்டார்.

எச்சம்மாளின் உடலேக் கங்கை நீரில் குளிப்பாட்டினர்கள். திருமேனிக்குத் திருநீறு பூசினர்கள். உருத்திராட்ச மாலேகளே அணிவித்தார்கள். கண்ணீருக்கிடையே, எரியூட்டினர்கள்.

எச்சம்மாளின் மறைவு விதிக்குப் பெரும் ஏமாற்றத்தை அளித்தது. இனி, அந்த அம்மாளே அது வாட்டி வதைக்க முடியாதே! துன்பமே தீண்ட முடியாதபடி தனி உலகத்திற்குத் தப்பிச் சென்று விட்டாரே!

எச்சம்மாளின் மரணச் செய்தியைக் கேட்ட பகவான், ''என்னமோ, இந்த உலகத் தொல்லேகளிலிருந்து ஒரு வழியாகப் போய்ச் சேர்ந்து விட்டாள்'' என்று கூறினர்.

அப்போது அருகிலிருந்த சூரி நாகம்மா என்ற ஆந்திர பக்தை, ''சுவாமி, இனி தினமும் சாப்பாடு வருவது நின்று விடுமே'' என்று கண் கலங்கக் கூறினர்.

''ஏன் அப்படிச் சொல்றே? அதான் முதலியார் பாட்டி இன்னும் உயிருடன் இருக்காளே'' என்று கூறினர் பகவான்.

முதலியார் பாட்டி, பகவானுக்குச் செய்து வந்த அன்புத்தொண்டு, மற்ருெரு பக்திக் காவியம்.

அலங்காரத்தம்மணி என்பவரைத்தான் எல்லோரும் அன்புடன் 'முதலியார் பாட்டி' என்று அழைத்தனர். அவர் காரைக்காலுக்கு அருகிலுள்ள தில்லேயாடியில் பிறந்தவர். தொண்டை மண்டல முதலியார் வகுப்பைச் சேர்ந்தவர். அவருடைய மகன் சுப்பையா முதலியார்; மருமகளின் பெயர் காமாட்சி அம்மாள்.

தெய்வ பக்தி நிறைந்த அந்தக் குடும்பம், அவ்வூரிலிருந்த ஒரு வயோதிக சாமியாருக்கு அன்புப் பணி புரிந்து வந்தது. ஆறுதல் மொழியும் நல்லாசியும் கூறி அவர்களுக்கு அன்பு குருவாக இருந்து வந்த சாமியாருக்கு இறுதிக் காலம் நெருங்கியதைக் கண்டு அவர்கள் மனம் கலங்கினர். சாமியார் இனி பிழைக்க மாட்டார் என்று தெரிந்ததும், அலங்காரத்தம்மணிக்கு அழுகையே வந்து விட்டது. ''சாமீ, எங்களுக்கெல்லாம் ஒரு வழி சொல்லாமெ போறீங்களே, நீங்க மறைஞ்சப்புறம் நாங்க எப்படி வாழப் போறேமோ, தெரியலையே; எங்க எதிர்காலம் எப்படி யிருக்கும், சொல்லுங்க சாமீ'' என்று மன்றாடிக் கேட்டார் அம்மணி.

உயிர் பிரியப் போகும் தருணத்தில் அந்தச் சாமியார், ''கவலைப் படாதீங்க தாயே. நீங்க அருணாசலம் போங்கம்மா. உங்களுக்கு ஒரு குறைவும் வராது'' என்று சொல்லிவிட்டுக் கண்ணை மூடினார் அவர்.

சாமியார் சொன்னதை தெய்வ வாக்காக மதித்து, அந்த அம்மாள் தன் மகனுடனும் மருமகளுடனும் திருவண்ணாமலை வந்து சேர்ந்தார். எச்சம்மாள் 1907-ம் ஆண்டு அங்கு வந்து சேர்ந்தார். மூன்று ஆண்டுகள் கழித்து 'முதலியார் பாட்டி' வந்தார். எச்சம்மாள் தினமும் ரமண பகவானுக்கு உணவு சமைத்து எடுத்துக் கொண்டு சென்றதைக் கண்ட அம்மணி, தானும் அவ்வாறே செய்ய ஆரம்பித்தார். பிள்ளையும் நாட்டுப் பெண்ணும் அவருடன் முழுமனத்துடன் ஒத்துழைத்தனர். நாள் ஆக ஆக அவர்கள் இல்லத்திலும் பக்தர் கூட்டம் பெருகத் தொடங்கியது. அங்கு வந்த அத்தனை பேருக்கும் சாப்பாடு கிடைத்தது. அலங்காரத்தம்மணியிடம் பணம் இல்லை; எல்லையற்ற அன்பு இருந்தது, பரந்த உள்ளம் இருந்தது.

சில வருடங்கள் சென்றதும், சுப்பையாவுக்கு இல்லற வாழ்க்கை கசந்து விட்டது. அருள் தொண்டு செய்து பழக்கப்பட்டவர் சமயத் தொண்டின் மீது நாட்டம் கொண்டார். திருப்பனந்தாள் மடத்திற்குச் சென்று காஷாயம் மேற்கொண்டு சந்நியாசியாகி விட்டார். வயதான தாயையும், அருமை மனைவி காமாட்சியையும் விட்டு விட்டு, தம்பிரானாகி ஊர் ஊராகச் சென்று சமயப் பணி ஆற்றி வந்தார்.

காமாட்சி அம்மாள் கணவனின் இந்த எதிர்பாராத முடிவைக் கண்டு நிலைகுலைய வில்லை. மன உறுதியுடனும் உள்ளத் தூய்மையுடனும் மாமியாருக்கு உற்ற துணையாய் நின்று, பகவானின் சேவையில் தன் துயரத்தை மறந்து வந்தாள்.

முதலியார் பாட்டி பகவானிடம் மிக உரிமையோடு பழகுவார். சாப்பாட்டைத் தானே எடுத்துக் கொண்டு போய் அவருக்குப் பரிமாறுவார். இலையில் ஒரு பிடி சோறும், கறியும் வைத்து விட்டு, ''சாப்பிடு, சாமி'' என்று அன்பொழுகக் கூறுவார்.

ஒரு நாள் பகவான், ''என்ன பாட்டி இது! இத்தனை வெச்சா நான் எப்படி சாப்பிடறது?'' என்று உரிமையுடன் கடிந்து கொண்டார். உடனே பாட்டி, ''என்ன சாமி, எவ்வளவு வெச்சுட்டேன்? கொஞ்சம் தானே

இருக்கு, சாப்பிடு'' என்று பதில் கூறினர். பகவான் விடவில்லை. ''இது மட்டும்தானு? மத்தவா கொண்டு வந்ததை யெல்லாம் சாப்பிட வேண்டாமா? என் வயத்துலே எல்லாத்துக்கும் இடம் இருக்குமா?'' என்று கேட்டார்.

''ஏன் இருக்காது? எல்லாத்துக்கும் மனசுதானே காரணம்'' என்று சட்டென்று கூறிவிட்டு அங்கிருந்து நகர்ந்து விட்டார் பாட்டி. பகவானுக்குச் சிரிப்பு வந்தது. அருகிலிருந்தவர்களிடம் ''பார்த்தேளா? என் உபதேசத்தை எங்கிட்டேயே திருப்பிச் சொல்லிட்டுப் போரு இந்தப் பாட்டி'' என்று வேடிக்கையாகக் குறிப்பிட்டார்.

முதலியார் பாட்டி திருவண்ணுமலைக்கு வந்து இருபது வருடங்கள் ஆகிவிட்டன. வயது முதிர்ச்சியால் தள்ளாடி நடக்க ஆரம்பித்தார். மருமகள் காமாட்சியும் இறந்து விட்டதால், தன்னந் தனியாகத் திண்டாடிக் கொண்டிருந்தார். கையிலே பணமும் இல்லை. பாட்டியின் நிலைமையைக் கண்டு ஆச்ரமத்திலிருந்தவர்கள் பரிதாபப்பட்டார்கள்.

பகவானின் சகோதரரான நிரஞ்சனனந்த சுவாமிகளும் குஞ்சு சுவாமிகளும், பாட்டியிடம் எத்தனையோ சொல்லிப் பார்த்தார்கள்.

''பாட்டி, உனக்கோ ரொம்ப வயசாயிடுத்து. நீ ஏன் சிரமப்பட்டு பகவானுக்கு சமைச்சுப் போட்டுண்டிருக்கே? ஆச்ரமத்திலே ரொம்பப் பேர் இருக்கா. அவா மாதிரி நீயும் இங்கேயே இருந்துடு. வேளா வேளைக் குச் சாப்பிட்டுட்டு, பகவானுக்கு எதிரே கண்ணை மூடிண்டு தியானம் பண்ணிண்டு இரேன். அப்படி உனக்கு இங்கே இருக்கப் பிடிக்கலேன்னு, நீ இருக்கிற இடத்திலேயே 'கிருஷ்ணு, ராமா'ன்னு உட்கார்ந்துண்டிரு. நாங்க தினமும் உனக்கு சாப்பாடு அனுப்பறோம்'' என்று அவர்கள் 'புத்திமதி' கூறியதைக் கேட்ட பாட்டி வருத்தப்பட்டார்.

''என்ன அப்படிச் சொல்லிட்டீங்க? என்ன கஷ்டம் வந்தாலும் நான் பகவானுக்குச் சாப்பாடு கொண்டு வந்து போடற புண்ணிய காரி யத்தை நிறுத்தவே மாட்டேன். கையிலே துட்டு இல்லேன்னு, நாலு வீட்டுக்குப் போய்ப் பிச்சை யெடுத்து, சமையல் செய்து பகவானுக்குப் போட்டு விட்டுத்தான் நான் சாப்பிடுவேன். என்னுலே சும்மா யிருக்க முடியாது'' என்று கண்கலங்கக் கூறிவிட்டு அங்கிருந்து போய் விட்டார். பாட்டியின் திட வைராக்கியத்தையும் தளராத பக்தியையும் கண்டு பிரமித்துப்போன பக்தர்கள் அவருக்கு அவ்வப்போது செலவுக்குப் பணம் கொடுத்து உதவினர்கள்.

பாட்டிக்கு வர வர கண் பார்வை மங்க ஆரம்பித்தது. கையில் தடியை ஊன்றிக் கொண்டு, தட்டுத் தடுமாறி நடந்து கொண்டிருந்தார். தாயின் இறுதிக் காலத்தில் அவளுக்குப் பணிவிடைகள் செய்யவும், அவர் ஏற்றுக் கொண்டிருந்த விரதம் நிறைவேற உதவி புரியவும், சந்நியாசி யாகச் சமயப் பணி புரிந்து கொண்டிருந்த மகன் சுப்பையா, திருவண்ணு மலைக்கு வந்து சேர்ந்தார். இனி வீடு திரும்பவே மாட்டான் என்று எந்த மகனைப் பற்றி நினைத்திருந்தாரோ, அவர் திரும்பி வந்து தன் இறுதிக்

காலத்தில் தன்னுடன் தங்கிப் பணிவிடை செய்தது பாட்டிக்குப் பெரும் ஆறுதலாக இருந்தது.

பாட்டியின் நடமாட்டம் குறைந்து கொண்டே வந்தது. கண் சுத்த மாகத் தெரியவில்லை. பகவானுக்குச் சாப்பாடு கொண்டு போகவும் அவரால் முடியவில்லை. அதனால், யார் யாரிடமோ கொடுத்து அனுப்பினார். தன் கையால் பகவானுக்குப் பரிமாற முடியவில்லையே என்று அவருக்குத் தீராத குறை இருந்தது.

ஒரு நாள் யாரோ ஒருவன் வந்து பகவான் ரொம்பவும் இளைத்து விட்டதாகப் பாட்டியிடம் கூறி விட்டான். அவ்வளவுதான். பாட்டிக்கு வீட்டில் இருப்பே கொள்ளவில்லை. தன் கையால் சாப்பாடு போடாததால்தான் பகவான் இளைத்து விட்டதாக அவர் எண்ணினார். தான் பெரிய பாவம் செய்து விட்டதாக எண்ணி வருத்தப் பட்டார்.

ஒரு நாள் சிரமப்பட்டு எப்படியோ ஆச்ரமத்திற்கு வந்து சேர்ந்தார் முதலியார் பாட்டி. பகவான் இருக்குமிடம் தேடிச் சென்று, வெகு அருகில் போய் நின்று, உற்றுப் பார்த்தார். ''அட பாவமே, உடம்பு ரொம்ப இளைச்சுப் போச்சே! அவரு சொன்னது நிஜம்தான்'' என்று மிகவும் வேதனையுடன் கூறினார். பகவான் சிரித்துக் கொண்டே, ''இல்லே, பாட்டி! உனக்கு யாரோ தப்பா சொல்லியிருக்கா. நான் சாதாரணமாகத் தானே இருக்கேன்!'' என்று சொல்லி விட்டுப் போய் விட்டார். பாட்டி சமாதானம் அடையவில்லை. தியான மண்டபத்திற்கு வந்து, பகவானுக்கு முன்னால் வெகு நேரம் அமர்ந்திருந்தார். அருகில் இருந்தவர்களிடம் பகவான் உடம்பு எப்படி இருக்கிறது என்று விசாரித்துக் கொண்டிருந்தார், பாவம்!

பகவான் எழுந்த போது, வழக்கப்படி எல்லோரும் எழுந்தார்கள். பாட்டியும் எழுந்து, மெள்ள நடந்து வாசற்படியின் அருகில் போய் நின்று கொண்டார். அங்கு வந்த பகவான் கவலையோடு பாட்டி நிற்பதைக் கண்டு, அவரெதிரில் சிறிது நேரம் நின்றார். பாட்டியின் மனத்தை அரித்த வேதனையைத் தணிக்கும் வகையில் கருணை வள்ளல் மீண்டும் கூறினார்: ''பாட்டி, நான் இளைச்சுப் போயிட்டேனுன்னு நன்னா பாரு. எத்தனை ஜோரா இருக்கேன் தெரியுமா? பாவம், உனக்குத்தான் கண் தெரியல்லையே. எப்படிப் பார்ப்பே'' என்று கூறிவிட்டு அங்கிருந்து மெள்ள நகர்ந்து விட்டார்.

எச்சம்மாள் இறந்து நான்கு ஆண்டுகளுக்கெல்லாம் முதலியார் பாட்டியும் கண்ணை மூடி விட்டார். மறைவதற்கு நான்கு மாதங்களுக்கு முன், பாட்டிக்குப் பகவானைப் பார்க்க வேண்டும் என்ற ஏக்கம் குடி கொண்டது. யாரையோ துணைக்கு அழைத்துக் கொண்டு ஆச்ரமத்திற்கு வந்தார். பகவான் இருக்குமிடத்திற்கு அவரை அழைத்துச் சென்றார்கள்.

அப்போது பாட்டியின் மகிழ்ச்சிக்கு அளவேயில்லை. தெய்வத்தையே கண்டுவிட்டது போல் பரவசமானாள். அருகிலிருந்த ஒருவர் ''பாட்டி, உனக்குத்தான் கண் கொஞ்சமும் தெரியவில்லையே, இங்கே எதுக்கு வந்தே?'' என்று கேட்டார். அதற்குப் பாட்டி அளித்த பதில், பக்தி

இலக்கணத்திற்கு ஓர் எடுத்துக் காட்டாக அமைந்தது. நடுங்கும் குரலில் அந்த எண்பது வயது மூதாட்டி கூறினர்: ''நான் பகவான் உடம்பைப் பார்க்காவிட்டால் என்ன? என் உடம்பை அவர் பார்க்கிருரே அது போதும். அந்தத் திருஷ்டி என் பாவத்தை யெல்லாம் போக்கிவிடும். எனக்கு நல்ல கதி நிச்சயம் கிடைக்கும்.''

அதில் என்ன சந்தேகம்?

எச்சம்மாளும் முதலியார் பாட்டியும் திருவண்ணமலைக்கு வருவதற்கு முன், ஏன், ரமணர் அங்கு வருவதற்கு முன்பிருந்தே, 'கீரைப்பாட்டி' என்று ஒரு பெண் ரத்தினம் இருந்தார். அவர் மலைமீது வசித்து வந்தார். அங்கிருக்கும் கீரைகளைப் பறித்து மார்க்கெட்டில் விற்று வந்தார். ரமணர் சிறுவராக, முதன் முதலில் அருணசலேச்வரர் ஆலயத்தில் இருந்த நாட்களில் கீரைப்பாட்டி வந்து பார்த்துப் போவது வழக்கம்.

ரமணர் விரூபாட்சி குகையில் வாசம் செய்து வந்தபோது, கீரைப் பாட்டி நமசிவாயர் கோயில் மண்டபத்தில் தங்கியிருந்தார். அப்போது பகவானை அடிக்கடி அவர் வந்து தரிசிப்பது வழக்கம். அவருக்கு கீரையும் காய்கறிகளும் சமைத்துக் கொண்டு வந்து கொடுப்பார்.

அவரிடம் இருந்த சொத்தெல்லாம் ஒரே ஒரு பானைதான். அதில் வெந்நீர் போட்டுக் குளிப்பார். பின்னர் அதிலேயே சமைப்பார். கீரைப் பாட்டி சமையல் செய்வதற்கு பகவானும் காய்கறிகளை நறுக்கிக் கொடுப் பார்; கீரையை ஆய்ந்து கொடுப்பார்.

கீரைப் பாட்டி, மலையிலிருந்து இறங்கிப் போய், நாலு வீடுகளுக்குச் சென்று, அரிசி, மாவு, பருப்பு எல்லாம் யாசித்துக் கொண்டு வந்து, தான் பத்திரமாக வைத்திருந்த மண் ஜாடியில் சேர்த்து வைப்பது வழக் கம். கஞ்சி தயாரித்து பகவானிடம் சென்று, ''சாமி, கீழே ஒரு அம்மா மாவு கொடுத்தாங்க. அதிலே கஞ்சி காச்சினேன், குடியுங்க'' என்று கொண்டு வந்து கொடுப்பார். அதை அமிர்தமாக நினைத்துப் பருகுவார் பகவான்.

கீரைப் பாட்டி சமையல் சாமான்களைச் சேர்த்து வைப்பது பகவா னுக்குத் தெரியும். நமசிவாயர் கோயில் மண்டபத்தில் யாரையுமே நுழைய விடமாட்டார் கீரைப்பாட்டி. ஆனல், பகவான் மட்டும் அங்கு போவார். உள்ளே போய் அந்த மண் ஜாடியில் பாட்டி என்னென்ன வைத்திருக்கிருர் என்று பார்த்து விட்டு வருவார். இந்த விஷயம் கீரைப்பாட்டிக்குத் தெரியாது.

காய்கறிகள் கிடைக்காத நாட்களில் கீரைப் பாட்டி நொந்து போய் உட்கார்ந்து விடுவார். அப்போதெல்லாம் பகவான் புளியமரத்தில் ஏறி, கொழுந்துகளைப் பறித்துக் கொண்டு வந்து கொடுப்பார். கீரைப் பாட்டி யின் புண்ணியத்தில் பகவானுக்குத் தினம் ஏதாவது ஆகாரம் கிடைத்து வந்தது. தனக்கென்று ஒன்றும் செய்து சாப்பிட மாட்டார் அந்தப் பாட்டி. ''சாமிக்குப் பிடிக்கும்'' என்று தினம் தினுசு தினுசாகச் செய்து கொண்டு வருவார்.

ஒரு நாள் இரவு பகவான் தங்குவதற்காக ஸ்கந்தாச்ரமத்திற்குச் சென்றிருந்தார். அன்பர் பழனிச்சாமி மட்டும் விருபாட்சி குகையில் தங்கியிருந்தார்.

நடு நிசி நேரம். மலைப் பிரதேசத்தில் அமைதி குடி கொண்டிருந்தது. நமசிவாயர் கோயிலிலிருந்த கீரைப் பாட்டி கூச்சல் போடுவது பகவானின் காதில் விழுந்தது.

''அண்ணாமலையானே, என்னைக் காப்பாத்து. திருடன், திருடன்'' என்று கீரைப் பாட்டி இரைச்சல் போட்டது அவருக்குத் தெளிவாகக் கேட்டது. ''பாட்டி, நான் இங்கே இருக்கேன். இதோ வந்து விட்டேன். யார்ரா அது?'' என்று சத்தம் போட்டுக் கொண்டே பகவான் ஓடி வந்தார். வரும் வழியில், பழனிச்சாமியையும் எழுப்பி, ''சத்தம் காதில் விழுந்ததா?'' என்று கேட்டார். பழனிச்சாமி ''ஏதோ சத்தம் வந்தது. கீரைப் பாட்டி தூக்கத்தில் உளறுகிறாள்னு நான் நினைச்சேன்'' என்று கூறினார். கீரைப் பாட்டியின் குரல் பகவான் காதில் மட்டும்தான் விழுந்தது. அருகிலிருந்த ஜடை சுவாமி குகையிலிருந்தவர்களுக்கோ, மாமரக் குகையிலிருந்தவர்களுக்கோ கேட்கவில்லை. கஜேந்திரனின் குரல் பரந்தாமனின் காதில் மட்டும்தானே விழுந்தது!

நமசிவாயர் கோயிலில் வந்து பார்த்தபோது அங்கு ஒருவரும் இல்லை. ''என்ன பாட்டி, சும்மா பயந்துட்டியா? திருடனையும் காணும், ஒருத்தனையும் காணுமே'' என்று விளையாட்டாகக் கேட்டார் பகவான். ''இல்லே சாமீ. அந்தத் தடிப் பசங்க வந்து என் சாமானையெல்லாம் எடுத்தாங்க. நான் கூச்சல் போடாமல் இருக்க என் வாயைக் கூடப் பொத்தினாங்க. நான் திமிறிக் கொண்டு உரக்கக் கத்தினேன். நீங்க உடனே பதிலுக்குக் குரல் கொடுத்தீங்க. அதைக் கேட்டுட்டு அந்தத் திருட்டுப் பசங்க ஓடிட்டானுங்க'' என்று மூச்சு முட்ட நடுங்கிக் கொண்டே கூறினார் அந்த மூதாட்டி. உடனே ஒரு தீப் பந்தத்தை ஏற்றிக் கொண்டு, சுற்று முற்றும் பார்த்தார் பகவான். அங்கு ஜாடி கவிழ்க்கப்பட்டு, சமையல் சாமான்களெல்லாம் சிதறப்பட்டுக் கிடந்ததைக் கண்டார். பின்னர்தான் திருடன் வந்தது உண்மைதான் என்பதும் கீரைப் பாட்டி கனவு காணவில்லை என்பதும் தெரிந்தது.

அந்தக் கீரைப் பாட்டி இறந்தபோது கண் கலங்கினார் பகவான். நாட்டின் பல பாகங்களிலிருந்து பக்தர்கள் தம்மைத் தேடி வந்து, பணிவிடைகள் செய்வதற்கு முன், பெற்ற தாயினும் மேலாகத் தம்மிடம் பரிவும் அன்பும் காட்டி, ருசியாகச் சமைத்து உணவளித்த அந்தப் புண்ணியவதியை எப்படி மறக்க முடியும்?

1926-ம் ஆண்டு அருணாசலம் பிள்ளை என்பவர் ஒரு பசுவை பகவானுக்கு அன்பளிப்பாகக் கொடுத்துவிட்டுச் சென்றார். வெள்ளிக்கிழமை அன்று வந்ததால் அதற்கு லட்சுமி என்று பெயரிட்டார்கள். சுமார் இருபத்திரண்டு வருடங்கள் அது பகவானின் பக்தையாகவே வளர்ந்தது. ஆச்ரமத்தில் லட்சுமிக்குப் பெருமதிப்பும் மரியாதையும் அளிக்கப்பட்டன. பகவான் பேசுவதையெல்லாம் லட்சுமி புரிந்து கொள்ளும். அதன்

ஆவி பிரியும் போது, பகவான் அதன் அருகில் அமர்ந்து, தம் தாய்க்கு முக்தி அளித்தது போலவே கர தீட்சை அளித்து நற்கதியருளினர். பின்னர், ஆச்ரமத்திலேயே பகவான் முன்னிலையில் லட்சுமியை அடக்கம் செய்து, சமாதி எழுப்பினர்கள். லட்சுமியின் நினைவாகப் பகவான் இயற்றிய வெண்பா சமாதிக் கட்டடத்தில் பொதித்து வைக்கப்பட்டிருக்கிறது.

லட்சுமி என்ற பசு குடியாத்தத்தில் பிறந்தது. கீரைப் பாட்டியும் குடியாத்தத்திலிருந்து வந்தவர்கள்தான். இந்தச் செய்தியைப் பகவான் தான் பக்தர்களிடம் ஒரு நாள் கூறினர். எனவே, அந்தக் கீரைப் பாட்டி தான் லட்சுமியாக மறு பிறவி எடுத்து ஆச்ரமத்திற்கு வந்திருக்க வேண்டும் என்று அவர்கள் கருதினர்கள்.

இவர்களைத் தவிர, சடைச்சி அம்மாள் என்று அழைக்கப்பட்ட ஜடிநி ஷண்முக யோகினி என்ற அம்மையார், பிரும்மசாரிணியாய்ப் பல ஆண்டுகள் திருவருணைத் திருத்தலத்தில் தங்கி, ஸ்ரீ சேஷாத்ரி சுவாமிகளுக்கும் ஸ்ரீ ரமண பகவானுக்கும் அன்புத் தொண்டு புரிந்து வந்திருக்கிறார். அவர் பாண்டிய நாட்டில் சிவகிரி என்ற இடத்தில், வேளாளர் வகுப்பில் தோன்றியவர். 'அருணசலத்திற்கு வா' என்ற அழைப்பு வந்த மறுநாளே அவரது தலைமுடி ஒற்றைச் சடையாக மாறி விட்டது.

பகவானின் உண்மை சொரூபம் தெரிந்து பலர் அருட் தொண்டு புரிய வந்தார்கள். ஒரு சிலர் அவரைப் 'பணக்கார சாமியார் என்று நினைத்து கொடுமைப் படுத்தவும் வந்தார்கள். பகவானைத் தேடிக் கொண்டு ஓர் இரவு திருடர்கள் வந்தார்கள். அவர்கள் ஆச்ரமத்திற்குள் நுழைந்து, அங்கிருந்தவர்களைத் தடி கொண்டு தாக்கினர்கள். பகவானுக்கும் இடது தொடையில் பலமான அடி விழுந்தது. அந்த நிகழ்ச்சியைப் படிக்கும்போது அன்புத் தெய்வத்தின் கருணையுள்ளம் பளிங்கு போல் தெரிகிறது.

திருச்சுழி வேங்கடராமன், பால சந்நியாசியாக அருணசலேச்வரர் ஆலயத்திலும் குருமூர்த்தத்திலும், பவழக்குன்றிலும் அமர்ந்திருந்த வரையில் அவரைத் தரிசிக்க வருபவர்கள் குறைவாகத்தான் இருந்தனர். மலை மீதுள்ள குகைகளில் அவர் வாசம் செய்யத் தொடங்கிய பிறகுதான் நிறையப் பக்தர்களும், சீடர்களும் வந்து கூடினர்கள். உணவு வகைகளும், பழங்களும், பலகாரங்களும் எடுத்து வந்து அன்புடன் அளித்தனர். பணமாகக் காணிக்கை செலுத்தும் பழக்கமும் அப்போது ஏற்பட்டதுதான்.

உலக இச்சைகளையும் சுகபோகங்களையும் துறந்து விட்டு, அருணசலம் நாடி வந்த வேங்கடராமன், ரமண பகவானுக மலர்ந்த போது, உலகப் பொருள்களை மண்ணுக்குச் சமமாக மதிக்கும் முற்றும் துறந்த முனிவராகவே காட்சி தந்தார். தம்மைத் தரிசிக்க வரும் மக்கள் பேரன் போடு கொண்டு வந்த தின்பண்டங்களைக் கொஞ்சம் ருசித்து விட்டு, மீதியை அங்கிருந்தவர்களுக்குப் பங்கிட்டுத் தந்து விடுவார். பணமாகக் கொண்டு வந்து கொடுத்தால், ஆச்ரமங்கள் அமைக்கவும், நூல்கள் வெளி

யிடவும் அதை எடுத்துக்கொடுத்து விடுவார். விருபாட்சிக் குகைத் தாழ்வாரமும், மாமரக் குகையும், ஸ்கந்தாச்ரமத்தில் உள்ள கட்டடங் களும் பக்தர்களின் காணிக்கையால் எழும்பியவைதான். ஆண்டவனின் அழைப்பை ஏற்றுத் தன்னந் தனியாகத் திருவண்ணுமலை வந்து, உடுத்தி யிருந்த ஆடைகளையும், கையிலிருந்த மூன்றரை ரூபாயையும் ஐயன் குளத் தில் விட்டெறிந்த சிறுவர் வேங்கடராமன், பின்னர் தம் கையால் பணத் தைத் தொடவேயில்லை. அவரது முயற்சி இல்லாமலே, அவர் இருந்த இடம் ஓர் ஆச்ரமமாக மாறிக் கொண்டு வந்த போதிலும், அதில் பற்றோ, பாசமோ இல்லாமல் தாமரை இலை தண்ணீர் போல் வாழ்ந்து வந்தார் அவர்.

1922-ம் ஆண்டில் அன்னை அழகம்மை மறைந்த பிறகு, மலை மீதுள்ள ஸ்கந்தாச்ரமத்திலிருந்து கீழே இறங்கி வந்து தாயாரின் சமாதிக் கோயி லுக்கு எதிரிலேயே கூரை வேய்ந்த ஓர் அறையைக் கட்டிக் கொண்டு, நிரந்தரமாகத் தங்கி விட்டார். அதையடுத்து ஓரிரு சிறு குடில்கள் தோன் றின. குளியல் அறையென்றும், சமையலறையென்றும், சாப்பிடும் அறை யென்றும் மெள்ள மெள்ள வளர்ந்த அந்த இடம்தான் தற்போது பெரிய கட்டடங்களுடன் கூடிய ரமணுச்ரமமாகக் காட்சி தருகிறது.

ரமணுச்ரமத்தின் ஆரம்ப நாட்களிலேயே வருவோரும் போவோரு மாக ஆச்ரமம் கலகலப்பாக இருக்கும். அங்கு ஏழைகளுக்கு அன்னம் அளிக்கப்படும். தினமும் நாற்பது ஐம்பது பேர் சாப்பிடுவார்கள். இதை யெல்லாம் பார்த்து விட்டு, அந்த ஆச்ரமத்திற்கு நிறையச் சொத்துகள் இருப்பதாகச் சிலர் நினைத்ததில் ஆச்சரியமில்லை.

சாமியார் கோவணுண்டியாக இருந்தாலும், தம்மைத் தரிசிக்க வருபவர்களிடமிருந்து அவர் ஏராளமான பணம் சம்பாதித்துச் சேர்த்து வைத்திருப்பதாகச் சில திருடர்களும் நினைத்தார்கள். கேட்டால் சாமியார் கொடுக்க மாட்டார் என்று நினைத்து, இரவில் வந்து கொள்ளை அடித்துச் சென்று விடுவது என்று அவர்கள் திட்டமிட்டார்கள்.

ரமண பகவான் மலைமீதிருந்து இறங்கி வந்த இரண்டு ஆண்டுகளுக் குப் பிறகு ஓரிரவு திருடர்கள் தாயாரின் சமாதிக் கோயிலுக்குள் கன்னம் வைத்து நுழைந்தனர். அங்கிருக்கும் சில பொருள்களைத் திருடிக்கொண்டு யாருக்கும் தெரியாமல் ஓடி விட்டனர். அங்கு பணம் கிடைக்காதது அவர்களுக்குப் பெரும் ஏமாற்றமாக இருந்தது. ஆச்ரமச் சொத்தெல் லாம் முன் அறையிலுள்ள பீரோவில்தான் இருக்கும் என்று அவர்கள் முடிவு செய்தார்கள். எனவே, ஒரு வாரம் கழித்து, இரண்டு மூன்று பேராக, பெரும் ஏற்பாட்டுடன் ஆச்ரமத்திற்குள் நுழைந்தார்கள்.

அப்போது நடுநிசியாகி விட்டது. அந்த அறையிலிருந்த ஒரு மேடை யில் பகவான் படுத்துக் கொண்டிருந்தார். ஜன்னல்களுக்குக் கீழே நாலைந்து சீடர்கள் உறங்கிக் கொண்டிருந்தனர்.

வெளியே ஒரு குரல் கேட்டது: ''டேய், உள்ளே அஞ்சாறு பேர் படுத்துக்கிட்டிருக்காங்கடா''

குரல் கேட்டு அங்கு படுத்திருந்த குஞ்சு சுவாமியும் மஸ்தான் சுவாமியும் விழித்துக் கொண்டு விட்டார்கள். மஸ்தான் மிரட்டும் குரலில், ''யார்ரா அது?'' என்று கேட்டார். பதிலில்லை. சற்றைக்கெல்லாம் யாரோ ஜன்னல் கண்ணாடியை உடைக்கும் சத்தம் கேட்டது. உள்ளே இருப்பவர்களைப் பயமுறுத்த வேண்டும் என்று திருடர்கள் அப்படிச் செய்தார்கள். உடனே குஞ்சு சுவாமியும் மஸ்தான் சுவாமியும் பகவான் இருந்த மேடைக்கு அருகில் சென்றார்கள். அதற்குள் திருடர்கள் ஓடிச் சென்று மேடைக்கு அருகில் இருந்த ஜன்னல் கண்ணாடியையும் நொறுக்கினார்கள். அந்தச் சத்தத்தில் விழித்துக் கொண்ட பகவான் எழுந்து அமர்ந்தார். அவர் உள்ளத்திலோ முகத்திலோ ஒருவித பதட்டமுமில்லை.

ஏதோ விஷமத்தனம் நடக்கிறது என்று ஊகித்து விட்ட குஞ்சு சுவாமி வடப்புறமிருந்த கதவை மெள்ளத் திறந்து கொண்டு வெளியே போனார். அடுத்த குடிலில் படுத்திருந்த ராமகிருஷ்ணன் என்ற சீடரை எழுப்பி, உதவிக்கு அழைத்து வந்தார்.

இதற்குள் ஆச்ரமத்தில் வளர்ந்து வந்த இருநாய்கள் குரைத்துக் கொண்டே வெளியே பாய்ந்து வந்தன. இதயமற்ற அந்தத் திருடர்கள் அந்த நாய்களைத் தடியாலும் கல்லாலும் அடித்துத் துன்புறுத்தினார்கள். வலி தாங்காமல் ஊளையிட்டுக் கொண்டே ஒரு நாய் மீண்டும் அறைக்குள் ஓடி வந்து விட்டது. மற்றொன்று, உயிருக்குப் பயந்து எங்கோ ஓடி மறைந்து விட்டது.

குஞ்சு சுவாமிகள் அறைக்கு திரும்பி வந்த பிறகு, திருடர்களைப் பார்த்து, ''ஏம்ப்பா வீணா கலாட்டா பண்றீங்க?'' இங்கே ஒண்ணுமில்லை. வேணுமானால் வந்து பார்த்துக்கோங்க'' என்று மன்றாடினார். பகவானும், ''உள்ளே வந்து உங்களுக்கு வேண்டியதை எடுத்துப் போங்கள்'' என்று நிதானமாகக் கூறினார். அதையெல்லாம் திருடர்கள் சட்டை செய்வதாக இல்லை. கையிலிருந்த கடப்பாரையினால் ஜன்னலைப் பெயர்க்கத் தொடங்கினார்கள். குஞ்சு சுவாமிக்குக் கோபம் வந்தது. ''டேய் என்னான்னு நினைச்சீங்க? இப்போ நீங்க போகாட்டா, நல்லா உதை விழும்'' என்று மிரட்டிக் கொண்டே தென்புறமுள்ள வாசற்படி வழியே வெளியே செல்ல முயன்றார். ஆனால், பகவான் அப்படிச் செய்யக்கூடாது என்று கூறி அவரைத் தடுத்து விட்டார்.

**''அவர்கள் தர்மத்தை அவர்கள் செய்யட்டும். நம்ம தர்மத்தை நாம் காப்போம். அவர்கள் செய்ய நினைப்பதைச் செய்யட்டும். பொறுமையுடனும் சாந்தமுடனும் இருக்க வேண்டியது நம் கடமை. அவர்களைத் தடுக்க வேண்டாம்'' என்று கருணாமூர்த்தி உபதேசம் செய்தருளினர். அடுத்த கணம் சீடர் பரம சாதுவாகி விட்டார். வாயைக் கூடத் திறக்க வில்லை.**

தத்துவோபதேசம் பெற்றுப் போகவா திருடர்கள் ஆச்ரமத்திற்கு வந்தார்கள்? பகவானின் அருள்மொழி, அவர்களது கல் நெஞ்சைக்

கரைக்கவில்லை. கையிலிருந்த வெங்காய வெடியை எடுத்து ஜன்னலின் மீது வீசினார்கள். தங்களிடம் துப்பாக்கிகூட இருப்பதாகப் பிறர் நம்ப வேண்டும் என்பதுதான் அவர்களது எண்ணம்! அந்த நிலையிலும் பகவான் ''உள்ளே வந்து, வேண்டியதை எடுத்துச் செல்லுங்கள்'' என்று அன்போடு கூறினார். அதை அவர்கள் கேட்பதாக இல்லை. மாறாக, குஞ்சு சுவாமியின் மீது பழி தீர்க்கப் போவதாக இரைச்சல் போட்டார்கள். பகவானுக்கு ஆபத்து நேர்ந்து விடப் போகிறதே என்று பயந்த குஞ்சு சுவாமி, அறையை விட்டு வேகமாக வெளியே வந்தார். வயல்களைக் கடந்து, போலீஸ் உதவியை நாடி ஊருக்குள் சென்றார்.

குஞ்சு சுவாமி சென்றதும் ராமகிருஷ்ணன் திருடர்களைப் பார்த்து, ''உங்களை நாங்கள் தடுக்க வில்லை. உங்களுக்கு என்ன வேண்டும், சொல்லுங்கள். எடுத்துத் தருகிறோம்'' என்று கூறினார். அதற்கும் திருடர்கள் மசியவில்லை. ''இந்தக் கூரையை இப்போது கொளுத்தப் போகிறோம்'' என்று கூச்சல் போட்டார்கள். அதைக் கேட்ட பகவான் ''அப்படியெல்லாம் செய்யாதீர்கள். நாங்கள் வேண்டுமானால் இங்கிருந்து போய் விடுகிறோம்'' என்று கூறினார். அவர்கள் எதிர்பார்த்ததும் அதுதானே! உடனே ஒப்புக் கொண்டார்கள். ஆனால், கறுப்பன் என்ற நாயைத் தனியே விட்டுச் செல்ல அந்தக் கருணை வள்ளலின் மனம் இடம் தரவில்லை. அதை அடித்துக் கொன்றுவிடப் போகிறார்களே என்று ராமகிருஷ்ணனை அழைத்து நாயை வேறோர் இடத்திற்கு எடுத்துப் போகும்படி கூறினார். பின்னர் தங்கவேலுபிள்ளை, மஸ்தான், முனுசாமி ஐயர் மூவருடன் மகரிஷி அந்த அறையை விட்டு வெளியேறினார்.

அப்போதாவது அந்தப் பாவிகள் பேசாமல் இருக்கக் கூடாதா? மிருக வெறி அவர்களைப் பற்றிக் கொண்டது. எல்லோரையும் தடி கொண்டு தாக்கினார்கள் அந்தக் கயவர்கள். ஈ எறும்புக்குக் கூட தீங்கு நினைக்காத அகிம்சா மூர்த்தியின் இடது தொடையிலும் கல்நெஞ்சன் ஒருவன் தடி கொண்டு தாக்கினான். பகவானுக்கு நன்றாக வலித்திருக்க வேண்டும். 'ஐயோ' 'அப்பா' என்று அவர் கத்தவில்லை. அடித்த திருடர்களை 'அட பாவிகளா' என்று தூற்றவுமில்லை. 'ஒரு கன்னத்தில் அடித்தால் மறு கன்னத்தைக் காட்டு' என்று கூறிய ஏசுநாதரைப் போலவே ரமண மகரிஷியும் புன்முறுவலோடு அன்பு வார்த்தைகள் மொழிந்தார்: **அப்பா, உங்களுக்கு இன்னும் திருப்தி ஏற்படாவிட்டால் என் மற்றொரு காலிலும் அடியுங்கள்.**

அந்தக் கொடுமையாளர்கள் பகவானை மீண்டும் தாக்கத் தயாராகி விட்டனர். நல்லவேளையாக ராமகிருஷ்ணன் இடைமறித்து தன் மீது அடிகளைத் தாங்கிக் கொண்டு, மகரிஷியைக் காப்பாற்றி, பக்கத்திலிருந்த குடிசைக்கு அழைத்துச் சென்றார்.

''இதோ பாருங்க. அங்கேயே 'கம்'முன்னு உட்கார்ந்துகிட்டிருங்க. எழுந்திருச்சீங்கன்னா, மண்டையைப் பொளந்துடுவோம்'' என்று திருடர்கள் எச்சரித்துவிட்டு அறைக்குள் புகுந்தனர்.

சற்றைக்கெல்லாம் திருடர்களில் ஒருவன் ஓடி வந்து, ''உள்ளே ஒரே இருட்டாக இருக்கிறது. ஒரு ஹரிக்கேன் விளக்கு வேண்டும்'' என்றான்.

விளக்கை எடுத்துக் கொடுக்கும்படி ராமகிருஷ்ணனிடம் கூறினூர் மகரிஷி. அதைப் பெற்றுச் சென்றவன் மீண்டும் ஓடி வந்தான். ''சாமீ, பீரோவை எப்படித் திறக்கிறது? கொத்துச் சாவியைக் கொடுங்க'' என்று உரிமை யுடன் கேட்டான். மகரிஷி அதையும் எடுத்துக் கொடுக்கச் சொன்னூர். ஆனூல், கொத்துச் சாவி குஞ்சு சுவாமியிடம் இருக்கிறது என்று தெரிந்த தும் அவர் வந்ததும் வாங்கித் தருவதாகக் கூறினூர். திருடர்களுக்கு சாதுக்களைப் போல் பொறுமை இருக்குமா? அவர்கள் காத்திருக்கத் தயாராயில்லை.

பீரோவை உடைத்தனர். அதில் ஆயிரக் கணக்கில் பணம் இருக்கும் என்று நினைத்தவர்கள் ஏமாந்தார்கள். பிள்ளையாருக்கு அணியும் வெள்ளி விபூதிப் பட்டை, கொஞ்சம் அரிசி, மாம்பழங்கள், ஒரு கத்தி இவைதான் அவர்களுக்குக் கிடைத்த பொருட்கள். இவற்றைத் தவிர தங்கவேலு பிள்ளையின் ஆறு ரூபாய் பணமும் இருந்தது. இத்தனை ஆர்ப்பாட்டங் களுக்கும் அடி, உதை, குத்துக்களுக்குப் பின்னும் அவர்களுக்குக் கிடைத்தது இத்தனை தான்! ஏமாற்றம் ஒருபுறம், கோபம் ஒருபுறம். நேரே பகவானிடம் வந்தார்கள். ''சாமீ, உங்க பணத்தையெல்லாம் எங்கே மறைச்சு வைச்சிருக்கீங்க, சொல்லுங்க'' என்று ஆத்திரத்துடன் கேட்டனர். மகரிஷி சிரித்தார். ''பணமா? எனக்கு ஏதப்பா பணம்? நாலு பேர் கொடுக்கிற பிச்சையிலே பிழைத்துக் கொண்டிருக்கும் சாதுக்கள் நாங்கள்'' என்று சாந்தமாக மொழிந்தார் மகரிஷி. அவர் கூறியதை அவர்கள் நம்பத் தயாராயில்லை. மீண்டும் மீண்டும் அதே கேள்வியைக் கேட்டனர். உறுமிக் கொண்டே மீண்டும் அந்த அறைக்குள் நுழைந்தனர்.

சீடர்களுக்குக் காயம்பட்டதைக் குறித்து வருந்தினூர் மகரிஷி. அவர்களுக்கு மருந்து போடச் சொன்னூர். ராமகிருஷ்ணன் மகரிஷியின் தொடையில் இருந்த வீக்கத்தைப் பார்த்துக் கண் கலங்கினூர். ''சாமி, மருந்து போட்டுக்கலையா?'' என்று கேட்டதற்கு, மகரிஷி சிரித்துக் கொண்டே ''என்னை அடிக்கவில்லையே! பூசைதானே போட்டார்கள்'' என்று இரு பொருள்படக் கூறினூர்.

ராமகிருஷ்ணனூல் ஆத்திரத்தை அடக்க முடியவில்லை. அவருக்கு உடலெல்லாம் துடித்தது. ஓர் இரும்புத் தடியைக் கையிலெடுத்துக் கொண்டு, ''சாமீ, அங்கே போய் அவங்க என்ன செய்யறுங்கன்னு பார்த்துட்டு வரட்டுமா?'' என்று கோபத்துடன் கேட்டார். சீடரின் மனக் கொதிப்பைப் புரிந்து கொண்ட மகரிஷி, வன்முறையில் இறங்கக் கூடாது என்று உபதேசம் செய்தார்:

**''நாமெல்லாம் சாதுக்கள். நம்ம தர்மத்தை விட்டு விடக்கூடாது. நீ அவர்களை அடித்து, யாராவது இறந்து விட்டால், உலகம் நம்மைத்தான் தூற்றும். அவர்கள் ஒன்றும் தெரியாத சிறுவர்கள். அறியாமையால் எதையோ செய்கிறூர்கள். நம் பற்கள் நம் நாக்கைக் கடித்து விட்டால் கோபங்கொண்டு பற்களை உடைத்து விடுகிறோமா?''**

திருடர்கள் சென்ற பிறகு குஞ்சு சுவாமிகள் மணியக்காரருடனும் இரண்டு போலீஸ்காரர்களுடனும் வந்து சேர்ந்தார். போலீஸ் சேவகர்கள் மகரிஷியை விசாரித்தனர். அவர் எதுவுமே சொல்ல மறுத்து விட்டார். ''ஏதோ அறியாதவர்கள் ஆச்ரமத்திற்கு வந்து எதையோ எடுத்துக்கொண்டு போனார்கள். பாவம், அவர்கள் எதிர்பார்த்த பணம் கிடைக்காமல் ஏமாந்து போனார்கள்'' என்று மட்டும் கூறினார்.

ஆனால், சீடர்கள் மணியக்காரரிடம் நடந்தவற்றை யெல்லாம் கூறி, பகவானுக்கு அடி விழுந்ததைக் கண்ணீருக்கிடையே விவரித்தார்கள். மனம் வருந்திய மணியக்காரர், போலீஸ் ஸ்டேஷனுக்குச் சென்று 'கேஸ்' எழுதி வைத்து விட்டுப் போனார்.

மறுநாள் பெரிய போலீஸ் அதிகாரிகளெல்லாம் வந்து மீண்டும் பகவானிடம் முதல் நாள் இரவு நடந்தவற்றைப் பற்றி விசாரித்தார்கள். தமக்கு அடி விழுந்ததைப்பற்றி அப்போதும் அவர் வாயைத் திறக்கவே யில்லை. திருடர்களைப் பற்றியும் கோபமாகப் பேசவில்லை.

அருட் பெருஞ் சோதியான ரமண பகவானின் தனிப் பெருங் கருணை யைக் கண்டு அனைவரும் வியந்தனர்.

ஒரு வாரத்திற் கெல்லாம் அத் திருடர்கள் பிடிபட்டனர். அவர் களுக்கு உரிய தண்டனையும் அளிக்கப்பட்டது.

வந்தவர்கள் திருடர்கள் அல்ல;

இன்னா செய்தாரை ஒறுத்தல்—அவர்நாண
நன்னயஞ் செய்து விடல்.

என்ற குறளுக்கு இலக்கணமாகத் திகழ்ந்த ரமண மகரிஷியின் மகிமையை உலகிற்கு எடுத்துக் காட்ட வந்த பக்தர்களாகவே அவர் களை நினைக்க வேண்டியிருக்கிறது.

ஸ்ரீ ரமண மகரிஷி ஆச்ரமம் அமைத்து ஆயிரக்கணக்கில் சொத்து சேர்த்து வைத்திருப்பதாக நினைத்துக் கொள்ளையடிக்க வந்த திருடர்கள், ஏமாற்றத்துடன் திரும்ப வேண்டியதாயிற்று. ஆனால், மகரிஷியிடம் குவிந்திருந்த ஞானச் செல்வத்தைத் தேடி வந்த அன்பர்கள் எவருமே ஏமாற்றத்துடன் திரும்ப வில்லை. பகவானிடம் அத்தகைய குறையாத செல்வம் இருந்ததை அறிந்து, முதன் முதலில் உலகிற்கு எடுத்துச் சொன்னவர் ஸ்ரீ சேஷாத்ரி சுவாமிகளாவார்.

முதலியார் பாட்டியும் அவரது மகனான சுப்பய்யா முதலியாரும் ரமண மகரிஷிக்குத் தொண்டு புரிந்து வந்தது போலவே சேஷாத்ரி சுவாமி களுக்கும் தங்களால் இயன்ற பணிவிடைகள் செய்து வந்தனர். சுவாமிகள் இருந்த இடத்தைத் தேடிக் கண்டு பிடித்து, அவருக்கு உணவு அளித்து வந்தனர்.

சுப்பய்யாவை உலக வாழ்க்கையிலிருந்து திருப்பி, அவரைத் தெய்வ சிந்தனையில் ஈடுபடச் செய்ய வேண்டும் என்று சேஷாத்ரி எண்ணினார். ஒரு நாள் அவரை வழி மறித்து, ''இதோ பாரு, மலை மேலே இருக்கிற என் தம்பி பத்தாயிரம் ரூபாய் சம்பாதிக்கிறான். நான் ஆயிரம் ரூபாய்

சம்பாதிக்கிறேன். நீ ஒரு நூறு ரூபாயாவது சம்பாதிக்கக் கூடாதா, பிரும்மஹத்தி'' என்று கடிந்து கொண்டார் சுவாமிகள்.

தம் தம்பியென்று ரமண மகரிஷியைத்தான் குறிப்பிடுகிறார் என்றும், ஆன்ம செல்வத்தை நாடும்படித் தன்னைத் தூண்டுகிறார் என்றும் புரிந்து கொண்ட சுப்பய்யா, ''சுவாமி, எனக்கு இதுக்கெல்லாம் நேரம் இல்லே. நிலத் தகராறு விஷயமா கோர்ட்டிலே கேஸ் நடக்குதுங்க. அதுக்குப் போய் வரத்தான் நேரம் சரியாயிருக்குது'' என்றார். சேஷாத்ரி விடவில்லை. 'பிரும்மஹத்தி' 'பிரும்மஹத்தி' என்று சொல்லிக் கொண்டே போய் விட்டார். ஒன்றுமே புரியாத முதலியார், நேரே மகரிஷியிடம் சென்று நடந்ததைக் கூறினார்.

அதைக் கேட்டு மகரிஷி புன்முறுவல் பூத்தார். ''சுவாமிகள் சொன்னது உண்மைதான். ஆன்ம விசாரம் செய்து, நீ பரப்பிரும்மத்தின் சொரூபம் என்பதை அறிந்து கொள்ளத் தவறி விட்டால் நீ பிரும்மத்தைக் கொன்ற பாவத்திற்கு ஆளாகிறாய்'' என்று விளக்கினார்.



ஸ்ரீ சேஷாத்ரி சுவாமிகள்
(இறுதிக் காலத் தோற்றம்)

சேஷாத்ரி சுவாமிகள் சாதாரணமாகப் பக்தர்கள் கண்களுக்கு அகப்படமாட்டார். அப்படி அகப்பட்டாலும் உபதேச மொழிகள் கூறுவது மிக மிக அபூர்வம். ஆனால், ரமணருடைய பக்தர்கள் தம்மிடம் வந்தால், மிகவும் சந்தோஷப்படுவார். அவர்கள் உயர் நிலை எய்துவதற்காக இரண்டு வார்த்தைகளாவது பேசி அனுப்புவார்.

லட்சுமியம்மாள் என்ற பெண்மணி திருவண்ணாமலைக்கு வந்து, மலையிலிருந்த ரமண மகரிஷிக்கு ஒரு வாரம் வரை தொண்டு புரிந்துவிட்டு ஊருக்குப் புறப்படத் தயாரானாள். ஆனால், சேஷாத்ரி சுவாமிகளைத் தரிசிக்காமலே செல்ல வேண்டியிருக்கிறதே என்ற வருத்தம் அந்த அம்மாளுக்கு. அதை எச்சம்மாளிடம் தெரிவித்தாள். ''ஒரு வாரமாக இங்கே இருந்தும் என்னால் சேஷாத்ரி சுவாமிகளைத் தரிசிக்கவே முடியலே. எங்கேயெல்லாமோ சுற்றினேன். அவர் என் கண்களுக்குத் தென்படவேயில்லை'' என்று குறைப்பட்டுக் கொண்டாள். மறுநாள் லட்சுமியம்மாள் ரமணாச்ரமம் செல்லும் வழியில் கோயிலுக்குச் சென்றாள். அங்கே சுவாமிகள் இருப்பதைக் கண்டு, கீழே விழுந்து கும்பிட்டாள். 'இந்த மகானுக்குச்

சேவை செய்ய எனக்குக் கொடுத்து வைக்கவில்லையே' என்று மனத்திற் குள் நினைத்துக் கொண்டாள். அவ்வளவுதான்! பிறர் மனத்தில் உள்ளதை அப்படியே அறியும் சக்தி வாய்ந்த சேஷாத்ரி சுவாமிகள், ''இங்கே என்றால் என்ன, அங்கே என்றால் என்ன?'' என்று கூறியபடி சென்று விட்டார்.

சோமசுந்தர சுவாமி என்பவர் ரமணரின் சீடர். ரமணாச்ரமத்தில் எதிர்பார்த்த சாந்தி கிடைக்காததால், அவர் ரமணரை விட்டு ஒரு வாரம் தனியாக இருந்தார். வேறு யாரிடமாவது சென்றால்தான் தனக்கு நல்லுபதேசம் கிடைக்கும் என்றும், ஞான மார்க்கத்திற்கு வழி பிறக்கும் என்றும் நினைத்துக் கொண்டே நடந்து கொண்டிருந்தவரின் எதிரில் சேஷாத்ரி சுவாமிகள் வந்தார். சற்று ஒதுங்கி நின்று கும்பிட்ட சோம சுந்தர சுவாமியைப் பார்த்து சுவாமிகள்,''ரமணர்கிட்டே போ'' என்றார்-தன் மனத்திலுள்ளதைச் சொல்ல முயன்றார் சோமசுந்தரம். அதை மிகத் தெளிவாக அறிந்திருந்த சேஷாத்ரி அழுத்தந் திருத்தமாக, ''போ...போ, போ...ரமணர் கிட்டே போ. இங்கே நிக்காதே''...... என்று கூறி அவரை விரட்டினார்.

சிதம்பரத்தைச் சேர்ந்த பக்தர் ஒருவருக்கு கஞ்சா சாப்பிடும் பழக்கம் இருந்தது. அதைச் சாப்பிட்டால், ஆன்ம விசாரத்தில் உன்னத அனுபவங்களைப் பெறலாம் என்று அவர் நினைத்திருந்தார். அந்தப் பழக்கம் அவரிடம் இருப்பதை அறிந்த மகரிஷி, அது தவறு என்றும், அந்த மருந்து சாப்பிடுவதை நிறுத்தி விடும்படியும் கூறினார். மகரிஷியின் அறிவுரையைக் கேட்காமல் ஒரு நாள் அந்த மருந்தைச் சாப்பிட்டு விட்டு ரொம்பவும் திண்டாடினார் அந்த பக்தர். பேரின்ப நிலை எய்துவதற்குப் பதிலாக அவர் கெட்ட எண்ணங்களுக்கு அடிமையானார். 'என்ன செய்வது?' என்று புரியாமல் கோயில் மண்டபத்தில் அமர்ந்திருந்த சேஷாத்ரி சுவாமிகளின் எதிரில் போய் நின்றார். உடனே சுவாமிகள் அவரைப் பார்த்து, ''நான் அப்பொழுதே இந்த மருந்தைச் சாப்பிடாதே என்று உன்னிடம் சொன்னேன், கேட்டாயா? ஏன் சாப்பிட்டு விட்டு இப்படி அவஸ்தைப்படறே'' என்று கோபித்துக் கொண்டார்.

அந்த பக்தருக்கு ஆச்சரியம் தாங்க முடியவில்லை. இதற்கு முன் சேஷாத்ரி சுவாமிகள் அவருக்கு அப்படியோர் அறிவுரை கூறியதேயில்லை. மகரிஷிதான் கூறியிருந்தார். தாமும் மகரிஷியும் ஒருவரேதான் என்பதைச் சுவாமிகள் தனக்கு எடுத்துக் கூறியதாகவே நினைத்தார் அந்த அன்பர்.

ஏ. வி. அய்யர் என்ற ரமண பக்தர் மகரிஷியைக் காணச் செல்ல வேண்டும் என்ற எண்ணத்துடனேயே, சேஷாத்ரி சுவாமிகள் எதிரில் போய் நின்று கொண்டிருந்தார். அதை உடனே அறிந்து கொண்டு விட்ட சுவாமிகள் ''மகரிஷிகள் தரிசனம் பரம பாவனம்'' என்று அவரைப் பார்த்துக் கூறினார்.

முற்றும் துறந்த இவ்விரு ஞான வைராக்கிய சீலர்கள் அடிக்கடி சந்தித்துக் கொண்டார்கள். விருபாட்ச குகையில் ரமணர் தங்கியிருந்த

போது சேஷாத்ரி சுவாமிகள் அங்கு வருவார். இருவரும் சேர்ந்தே சாப்பிடுவார்கள். இவ்விரு மகான்களும் கண்களாலேயே பேசிக் கொள்ளும் அற்புதக் காட்சியைக் கண்டு புண்ணியம் பெற்றவர்களும் உண்டு.

ஒரு சமயம் இருவரும் வாய்விட்டு நேருக்கு நேர் பேசிக் கொண்டதை வாசுதேவ சாஸ்திரி என்பவர் அருகிலிருந்து கேட்கும் பாக்கியத்தைப் பெற்ருர்.

மௌனமாக அமர்ந்திருந்த ரமணரையே உற்று நோக்கிக் கொண்டிருந்தார் சேஷாத்ரி சுவாமிகள். பிறர் மனத்திலுள்ளதை ஒரு நொடியில் அறிந்து கொள்ளும் ஆற்றல் பெற்றிருந்த சுவாமிகளுக்கு அன்று ரமணரின் மன ஓட்டத்தை ஆராய முடியவில்லை. மகரிஷியைச் சுட்டிக் காட்டி ''இது என்ன நினைக்கிறதோ, தெரியவில்லையே'' என்ருர்.

ஆனல், மகரிஷியின் மௌனம் கலையவில்லை. சேஷாத்ரியே தொடர்ந்து பேசினர். ''அருணசலேச்வரரை வணங்கினல் நற்கதி கிடைக்கும்'' என்ருர்.

அப்போது மகரிஷி, மௌனத்தைக் கலைத்து ''வணங்குகிறவன் யார்? வணங்கப்படுகிறவன் யார்?'' என்று சேஷாத்ரியைப் பார்த்துக் கேட்டார்.

சேஷாத்ரி இடியிடியென்று சிரித்துக் கொண்டே, ''அதுதானே சரியாப் புரியலே'' என்று சொன்னர்.

அதன் பின்னர் ரமண பகவான் அத்வைத தத்துவத்தைப் பற்றி ஒரு மணி நேரம் பேசினர். உலகமும் கடவுளும் தனி மனிதனின் ஆத்மாவும் பிரும்மமே என்றும், அதைத் தவிர இரண்டாவது வஸ்து கிடையாது என்றும் விளக்கினர்.

எல்லாவற்றையும் கேட்டுக் கொண்டிருந்த சேஷாத்ரி சுவாமிகள், ''அது என்னமோ, இதெல்லாம் எனக்குப் புரியவே இல்லை. எனக்குப் பக்திதான் முக்கியம். நான் சுவாமிக்கு நமஸ்காரம் பண்றேன்'' என்று சொல்லி விட்டு, அண்ணுமலையின் சிகரத்தை நோக்கிப் பதினைந்து முறை கீழே விழுந்து கும்பிட்டுவிட்டு மலையிலிருந்து இறங்கிப் போய் விட்டார்.

மகரிஷியைப் போன்றே சேஷாத்ரி சுவாமிகளும் எல்லா ஜீவராசிகளையும் ஜடப் பொருள்களையும் பிரும்ம சொரூபமாகவே கண்டு ஆனந்தித்து, எந்நேரமும் சச்சிதானந்த நிலையிலேயே லயித்திருந்தார் என்பதில் சந்தேகமில்லை.

ஒரு சாதாரண நிகழ்ச்சி இந்த உண்மையை மிக நன்ருக விளக்குகிறது.

திருவண்ணுமலை அக்கிரஹாரத்தில் நடந்து வந்து கொண்டிருந்த சேஷாத்ரி சுவாமிகள் சட்டென்று நின்று, அங்கு கட்டப்பட்டிருந்த ஓர் எருமைக் கடாவை வைத்த கண் வாங்காமல் முறைத்துப் பார்த்துக்

கொண்டிருந்தார். அருகிலிருந்த ஒருவர், ''சாமி எதைப் பார்த்துக் கொண்டிருக்கு?'' என்று கேட்டார்.

''இதைப் பார்த்துக் கொண்டிருக்கிறேன்'' என்ருர் சேஷாத்ரி.

''சாமி இந்த எருமையையா பார்த்துக் கொண்டிருக்கு?'' என்று சற்று ஏளனமாகக் கேட்டார் அவர்.

உடனே சேஷாத்ரி அங்கு நின்றிருந்த மற்ெறாருவரைப் பார்த்து ''இது என்ன சொல் பார்க்கலாம்'' என்ருர்.

உடனே அவர், ''இது ஒரு எருமை மாடு'' என்ருர்.

அதைக் கேட்டதும், ''எருமையா? எருமையா? சே, பிரும்மம்னு சொல்லு'' என்று கூறிவிட்டு வேகமாக நடந்து சென்ருர் சுவாமிகள்.

நடனனந்தர் என்ற நடேச முதலியார், ஆரம்பப் பள்ளி ஆசிரியர். ஞான மார்க்கத்தை நாடி திருவண்ணுமலைக்கு வந்தவர். அவர் ரமண மகரிஷியிடம் சென்று சரணடைந்தார். ஆனுல், அவருக்குக் குருவருள் கிட்டவில்லை. அவர் விரும்பிய ஆசியோ உபதேசமோ கிடைக்கவில்லை. மனமுடைந்து போயிருந்தவரிடம் ஒருவர், ''நீங்கள் சேஷாத்ரி சுவாமி களைத் தரிசித்து முதலில் அவருடைய ஆசியைப் பெறுங்கள். அவர் ஒருவரையும் அருகில் சேர்க்க மாட்டார். விரட்டியடித்து விடுவார். அப்படிப் பட்டவரிடம் அனுக்ரஹம் கிடைத்தால், அதையே நல்ல சகுனமாக நினைத்து மீண்டும் ரமணரிடம் செல்லுங்கள்'' என்று கூறி யிருந்தார்.

வெகு நாட்கள் சுவாமிகளைத் தேடி அலைந்து, கடைசியில் ஒரு நாள் அவர் இருக்கும் இடம் அறிந்து அங்கு சென்று தன் எண்ணத்தை வெளி யிட்டார் நடேச முதலியார்.

அதைக் கேட்ட சேஷாத்ரி சுவாமிகள், ''குழந்தே! ஏன் மனத்தைப் புண்படுத்திக் கவலைப்பட வேண்டும்? ஞானம் என்ருல் என்ன? எது அநித் யமோ அதை யெல்லாம் புத்தியால் நீக்கிய பிறகு, எது நீக்க முடியாமல் மிஞ்சுகிறதோ அதுதான் ஞானம். மலையேறிப் போனுல்தான் ஞானம் வரும், குகையில் போனுல்தான் ஞானம் வரும் என்று அங்கும் இங்கும் அலைவது பைத்தியக்காரத்தனம்......பயப்படாதே போ'' என்று ஆசி வழங்கி அனுப்பினுர்.

இதற்குப் பிறகுதான் நடேச முதலியாருக்கு ரமணரின் நல்லாசியும் நல்லுபதேசமும் கிடைத்தது.

அருணுசலேச்வரரும் ரமணரும் தாமும் ஒருவரே என்பதையும் சேஷாத்ரி சுவாமிகள் மறைமுகமாக அடிக்கடி கூறியிருக்கிருர்.

''திருவண்ணாமலையில் மொத்தம் மூன்று லிங்கங்கள் இருக்கின்றன. ஒன்று ஜோதி லிங்கமான அருணாசலமலை. இரண்டாவது, ரமண சுவாமி. மூன்றாவது சேஷாத்ரி'' என்று அவர் பலமுறை கூறியிருக்கிறார்.

ரமண மகரிஷிக்குத் தினமும் அன்னம் அளித்து வந்த எச்சம்மாளிடம் மிகவும் அன்பும் பரிவும் காட்டி வந்தார் சேஷாத்ரி சுவாமிகள்.



ஸ்ரீ சேஷாத்ரி சுவாமிகள்

மாலை நேரத்தில் மலையிலிருந்து இறங்கிவரும் எச்சம்மாளைப் பார்த்து, ''ரமண சுவாமிக்குச் சாப்பாடு கொடுத்தாகி விட்டதா?'' என்று விசாரிப்பார். பொழுது சாய்ந்து இருட்டி யிருந்தால், அந்த அம்மாள் வீடு வரை துணை போவார்.

ஒரு சமயம் எச்சம்மாள் வேதாந்த மகா வாக்கியங்களைப் பற்றிச் சுவாமிகளிடம் கேட்டார். ரமண பக்தை என்ற ஒரே காரணத்திற்காக அந்த அம்மாளுக்கு நான்கு மணி நேரம் பல அரிய வேதாந்த கருத்துக்கள் அடங்கிய உபந்நியாசம் செய்தருளினார் சேஷாத்ரி சுவாமிகள்.

சேஷாத்ரி சுவாமிகள் ரமணரை விடப்பத்து வயது மூத்தவர். அவருக்கு முன்பே அருணசலத்தை அடைந்தவர். வயதிலும் தோற்றத்திலும் வாழ்ந்த முறையிலும் இருவருக்குமிடையே வேற்றுமைகளும் மாறுபாடுகளும் இருந்தாலும், ஞான நிலையில் இருவரும் ஒருவரே. அதனுல்தான் பக்தர்கள் சேஷாத்ரியை பெரிய சேஷாத்ரி என்றும் ரமணரை சின்ன சேஷாத்ரி என்றும் குறிப்பிடுவது வழக்கம். பராசக்தியின் அம்சமாக விளங்கிய சேஷாத்ரி சுவாமிகள், தம்மைப் பார்வதிதேவி என்றும் ரமணரைக் குமரக் கடவுள் என்றும் அடிக்கடி கூறுவது வழக்கம். அது உண்மைதான் என்பதை உலகிற்குக்காட்டுவதே போல் சேஷாத்ரி சுவாமிகள் 1929-ம் ஆண்டு விதேக கைவல்யம் அடைந்தபோது அவரது சமாதிச் சடங்குகளில் மகனுக்குரிய உரிமையோடும், கடமை உணர்ச்சியோடும் ரமணர் கலந்து கொண்டார். ஒரு மணி நேரத்திற்கு மேல் அங்கு மௌனம் கலையாமல் ரமண பகவான் நின்றிருந்த திருக்கோலம், இவர்களிடையே நிலவிய ஆன்மிக உறவுக்குச் சாட்சியாகக் காலமெல்லாம் நிலைத்திருக்கும் காட்சியாகும்.

பார்வதி தேவியும், முருகப் பெருமானும் சேர்ந்து, அருணகிரிநாதரின் அற்புதத் திருப்புகழின் மேன்மையை உலகறியச் செய்தார்கள். திருப்புகழைப் பரப்பும் தெய்வத் தொண்டில் ஈடுபடுவதற்காக அம்மகான்களின் முழுமையான ஆசியைப் பெற்றவர்தான் 'வள்ளிமலை வள்ளல்' என்று அழைக்கப்பட்ட திருப்புகழ் சச்சிதானந்த சுவாமிகள். அன்னரது அதிசய வரலாறு அருணசல மகிமைக்கு மேலும் பெருமை கூட்டுகிறது.



ஸ்ரீ வள்ளிமலை சச்சிதானந்த சுவாமிகள்

**கோ**வை மாவட்டத்தில், பவானியை அடுத்து, மேட்டூருக்குச் செல்லும் பாதையில் பூநாச்சிபுதூர் என்ற ஒரு கிராமம் இருக்கிறது. அங்கு நூறு ஆண்டுகளுக்கு முன், சிதம்பர ஐயர் என்பவர் மணியமாகப் பணியாற்றி வந்தார். வேத சாஸ்திரங்களை முறைப்படி பயின்று, குலத்துக்குரிய நெறியோடு வாழ்ந்து வந்தார். அவருடைய பாட்டனு ரான கணபதி சாஸ்திரிகள், அறுபது வயதில் இல்லறத்தைத் துறந்து, துறவியாகி, கால் நடையாகவே காசிக்குச் சென்று, கங்கையில் ஜீவ சமாதி அடைந்தார். இன்றும் காசியில் 'கணபதி சுவாமிகள்' பலருக்குத் தரிசனம் தருவதாகக் கூறுகிறார்கள்.

சிதம்பர ஐயரின் மனைவி பார்வதி இறந்துவிடவே, மகாலட்சுமி என்ற உத்தமியை இரண்டாந்தாரமாக அவர் திருமணம் செய்து கொண்டார். எல்லாச் செல்வங்களும் பெற்று, மனம் ஒன்றிக் குடித்தனம் நடத்தி வந்த அத் தம்பதிக்கு, குழந்தைச் செல்வம் இல்லாதது பெரும் குறையாக இருந்தது. மகாலட்சுமி அம்மாள் வேண்டாத தெய்வமில்லை; நோற்காத நோன்புகள் இல்லை.

18

ஒரு நாள் மகாலட்சுமி, தோசைக்கு மாவு அரைத்துக் கொண்டிருந்தாள். திடீரென்று அங்கு தோன்றிய கருநாகம் ஒன்று அவளருகில் வந்து, படம் எடுத்து ஆடியது. அருகிலுள்ள 'நாககிரி' என்னும் திருச்செங்கோடுக்கு வரும்படி அது அழைப்பது போல் அந்த அம்மாளுக்குத் தோன்றவே, பன்னிரண்டு அமாவாசைகள் அங்கு சென்று சுவாமி தரிசனம் செய்வதாகப் பிரார்த்தனை செய்து கொண்டு கற்பூரம் காட்டினுள். அந்த நாகம், சாதுவாகத் திரும்பிச் சென்று விட்டது.

அருணகிரிநாதர் தமது திருப்புகழிலும், கந்தர் அலங்காரத்திலும், கந்தர் அனுபூதியிலும் திருச்செங்கோட்டு மலையைப் பற்றியும் அங்கு உறையும் 'நாகாசல வேலவ'னைப் பற்றியும் பெருமையோடு பேசுகிருர். 'செங்கோடனைச் சென்று தொழ நாலாயிரங் கண் படைத்திலனே அந்த நான்முகனே' என்றும், 'தெய்வத் திருமலை' என்றும் திருச்செங்கோட்டை ஏற்றிப் போற்றுகிருர். சிதம்பர ஐயரும் மகாலட்சுமியும் தாங்கள் பிரார்த்தித்துக் கொண்டபடி பன்னிரண்டு அமாவாசைத் திருநாட்களில் தவருமல் திருச்செங்கோடு சென்று, அர்த்தநாரீச்வரரையும், கந்தனையும் தொழுது வந்தார்கள். அதன் பலனுகப் பிறந்த பெண்ணுக்கு நாகம்மாள் என்றும், நான்கு ஆண்டுகள் கழித்துப் பிறந்த ஆண் மகவுக்கு அர்த்தநாரி என்றும் பெயரிட்டனர். அர்த்தநாரிதான், பின்னர் வட ஆற்காடு மாவட்டத்திலுள்ள வள்ளிமலையில் குடியேறி, அருணகிரியாரின் திருப்புகழ் அமுதத்தை வையகத்திற்கு வாரி வாரி வழங்கினுர்.

1870-ம் ஆண்டு ஜனவரியில் சேஷாத்ரி சுவாமிகள் அவதரித்தார். அவரிடம் மந்திரோபதேசம் பெற்று, சீடரான வள்ளிமலை சச்சிதானந்த சுவாமிகள் அதே 1870-ம் ஆண்டு நவம்பரில் அவதரித்தார்.

அர்த்தநாரிக்கு ஐந்து வயது நிரம்பிய போது, சிதம்பர ஐயர் திடீரென்று காலமானுர். திக்கற்றவளாய்ப் போன மகாலட்சுமி, குழந்தைகளை அழைத்துக் கொண்டு, ஈரோட்டில் ஓட்டல் வைத்திருந்த தன் தமையனுன கங்காதர ஐயரின் வீட்டுக்குச் சென்ருள். அங்கு தந்தையின் திதியை முறைப்படி செய்வதற்காக அர்த்தநாரிக்கு உபநயனம் செய்வித்தார்கள். ஏழாவது வயதில், கலைவாணியின் அருளுடன், பிள்ளையைப் பள்ளிக்கு அனுப்பி வைத்தார்கள்.

அர்த்தநாரிக்குப் படிப்பில் கவனம் செல்லவில்லை. வகுப்புப் பிள்ளைகளுடன் விளையாடுவதிலும், விஷமச் சேட்டைகள் புரிவதிலும்தான் நேரத்தைக் கடத்தினுர். அர்த்தநாரியின் அன்ருட லீலைகளைப் பற்றிக் கங்காதர ஐயருக்கு ஆயிரம் புகார்கள் வந்தன. கண்டித்துப் பார்த்தார். மிரட்டினுர். காதைத் திருகினுர். 'பூசை'யும் போட்டார். பிள்ளை திருந்துவதற்கான அறிகுறியே காணேம்.

ஒரு நாள் விளையாட்டு வினையாகிவிட்டது. தன் வயதுள்ள சிறுவன் ஒருவனை காளிங்கராயன் வாய்க்காலில் பிடித்துத் தள்ளிவிட்டு, 'இந்தப் பூனையும் பாலைக் குடிக்குமா?' என்று வீட்டுக்கு வந்து விட்டார் அர்த்தநாரி. காயம்பட்ட சிறுவனின் தந்தை, ஓட்டலில் இருந்த கங்காதர ஐயரிடம் வந்து, சத்தம் போட்டார்.

கங்காதர ஐயர் மறுநாளே தங்கையையும் 'அருமை'க் குழந்தையையும் கிராமத்திற்கே திருப்பி அனுப்பி விட்டார். உறவினர் கைவிட்டு விடலாம். ஆனல், பெற்றவள் அப்படிச் செய்வாளா? பிள்ளையைத் திண்ணைப் பள்ளிக்கூடத்தில் சேர்த்தாள் மகாலட்சுமி. பையன் பள்ளிக்கூடத்திற்குப் போய் வந்தானேயொழிய, விளையாட்டும் விஷமமும் அப்படியேதான் இருந்தன. இப்போது ஆசிரியர்களையே வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கொண்டான். அவர்களைப் பற்றிக் கவிதைகள் கூட புனைய ஆரம்பித்தான்!

மாணுக்கனின் குறும்புத்தனத்தைக் கண்டு கோபம் கொண்ட ஆசிரியர், கடுமையான தண்டனை கொடுத்தார். கைகால்கள் வீங்கும்படி கருணையின்றி அடித்தார். அர்த்தநாரிக்குப் பொங்கி வந்தது ஆத்திரம். பீறிட்டுக் கொண்டு புறப்பட்டது ஒரு கவிதை:

நெடுமால் திருமுருகா? நித்தம்
நித்தம் இந்த எழவா?
எழவெடுத்த வாத்தியார்
என்றைக்குச் சாவானே?
களிப்புற்றிருப்பேனே?
கணபதி காப்புத்தானே!

கல்விக்குத் தலை முழுகிவிட்டு களிப்புற்றிருப்பது என்று முடிவு செய்து விட்டார் அர்த்தாரி. அன்றோடு படிப்புக்கு முழுக்குப் போட்டு விட்டார்.

படிப்பு வரவில்லையென்றாலும், பையனின் புத்திசாலித்தனத்திற்கும் சாமர்த்தியத்திற்கும் குறைவேயில்லை. சிறுவன் அர்த்தநாரி, நாடகங்களில் நடித்து நல்ல பெயர் வாங்கினர். நன்ருக அரட்டை அடிப்பார். நகைச்சுவையோடு பேசுவார். அவர் இருக்கும் இடத்தில் கலகலப்பிற்குக் குறைவில்லை. பெரிய மாமாவான அப்பு தீட்சிதருக்குப் பையனின் எதிர்காலத்தைப் பற்றி அபார நம்பிக்கையிருந்தது. தம் ஐந்து வயதுப் பெண் சுப்புலட்சுமியை அர்த்தநாரிக்குக் கன்னிகாதானம் செய்து கொடுத்தார்.

ஒன்பது வயது நிரம்பிய அர்த்தநாரிக்குக் குடும்பப் பொறுப்பு வந்து விட்டது! பிழைப்பைத் தேடி கால் நடையாகவே சென்ருர். சத்தியமங்கலம், ஹாஸனூர் வழியாக மைசூர் வந்து சேர்ந்தார். அங்கு அவருடைய அத்தை பிள்ளைகளில் இருவர் இருந்தனர். அத்தான் குருசாமி ஐயர், அரண்மனையில் தலைமைச் சமையற்காரராகப் பணியாற்றி வந்தார். அவரது சகோதரர் ஸ்ரீகண்ட ஐயர் மிட்டாய்க்கடை வைத்திருந்தார். அவர்களுடைய சிபாரிசின் பேரில் அரண்மனை அந்தப்புரத்தில் சமையல் வேலைக்கு அமர்ந்தார் அர்த்தநாரி. ஒன்பது ரூபாய் சம்பளம். லீவு கிடைத்த போதெல்லாம் கிராமத்திற்கு வந்து தாயைப் பார்த்து விட்டுப் போனர்.

ஆண்கள் பன்னிரண்டு வயதுக்கு மேல் அந்தப்புரத்தில் பணியாற்ற முடியாது. எனவே, அவரை அரண்மனைக்கு மாற்றினர்கள். அதிகாரிகளுடன் யாத்திரை செய்து சமைத்துப் போட வேண்டிய கடினமான

வேலையில் அமர்த்தப்பட்டார். காட்டுப் பிரதேசங்களிலும், திறந்தவெளி யிலும், மழையிலும், வெயிலிலும் சமைத்துப் போடுவது என்பது எளி தான காரியமல்ல. இருப்பினும், தன் சாமர்த்தியத்தினுல், நேரம் தவரு மல் அதிகாரிகளுக்குப் பிடித்த சமையலைச் செய்து போட்டு, எல்லோரிடத் திலும் நல்ல பெயர் வாங்கினுர் அர்த்தநாரி.

தொழில் செய்து கொண்டே, தேக வலிமையையும் பெருக்கிக் கொண்டார் அர்த்தநாரி. தேகப் பயிற்சிகள் செய்தார். சாமுண்டி மலை யில் ஏறும் போது ஒவ்வொரு படிக்கட்டிலும் தோப்புக்கரணம் போட்டுக் கொண்டு போவார். சிலம்பம் பயின்ருர். குத்துச் சண்டை போடப் பழகிக் கொண்டார். பதினுறு வயதில் பெரிய பயில்வாணுக விளங்கினுர்.

ஒரு சமயம் மைசூருக்கு அடுத்த பச்சிமவாகினி என்ற சிற்றூரில் உறவினர் வீட்டு திருமணத்திற்குச் சென்றிருந்தார் அர்த்தநாரி. மண மக்கள் மண மேடையில் அமர்ந்திருந்தனர். முகூர்த்த வேளை நெருங்கி விட்டது. திடீரென்று மாப்பிள்ளைக்குக் காக்காய் வலிப்பு வந்தது. அவருக்கு அந்த நோய் இருப்பது பெண் வீட்டாருக்கு அதுவரை தெரியாது. 'நல்ல வேளை, இப்போதே தெரிந்ததே, மோசம் போக இருந்தோமே' என்று எல்லோரும் பெருமூச்சு விட்டனர். பிள்ளை வீட்டார் முகத்தில் ஈ ஆடவில்லை. மணப் பெண் நஞ்சம்மா தன் விதியை நினைத்து நொந்து போனுள். அங்கிருந்த பெரியவர் ஒருவருக்கு ஓர் அரிய யோசனை தோன்றியது. குறித்த முகூர்த்தத்திலேயே நஞ்சம் மாளுக்குத் திருமணம் நடைபெற்ருக வேண்டும் என்று முடிவு செய்தார் அவர். அர்த்தநாரியை அழைத்து அவளுக்குத் தாலி கட்டச் சொன்னுர். மறு பேச்சின்றி அவர் மண மேடைக்குச் சென்ருர். நஞ்சம்மாவை இரண்டாவது மனைவியாகக் கரம் பற்றினுர்.

முதல் மனைவி சுப்புலட்சுமி தன் மாமியாருடன் பூநாச்சிபுதூரில் இருந்தாள். அர்த்தநாரி, நஞ்சம்மாளுடன் மைசூரில் குடித்தனம் நடத்தி வந்தார். அவர் அடிக்கடி கிராமத்திற்கு வந்து போவதும் உண்டு.

அவர் தம் தொழிலில் கவனம் செலுத்தினுரே தவிர, புத்தகப் படிப் பைப் பற்றிக் கவலையே படவில்லை. அவருக்குத் தெய்வ பக்தியும் அதிகம் கிடையாது. யாராவது கடவுளைப் பற்றிப் பேசினுல், ''எங்கே இருக்கிருர் கடவுள்? அவரை எனக்குக் காட்டுங்கள், பார்க்கலாம்'' என்று குதர்க்க வாதம் செய்வார்.

வித விதமான பலகாரங்கள் செய்வதிலும், மணக்க மணக்கச் சமை யல் செய்வதிலும் தமக்கு ஈடு ஒருவருமில்லை என்று பெயர் வாங்கினுர் அர்த்தநாரி. அவர் சம்பளம் இருபது ரூபாயாக உயர்ந்தது.

இருப்பினும் வாழ்க்கைப் படகு சம்சாரக் கடலில் தத்தளித்தது. மனச்சாந்தி யற்றிருந்தார். முதல் மனைவிக்குப் பிறந்த இரண்டு ஆண் குழந்தைகளும் ஒரு பெண் குழந்தையும் அடுத்தடுத்து இறந்தன. சோகத் தில் வாடிய மனைவியும், சில மாதங்களில் போய்ச் சேர்ந்து விட்டாள்.

இரண்டாவது மனைவியான நஞ்சம்மாளுக்கு இரண்டு பெண்குழந்தைகளும், ஓர் ஆண் குழந்தையும் பிறந்தன. அந்தக் குழந்தைகளாவது ஆயுசோடு இருக்கக் கூடாதா? திடீரென்று இரண்டு பெண் குழந்தைகளும் இறந்து விட்டன. மூன்றாவது பையன் நரசிம்மன் மட்டும்தான் பிழைத்திருந்தான்.

அர்த்தநாரிக்கு அப்படியொன்றும் வயதாகிவிடவில்லை. முப்பத்தைந்து கூட முடியவில்லை: அதற்குள் இத்தனை துன்பங்கள் வந்தால் என்ன செய்வார் பாவம்! அவருக்கு வாழ்க்கையே கசந்ததில் வியப்பில்லை. மனைவி மக்கள் என்ற பற்று மெள்ள மெள்ளக் குறைந்து வந்தது.

உள்ளத்தில் நிம்மதி இருந்தால்தானே உடலில் வலிமை இருக்கும்? அதுவரை நோய் நொடியில்லாமல் இருந்தவருக்கு வயிற்றில் தாங்க முடியாத வலி ஏற்பட்டது. எந்த மருந்துக்கும் அது கேட்கவில்லை. அரண்மனை மருத்துவர்கள் தங்களால் இயன்றதையெல்லாம் செய்து பார்த்து விட்டார்கள். ஒன்றும் பயனில்லை. ஒரு மாதம் வேலைக்குச் செல்ல முடியாமல் வீட்டிலேயே அவதிப்பட்டுக் கொண்டிருந்தார் அர்த்தநாரி. தற்கொலை செய்து கொள்வதைப் பற்றிக் கூடத் தீவிரமாகச் சிந்தித்தார்.

அப்போது அரண்மனையில் வேலை செய்து கொண்டிருந்த மதுரையைச் சேர்ந்த கொத்தனூர், அர்த்தநாரியைப் பார்க்க வந்தார். அவர் ஒரு முருக பக்தர். பழநி ஆண்டவனால் ஆகாதது ஒன்றுமில்லை என்ற திட நம்பிக்கை கொண்டவர். பழநிக்குச் சென்றால் வயிற்று நோய் நீங்கி விடும் என்று அர்த்தநாரிக்கு எடுத்துச் சொன்னார். தெய்வ நம்பிக்கை அதிகமில்லாத அர்த்தநாரி, கடைசியாக அதையும் செய்து பார்த்து விடுவது

நாககிரி



என்ற முடிவுக்கு வந்தார். 'உத்தியோகம் இல்லாவிட்டால் போகிறது; உயிர் பிழைத்தால் போதும்' என்று மனைவியையும் ஏழு வயது மகனை யும் அழைத்துக் கொண்டு, பழநியிலேயே தங்கிவிடுவது என்ற எண்ணத் துடன் மைசூரிலிருந்து புறப்பட்டார்.

பிரயாணத்தின் போது ஜோலார்ப்பேட்டையில் மனைவியின் நகைகள் களவு போயின. அருள் கிடைத்து விட்ட பிறகு பொருள் எதற்கு?

ஈரோடு வரை ரயிலில் வந்து, பின்னர் கால்நடையாகவே பழநி வந்து சேர்ந்தார். இது நடந்தது 1908-ம் வருடம். அப்போது அவருக்கு வயது 38.

என்ன அதிசயமோ! பழநியில் காலடி வைத்த அன்றே அவருடைய வயிற்று நோயின் கடுமை சற்றுத் தணிந்தது. நாளுக்கு நாள் வயிற்று வலி குறைந்து கொண்டே போயிற்று. நாளுக்கு நாள் அவருடைய பக்தியும் அதிகரித்துக் கொண்டே வந்தது.

பழநியாண்டவன் சந்நிதியில் தங்கியிருந்த அர்த்தநாரியை எல் லோரும் 'மைசூர் சுவாமிகள்' என்றே அழைத்தனர். அவருடைய மனைவி நஞ்சம்மாளும், மகன் நரசிம்மனும் நான்கு வீடுகளில் உணவு யாசித்து உண்டு வாழ்ந்தனர். அர்த்தநாரியோ ஆண்டவனுக்கு அபிஷேகமான பாலையும் வாழைப் பழத்தையும் தவிர வேறு ஆகாரத்தை உட்கொள்ளுவ தில்லை.

அர்த்தநாரி அன்ன ஆகாரத்தையும் நித்திரையையும் பொருட்படுத் தாமல் ஆண்டவனின் சேவைக்கே தம்மை அர்ப்பணித்துக் கொண்டார். தினமும் மும்முறை நீராடுவார். மூன்று வேளைகளிலும் ஆயிரத்தெட்டு முறை காயத்ரி மந்திரம் ஜபிப்பார். விடியற்காலையில் சண்முக நதிக்கும், வராக நதிக்கும், அமராவதி நதிக்கும் சென்று உச்சிகால அபிஷேகத்திற் கான நீரைக் கொண்டு வருவார். பழநி மலையை வலம் வருவார்; மலைப் பிராகாரத்தில் அங்கப் பிரதட்சணம் செய்வார்; நாள் தவறாமல் சூரிய நமஸ்காரம் செய்வார். இப்படியொரு கடுமையான தவம் இயற்றிய தாலும், பழநியாண்டவனுக்கு அபிஷேகம் செய்த பாலை அருந்தி வந்த தாலும் சுவாமிகளின் வயிற்று வலியும், வாந்தியும் அடியோடு நின்று போய் விட்டன.

அன்று சித்திரை மாதம். அக்னி நட்சத்திர உற்சவம் நடைபெற்றுக் கொண்டிருந்தது. அர்த்தஜாமத்தின் போது, மதுரையிலிருந்து வந் திருந்த ஒரு தேவதாசி, ஆண்டவனின் சந்நிதியில் 'வங்காரமார்பிலணி' என்ற திருப்புகழை உள்ளம் உருக, மெய்ம்மறந்து பாடிக் கொண்டிருந் தாள். அருகில் நின்றிருந்த சுவாமிகள் அந்தப் பாட்டில் அப்படியே லயித் துப் போய் விட்டார். அத்திருப்புகழில் 'சிங்கார ரூபமயில் வாகன நமோ நம' என்ற இடம் அவரை அப்படியே உலுக்கிவிட்டது. பக்தியால் கரைந்த உள்ளம் கண்ணீராய் வெளிப்பட்டது. ஆனந்தப் பரவச நிலை எய்தினார்.

அக் கணத்திலிருந்து அருணகிரிநாதரின் திருப்புகழ் அவரை ஆட் கொண்டது. அதை மனப்பாடம் செய்ய வேண்டும், மனமுருகப் பாட

வேண்டும் என்று தீராத ஆசை அவரைப் பற்றிக் கொண்டது. ஆனல், அதை எப்படிக் கற்பது? அவருக்குத் தமிழ் எழுத்துக்களே சரியாகத் தெரியாதே! திண்ணைப் பள்ளிக்கூடத்தில் அரையும் குறையுமாகக் கற்றது திருப்புகழைப் படித்துணரப் போதுமா?

மணி என்ற எட்டு வயதுச் சிறுவனை சிநேகம் பிடித்துக் கொண்டார் முப்பத்தெட்டு வயது நிரம்பிய மைசூர் சுவாமிகள். அவனிடம் எழுத்துக்களைக் கற்றுக் கொண்டு, அங்கு கிடைத்த ஏதோ ஒரு புத்தகத்திலிருந்து தினமும் ஒரு திருப்புகழை மனப்பாடம் செய்து, ஆண்டவனின் சந்நிதியில் ஒப்பிப்பார். அதில் பல பிழைகள் இருக்கும். இதைக் கவனித்த கிருஷ்ண சுவாமி பண்டாரம் என்பவர் திருப்புகழைப் பிழையில்லாமல் பாட வேண்டும் என்றும், பிழையற்ற திருப்புகழ் பதிப்பு சென்னை லிங்கிச் செட்டித் தெரு 292-ம் எண் இல்லத்தில் கிடைக்கும் என்றும் கூறினர். உடனே அந்த முகவரிக்குக் கடிதம் எழுதி நானூற்றைம்பது பாடல்கள் கொண்ட முதல் பாகத்தை வரவழைத்தார் சுவாமிகள். ஒரு மாதத்திற்குள் அத்தனை பாடல்களையும் கற்று விட்டார். தினமும் சந்நிதியில் நின்று, பக்திப் பரவசத்துடன் உரக்கப் பாடுவார். கம்பீரமான குரலில் 'கணீர்' என்று திருப்புகழ் மாரி பொழிவதைக் கேட்டு ஆனந்திக்க அங்கு பெருங் கூட்டம் கூடிவிடும்.

சுவாமிகளுக்குப் பழநியாண்டவரின் அருள் முழுமையாக இருந்தது. தன் அபிஷேகத்திற்காக, பல மைல்களுக்கு அப்பாலுள்ள புண்ணிய தீர்த்தத்தைக் கொண்டு வரும்படி அவரைப் பணித்தார் முருகப் பெருமான். ஒருநாள் அவரது கனவில் தோன்றி பொதிகை மலைச் சாரலில் பாபநாச தீரத்திலுள்ள கல்யாண தீர்த்தத்தைக் கொண்டு வரும்படி கட்டளையிட்டார். அகத்திய முனிவரும், யோக சித்தர்களும் வாழும் அப் பகுதிக்குப் போகும் வழியையும், நீர் எடுக்க வேண்டிய இடத்தையும், கிழக்கில் மலையடியிலிருக்கும் மணல் மேட்டையும், மேற்கிலுள்ள பாறைக் கோயிலையும் அவருக்குக் கனவிலேயே காட்டியருளினர். அன்றிரவே சில முருக பக்தர்களின் கனவில் தோன்றி, வழிச் செலவுக்காக மைசூர் சுவாமிகளிடம் பணம் தரும்படி கட்டளையிட்டார். மறுநாள் விடியற் காலையில் அவர்கள் சுவாமிகளிடம் வந்து, ஆண்டவனின் கட்டளைக்கிணங்க அவருக்குப் பணம் கொடுத்துதவினர்கள்.

சுவாமிகள் இப் பணியைச் செவ்வனே முடித்து வைப்பதற்காக மௌன விரதம் ஏற்றுக் கொண்டார். தாம் ஏற்றுக் கொண்டுள்ள தெய்வப் பணியை ஓர் அட்டையில் விளக்கமாக எழுதி கழுத்தில் தொங்க விட்டுக் கொண்டு, பயணத்தைத் தொடங்கினர்.

அன்று இரவு முழுவதும் கால்நடையாகவே சென்று, விடியற்காலை திண்டுக்கல்லை அடைந்தார் அவர். இரவில் இவருக்குத் துணையாக பழநியாண்டவர் ஒரு குருக்கள் உருவில் இருபது அடி முன்னல் தொலைவில் நடந்து கொண்டிருந்தார். எத்தனை வேகமாக நடந்தாலும், அந்தக் குருக்களுக்கும் சுவாமிகளுக்கும் இடையே இருபது அடி இடைவெளி இருந்து கொண்டே இருந்தது. திண்டுக்கல்லை அடைந்ததும் குருக்கள் மாயமாய் மறைந்து விட்டார்.

வழி நெடுகிலும் பல பக்தர்களின் உதவியைப் பெற்றுக் கொண்டு தென்காசி வந்தடைந்த சுவாமிகளுக்கு பழநியாண்டவன், தட்சிணுமூர்த்தி பரதேசியாகக் காட்சியளித்து, கல்யாண தீர்த்தத்திற்கு வழி காட்டினர். ஆனல், குறிப்பிட்ட இடத்தில் நீர் எடுக்காததால் பாதி வழியில் குடம் தவறி விட்டது. எனவே, மீண்டும் நடந்து சென்று பரதேசியின் உதவியால் செப்புக் குடத்தில் தீர்த்தம் எடுத்துக் கொண்டு கால் நடையாகவே பழநியை நோக்கிப் புறப்பட்டார். வழியில் திருடர்கள் சுவாமிகளை வழி மறித்தனர். பின்னர் அவர் கழுத்தில் மாலையாகத் தொங்கிய் அட்டையைப் படித்துப் பார்த்து அவரிடம் மன்னிப்புக் கேட்டு, விபூதி பெற்றுச் சென்றனர். மற்ருேர் இடத்தில் தலையில் தீர்த்தக் குடத்தை வைத்துக்கொண்டே வெள்ளத்தில் நீந்தி வரவேண்டியிருந்தது. இத்தனை இன்னல்களையும் கடந்து வந்து, புனிதத் தீர்த்தத்தால் ஆண்டவனுக்கு அபிஷேகம் செய்து, கண் குளிரத் தரிசித்து உள்ளம் குளிர்ந்தார்.

அந்த ஆண்டு கும்பகோணத்தில் நடைபெற்ற மகாமகத்திற்குச் சென்ருர் சுவாமிகள். திருச்சியிலிருந்தே ஜனநெரிசல் இருந்ததாலும், ரயிலில் போனல் தாமதமாகும் என்பதாலும் காவிரியில் குதித்து, நீந்திக் கொண்டே கும்பகோணத்தை அடைந்தார் அவர். அங்கு கும்பலில் சிக்கிக் கொண்டு திண்டாடிய வயோதிகத் தம்பதியைத் தோளில் சுமந்து கொண்டு, அவர்களை மகாமகப் புனித நீரில் ஸ்நானம் செய்வித்து, தாமும் நீராடி புண்ணியம் பெற்றுப் பழநிக்குத் திரும்பி வந்தார்.

அதற்கு அடுத்த வருஷம், ஆடி அமாவாசை அபிஷேகத்திற்காக, பொதிகை மலையிலுள்ள தட்சிணுமூர்த்தி தீர்த்தமான பாண தீர்த்தத்தைக் கொண்டு வரும்படி ஆண்டவன் கனவில் அருள் கட்டளையிட்டார். சுவாமிகள் மீண்டும் தென்காசி, பாபநாசம் வழியாக, மலைகளையும் காடுகளையும் தன்னந் தனியாகக் கடந்து சென்று, இடையில் குறுக்கிட்ட இன்னல்கள் பலவற்றையும் பொருட் படுத்தாது நீர்வீழ்ச்சி இருந்த இடத்தையடைந்து, புண்ணிய தீர்த்தத்தை செப்புக் குடத்தில் எடுத்துக் கொண்டார். வரும் வழியில் வண்டுகளும், குளவிகளும் கொட்டியதையும், கொடிய விலங்குகள் பயமுறுத்தியதையும், சற்றும் மனம் தளராது, மௌன விரதத்துடனேயே பழநிக்கு வந்து சேர்ந்தார்.

அதற்கு அடுத்த வருடம், கோயம்புத்தூருக்குப் பதினைந்தாவது மைலில் இருக்கும் வெள்ளியங்கிரி மலையேறி, பஞ்சலிங்க தரிசனம் செய்து, வேறு வழியாக இறங்கி, பூண்டி என்ற கிராமத்தின் வாயு மூலையிலுள்ள தேவி தீர்த்தத்தை எடுத்துக் கொண்டு கால் நடையாகப் பழநி வந்து சேர்ந்தார். **1911-ம்** வருடம் மாசி மாதம் சுக்ல சஷ்டியன்று ஆண்டவனுக்கு வெள்ளியங்கிரி தீர்த்தத்தால் அபிஷேகம் செய்வித்து மகிழ்ந்தார்.

பழநியிலிருந்து கொழும்பு போகும் வழியில் பெரியாவடையார் என்ற பிரஹநீச்வரர், கோயில் கொண்டிருக்கிருர். இது பிரும்மா தவம் செய்த தலம். ஆதிசேஷனுக்கு ஈச்வரன் தரிசனம் அளித்த இடம். இங்கு கற்பாறையில், இலுப்பை மரத்தடியில் சிவலிங்கம் ஒன்றும் இருக்கிறது.



பழநிமலை

இத்தலத்திற்கும் சுவாமிகள் அடிக்கடி வந்து, தீர்த்தம் எடுத்துச் சென்று பழநியாண்டவனுக்கு அபிஷேகம் செய்து வைப்பதுண்டு.

இவ்வாறு மைசூர் சுவாமிகள் நான்கு ஆண்டுகள் முருக பக்தியில் ஒன்றி, அரிய தவமிருந்தார். சகல சித்திகளும் கைகூடியும் அவர் மனம் அவற்றில் நாட்டம் கொள்ளவில்லை. யோகப் பயிற்சிகளின் மூலம் உன்னத சக்திகள் பெற்றிருந்தும், சத்தியப் பொருளையே அவர் தேடிக் கொண்டிருந்தார். திருப்புகழ் ஓதுவதையே உயிர் மூச்சாகக் கருதியவரின் உள்ளத்தில் கருணை வெள்ளம் கரை புரண்டோடியது. ஏழை எளியவர்களின் துயர் துடைக்கத் துடித்தார். அவர்களுக்கு வயிறுர உணவளித்து மகிழ்ந்தார். பிணியால் வாடியவர்களுக்கு சிகிச்சை செய்வதில் எல்லையற்ற ஆனந்தம் கண்டார்.

அடுத்து திருச்செந்தூருக்குச் செல்லுமாறு சுவாமிகளுக்கு உத்தரவாயிற்று. மனைவியும் மகனும் உடன் வர, நடந்தே திருச்செந்தூரை அடைந்து, மூன்று நாட்கள் சண்முகநாதரை வழிபட்டார். அங்கிருந்து இலங்கையிலுள்ள கதிர்காமத்திற்கு வரும்படி கந்தன் கனவில் அழைக்கவே, தூத்துக்குடிக்குப் புறப்பட்டார். ஆனால், கப்பல் பிரயாணத்திற்கு அப்போது அனுமதி கிடைக்காததால், குடும்பத்துடன் இராமேச்வரத்திற்குப் பயணமானார்.

அச்சமயத்தில் பன்னிரண்டு வயது நிரம்பிய மகன் நரசிம்மன், பழநிக்குத் திரும்பி நாட்டுக்கோட்டை செட்டிமார் சிலருடன் சேர்ந்து பர்மாவுக்குப் போய் விட்டான். சுவாமிகள் மீண்டும் தூத்துக்குடிக்கு வந்து, சமையல் செய்தும், திருப்புகழ் பாடியும் பணம் சம்பாதித்து கதிர்காமத்திற்குப் புறப்படத் தயாரானார்.

ஆனால், இலங்கை செல்ல சர்க்கார் அனுமதி கிடைப்பது கடினமாயிருந்தது. அனுமதி வழங்கும் அதிகாரம் பெற்ற ஆங்கிலேய துரையை அணுகி, தம் விருப்பத்தைக் கூறினார். பின்னர், புலால் சேர்க்காமலே துரைமார்களின் ருசிக்கு ஏற்ற வகையில் வெகு சாமர்த்தியமாக சமைத்துப் போட்டு அவரைத் திருப்திப்படுத்தினார். மகிழ்ச்சியடைந்த துரையும் சுவாமிகள் இலங்கை செல்ல அனுமதி வழங்கினார்.

கதிர்காமக் கோயிலின் எழிலிலும் சூழ்நிலையின் வசீகரத்திலும் மனத்தைப் பறிகொடுத்த சுவாமிகள், அங்கு நாற்பத்தெட்டு நாட்கள் தங்கியிருந்து விட்டு, பிரிய மனமின்றி, இந்தியாவை நோக்கிப் புறப்பட்டார். வழி நெடுகிலுமுள்ள ஆலயங்களைத் தரிசித்து, அங்கெல்லாம் திருப்புகழ் பாராயணம் செய்து பக்தர்களைப் பரவசத்தில் ஆழ்த்தினர்.

தாய் நாட்டிற்குத் திரும்பிய சுவாமிகள், தூத்துக்குடியிலிறங்கி, திருச்செந்தூருக்குச் சென்று ஆறுமுகனைத் தரிசித்துக் கொண்டு, கோயில் பட்டியை அடைந்தார். அங்கு வேங்கடராயர் என்பவரின் தொடர்பு ஏற்பட்டது. வேங்கடராயர் பல சாத்திரங்களைக் கரை கண்ட மாமேதை. ஆசார சீலர். சுவாமிகளும் அவரது மனேவியும் ராயரிடம் நாற்பத்தைந்து நாட்கள் பகவத்கீதையிலிருந்தும் ஞான வாசிஷ்டத்திலிருந்தும் பாடம் கேட்டனர், பல தத்துவங்களைக் கற்றறிந்தனர். அதன் பலனுக, சுவாமிகளுக்கு சந்நியாச ஆச்ரமத்திலும் ஆத்ம விசாரத்திலும் நாட்டம் ஏற்பட்டது. தமது எண்ணத்தை ராயரிடம் தெரிவித்தார். ராயர், சுவாமிகளிடம், திருவண்ணுமலைக்குச் சென்று, ஞானமலையின் நிழலில் மோனத் தவம் புரிந்து கொண்டிருக்கும் ரமண மகரிஷியையும் சேஷாத்ரி சுவாமிகளையும் தரிசித்தால் அவர்கள் நல்வழி காட்டுவார்கள் என்று எடுத்துச் சொன்னுர்.

அடுத்து பழநிக்கு வந்த சுவாமிகள், வைகுண்ட ஏகாதசிக்கு ஸ்ரீரங்கம் சென்று விட்டு, திருவாதிரைத் திருநாள் தரிசனத்திற்காக திருவண்ணுமலைக்குப் பயணமானுர்.

மைசூர் சுவாமிகள் என்று அழைக்கப்பட்ட அர்த்தநாரி, திருவண்ணுமலையை அடைந்ததும், மலை மீது வாசம் செய்து கொண்டிருந்த ரமண சுவாமிகளைத் தரிசிக்கச் சென்றுர்.

அப்போது ஆச்ரமத்தின் வாயிலில் தரிசனத்திற்காக நின்று கொண்டிருந்த சிறு கூட்டத்தில் அர்த்தநாரியும் சேர்ந்து கொண்டார். சற்றைக் கெல்லாம் ரமணர் வெளியே வந்தார். கோவணுண்டியாகக் காட்சி தந்த மகரிஷி சிறிது நேரம் அப்படியே நின்றுர். அவரை உற்று நோக்கினுர் அர்த்தநாரி. மகரிஷிகளும் அர்த்தநாரியை ஊடுருவிப் பார்த்தார். ஒரு கணம்தான். அவ்விடத்தில் நின்றிருந்த ரமணர் மறைந்து, அர்த்தநாரியின் கண்களுக்கு பழநியாண்டவரே காட்சியளித்தார். பிரமையோ என்று நினைத்து அர்த்தநாரி கண்களைக் கசக்கிக் கொண்டு உன்னிப்பாகக் கவனித்தார். சந்தேகமில்லை. சாட்சாத் பழநியாண்டவரேதான். அர்த்தநாரிக்கு உடலெல்லாம் சிலிர்த்தது. 'தண்டபாணிக்கு ஹரோ ஹரா' என்று கன்னத்தில் போட்டுக் கொண்டார். பொலபொலவென்று கொட்டிய கண்ணீர் அவர் கன்னங்களில் வழிந்தோடியது. அவருக்குப் பேச்சே எழவில்லை. சிலையாய் நின்று விட்டார்.

தமக்குப் பழநியாண்டவராகக் காட்சி தந்த ரமண பகவானின் சந்நிதியை விட்டு அகலவே மனம் இல்லாமல் இரண்டு மூன்று மாதங்கள் திருவண்ணுமலையிலேயே தங்கியிருந்தார் மைசூர் சுவாமிகள். சமயம் வாய்த்தபோதெல்லாம் ரமணர் முன்னிலையிலும், ஈச்வர சுவாமிகளின்

முன்னிலையிலும் அமர்ந்து திருப்புகழ் பாடுவார். மகான்கள் இருவரும் அன்பரின் முருக பக்தியைக் கண்டு மனமிளகி, பிழைகளைத் திருத்து வார்கள். சந்தம் பிரித்து, ஓசை நயத்துடன் முறையாகத் திருப்புகழைப் பாடுவதற்கு அவர்களிடம் கற்றுக் கொண்டார் சுவாமிகள். இரு மகான் களும் அவரைத் 'திருப்புகழ் முருகன்' என்றே அழைப்பது வழக்கம்.

சுவாமிகள் திருப்புகழ் பாடிக் கொண்டு வர, எல்லோரும் ஒரு நாள் கிரிவலம் வந்தார்கள். அப்போது சுவாமிகள் அருணகிரிநாதரின் வேடிச்சி காவலன் வகுப்புப் பாடிக் கொண்டு வந்தார். அப்பாடலின் இறுதியில் ''காவலனே, காவலனே, காவலனே, காவலனே'' என்று சுவாமிகள் பாடியபோது, ரமணர் வேடிக்கையாக ''ஏமேமி காவலனே, எந்தெந்தா காவலனே'' என்று தெலுங்கில் கேட்டார். அந்தக் கூட்டத்திலிருந்த ஒரு சாது, அந்த வேடிக்கையில் கலந்து கொண்டு, ''இட்லி காவலனே, காப்பி காவலனே'' என்று கூறினர். சற்றைக்கெல்லாம், அந்தக் காட்டுப் பாதையில் சற்றும் எதிர்பாராத வகையில் ஒருவர் இட்லியும் காப்பியும் கொண்டு வந்தார். அத்தனை பேரும் அதைப் புசித்துக் களைப்பாறினர்கள். விளையாட்டானாலும், பக்தனின் கோரிக்கையை நிறைவேற்றும் பொருட்டு வேடிச்சி காவலனான முருகன்தான் இட்லி வியாபாரியாக அங்கு தோன்றி னன் என்றே எல்லோரும் கருதினர்.

திருவண்ணாமலையில் தங்கியிருந்தபோது ஒரு நாள் கூட மைசூர் சுவாமிகள், சேஷாத்ரி சுவாமிகளை அருகில் சென்று தரிசித்ததில்லை. தொலைவில் நின்றபடி ஒரு கும்பிடு போடுவதோடு சரி. நான்கு ஆண்டு களுக்குப் பின்னரே அவரிடம் உபதேசம் பெறும் பாக்கியம் கிடைத்தது அவருக்கு. மகான்களின் தரிசனமும் தொடர்பும் அதற்கான வேளை வந்தால்தான் கிட்டும். பிராப்தம் இல்லாவிட்டால் அருகில் இருந்தா லும் அவர்களைத் தரிசிக்கும் பேறு நமக்குக் கிட்டாது.

அருணாசலத்திலிருந்த மைசூர் சுவாமிகளுக்கு இமாலய யாத்திரை செய்ய வேண்டும் என்ற பேரவா ஏற்படவே, மஞ்சகுப்பம் கிருஷ்ணய்ய ரிடமிருந்து ஒரு கடிதத்தைப் பெற்றுக் கொண்டு சென்னை அரண்மனைக் காரத் தெருவிலுள்ள வெங்கடேசய்யர் என்ற புரோகிதரின் வீட்டுக்குச் சென்றார்.

மைசூர் சுவாமிகளுக்கு அன்னதானம் செய்வது என்றால் மிக விருப் பம். கையில் காசு கிடைத்தால் இரண்டு பேருக்காவது உணவு அளித்து மகிழ்வார். அவர் சென்னைக்கு வந்ததும் சஷ்டி புண்ணிய தினம் நெருங்கிய தால், அன்று வெங்கடேசய்யர் இல்லத்தில் சமாராதனை நடத்துவது என்று முடிவு செய்து, அதற்கான முயற்சியில் முழுமனத்துடன் ஈடுபட் டார். புதிய இடம் என்றோ, பழக்கமில்லாதவர்கள் என்றோ சிறிதும் தயங்காமல் நான்கு பேரிடம் கேட்டு சமாராதனைக்காகப் பணமும் பொருள்களும் சேகரித்து வந்தார்.

அச்சமயம் சென்னை கந்தசாமிக் கோயிலுக்கருகில் 'கொசக்கடைச் சாமியார்' என்ற மகான் வசித்து வந்தார். சமாராதனைக்கு முதல் நாள் மாலை, அப்பக்கமாகச் சென்ற சுவாமிகளின் காதில் விழும்படி ''சொத்து



**மணி — தர்மாம்பாள் — சேதுராமன்**

எட்டாவது வயதில் சேதுராமனுக்கு வயிற்றில் கட்டி வந்தது. நோய் முற்றி விடவே, அவனை உடனே மருத்துவ மனையில் சேர்த்து விடும்படிக் கூறினர், டாக்டர். தர்மாம்பாள், சுவாமிகளிடம் அதற்கு அனுமதி கேட்டார். சுவாமிகளோ, ''அதெல்லாம் தேவையில்லை. உன் குடும்பம் இருக்கும் நிலையில், ஆஸ்பத்திரி வைத்திய மெல்லாம் செய்ய முடியாது. நீ ஒன்றும் பயப்படாதே. எருமைச் சாணியைக் கொண்டு வந்து வாணலியில் போட்டு சூடு செய்து, ஆறு முறை ஒத்தடம் கொடுத்து, அதையே அடி வயிற்றிலும் இடுப்பிலும் பத்து மாதிரி போட்டு, துணியால் கட்டி விடு. காலையில் கட்டை அவிழ்த்து, நன்ருகக் கழுவி விடு'' என்று கூறினர். அத்துடன் வேல் வகுப்பு, தேவேந்திர சங்க வகுப்பு, இன்னும் சில திருப்புகழ் பாடல்களையும் தெய்வ நம்பிக்கையோடு தினமும் பாராயணம் செய்யும்படியும் கூறினர். சுவாமிகள் கூறியபடியே இரண்டு மூன்று மாதங்கள் செய்து வந்தார்கள். கொஞ்சம் கொஞ்சமாகக் கட்டி கரைந்து, சிறுவனும் பூரண குணம் அடைந்தான்.

1950-ம் ஆண்டு நவம்பர் மாதம், ஸ்கந்த சஷ்டி ஆறு நாட்களிலும், வள்ளிமலை சுவாமிகள், தம்புச் செட்டித் தெருவில் சீனுவாச முதலியார் வீட்டுத் திண்ணையில் அமர்ந்து, 'வள்ளி கல்யாணம்' கதை செய்தார். அப்போது சிறுவன் சேதுராமனும் உடனிருந்து பாடினன்.

இறுதி நாளன்று சுவாமிகள் மிக உருக்கமாகப் பாடினர். பக்திப் பரவசத்தில் லயித்துப் போய், சமாதியில் ஆழ்ந்து விட்டார். பின்னர் அவருக்கு நினைவு திரும்பவே யில்லை. இரண்டு மூன்று நாட்கள் வீட்டில் ஏதேதோ சிகிச்சைகள் செய்து விட்டு, பொது மருத்துவ மனையில் சேர்த்தார்கள். 'தாத்தா'வைப் போய்ப் பார்க்க வேண்டும் என்று சேதுராமன் துடித்தான். அவனுக்குக் காய்ச்சலாக இருந்ததால் வீட்டில் எல்லோரும் அவனைத் தடுத்து விட்டார்கள்.

சேதுவின் சகோதரர் சுப்ரமணியம், சுவாமிகளைப் பார்ப்பதற்காக மருத்துவமனைக்குச் சென்றார். அருகிலிருந்த தெரிந்தவர் வீட்டிலிருந்து ஒரு கண்ணாடித் தம்ளரைப் பெற்றுக் கொண்டு, எதிரிலுள்ள ஓர் ஓட்டலில் காப்பி வாங்கிக் கொண்டார். பக்கத்துக் கடையில் இரண்டு சாக்லெட்டும் வாங்கிக் கொண்டு, சுவாமிகள் படுத்திருக்கும் அறைக்குச் சென்றார். அவருக்குச் சரியான நினைவு இல்லை. தன்னை அடையாளம் தெரிந்து கொண்டதாகக் கூட சுப்ரமணியத்துக்குத் தோன்றவில்லை. சுவாமிகளின் வாயை மெல்லத் திறந்து, காப்பியை ஊற்றினர். முக்கால் பகுதி குடித்து விட்டு, கொஞ்சம் மீற்று விட்டார்.

பின்னர் ஒரு சாக்லெட்டை அவர் வாயில் போட்டார் மணி. அதை நன்றாக மென்று தின்றார் சுவாமிகள். இரண்டாவது சாக்லெட்டையும் அவர் வாயில் போட்டார். அதைக் கொஞ்சம் மென்று விட்டு, சைகையால் சுப்ரமணியத்தை அருகில் அழைத்து, அவர் கையில் துப்பினர். வாய் குளறியபடி ''சேதுவுக்குக் கொடு'' என்று கூறினர் சுவாமிகள்.

ஒரு கையில் காப்பித் தம்ளருடனும் ஒரு கையில் ஈரச் சாக்லெட்டுடனும் நின்ற சுப்ரமணியத்திற்கு என்ன செய்வது என்றே புரியவில்லை. வீட்டிலிருக்கும் சேதுவுக்கு அவற்றை எப்படிக் கொண்டு போய்க் கொடுப்பது என்று யோசித்தார். சுயநினைவற்ற நிலையில் இருக்கும் சுவாமிகள் ஏதோ கூறி யிருக்க வேண்டும் என்று எண்ணிய சுப்ரமணியம், காப்பியைத் தானே குடித்து விட்டு, சாக்லெட்டையும் தின்று விட்டார்.

அன்று இரவு தூக்கத்தில் அலறிப் புடைத்துக் கொண்டு எழுந்தான் சேது. ''என்ன நடந்தது?'' என்று கேட்டதற்கு, ''டேய், சேது! எழுந்திரு... என்று தாத்தா என்னை எழுப்பினர். பயந்து கொண்டு விட்டேன்'' என்றான் சேது. அவன் உடம்பெல்லாம் வியர்த்து விட்டிருந்தது.

மறு நாள் காலை சுவாமிகள் மகா சமாதி அடைந்தார். அன்று மாலை பூத உடலை வள்ளிமலைக்கு எடுத்துச் செல்வதற்கு முன்பு, சிறுவன் சேதுராமன் காய்ச்சலையும் பொருட்படுத்தாமல், தாயோடும் சகோதரரோடும் மருத்துவ மனைக்குச் சென்று சுவாமிகளின் திருமேனியைத் தரிசித்து விட்டு வந்தான்.

வள்ளிமலை சுவாமிகள் மறைந்த பின்னர், சேதுராமன் வாழ்க்கையில் பெரிய திருப்பம் ஏற்பட்டது. அவனுக்குப் படிப்பில் கவனம் செல்லவில்லை. ''டேய், சேது! எழுந்திரு'' என கனவில் சுவாமிகள் அழைத்து, உறங்கிக் கொண்டிருந்த அவன் நல்லுணர்வுகளைத் தட்டி எழுப்பி யிருக்க வேண்டும். ஆன்மிகத் துறையில் அவனால் ஆன பணி புரியவும், பக்தி நெறியைப் பரப்ப ஆசுகவிகள் படைக்கவும் சேதுராமனுக்கு வள்ளிமலை சுவாமிகள் ஆசி வழங்கியதாகவே தோன்றுகிறது.

சுவாமிகள் சமாதியடைந்து ஒரு மாதம் ஆகியிருக்கும். ஒன்பதாவது படித்துக் கொண்டிருந்த சேது, கணக்குப் பரீட்சை எழுதப் பள்ளிக்குச் சென்றான். ஆனால், அன்று இரவு அவன் வீடு திரும்பவேயில்லை.

வீட்டிலுள்ளோர் எங்கெல்லாமோ அவனைத் தேடினர். நண்பர்கள் வீட்டிற்கெல்லாம் சென்று விசாரித்தனர். ஏதாவது விபத்தில் சிக்கி யிருப்பானோ என்று அஞ்சி, மருத்துவ மனைகளுக்கெல்லாம் சென்று பார்த்து விட்டு வந்தனர். மறு நாள் முழுவதும் தேடி அலைந்தனர். சேது சென்றவிடம் ஒருவருக்கும் தெரியவில்லை.

ஏழு நாட்கள் கழித்து வீட்டுக்கு ஒரு கடிதம் வந்தது. சேதுராமன் தான் எழுதியிருந்தான். இடம் குறிப்பிடப்படவில்லை. அதில் 'என்னை மறந்து விடுங்கள்' என்று எழுதப்பட்டிருந்தது.

சேதுராமனின் தாய்க்கு ஒரு சந்தேகம் எழுந்தது. திருத்தணிகை முருகன்தான் தன் பிள்ளையை அழைத்துக் கொண்டிருக்க வேண்டும் என்று நினைத்தாள். தன் மூத்த மகனை அழைத்துக் கொண்டு ஜனவரி முதல் தேதி, திருத்தணி-திருப்படி விழாவுக்குச் சென்று சேதுவைச் சல்லடை போட்டுத் தேடிப் பார்த்தாள் தாய். மகனைக் கண்டு பிடிக்கவே முடியவில்லை.

உண்மையில் சேது அன்று திருத்தணிகையில்தான் தங்கி யிருந்தான். தலையை மொட்டை அடித்துக் கொண்டு, திருப்புகழ் அடியார்கள் கண்ணில் படாமல் அலைந்து கொண்டிருந்தவன், மறு நாள் ஒரு பணக்காரக் குடும்பத்துடன் காரில் திருப்பதிக்குச் சென்று விட்டான். வேங்கடாசலபதியின் தரிசனமும் அவனுக்குக் கிட்டியது. அங்கிருந்து காளஹஸ்தி வந்து, ஐந்து நாட்கள் தங்கி, கோயம்புத்தூருக்குச் சென்று விட்டு, தஞ்சைக்கு வந்து சேர்ந்தான். அங்கு அவன் தங்கியிருந்த ஓர் ஓட்டலின் சொந்தக்காரர் அவனைப் பற்றி விசாரிக்க, சேது எதுவும் கூருமல் மறைத்து விட்டான். பின்னர், அவன் கோயிலுக்குச் சென்றிருந்த சமயம் பார்த்து, அவனுடைய பையைத் திறந்து பார்த்தார் ஓட்டல்காரர். அதில் இருந்த ஒரு புத்தகத்தில் 'எஸ். வி. சேதுராமன், ஒன்பதாவது வகுப்பு, செயிண்ட் கேப்ரியல் ஹைஸ்கூல்'... என்று எழுதி யிருப்பதைக் கண்டு, அந்தப் பள்ளியின் தலைமை ஆசிரியருக்கு ஒரு கடிதம் எழுதிப் போட்டார். அக் கடிதத்தைத் தலைமை ஆசிரியர், சேதுவின் வீட்டாருக்குக் கொடுத்து அனுப்பினர். சேதுவின் மாமா அன்று இரவே தஞ்சைக்குப் பயணமாகி, சேதுவைச் சென்னைக்கு அழைத்து வந்து விட்டார்.

வீட்டுக்குத் திரும்பி வந்ததும், திருப்பதியிலுள்ள மைசூர் மகாராஜா சத்திரத்தில் படுத்து உறங்கிக் கொண்டிருந்த போது, தான் கண்ட கனவைத் தாயிடம் விளக்கிக் கூறினன் சேது:

பெற்றோரைத் துயரத்தில் ஆழ்த்தி விட்டு, வீட்டைவிட்டு ஓடி வந்து விட்டோமே என்று வருத்தப்பட்டு, சிந்தனையில் ஆழ்ந்திருந்தான் சேது. குருநாதரான வள்ளிமலை சுவாமிகள் எதிரிலுள்ள தூணில் சாய்ந்தபடி நின்று கொண்டிருந்தார். அவர் இதயபாகத்தில் திருத்தணிகேசர் தோன்றினர். ''என்னப்பா...என்ன யோசித்துக் கொண்டிருக்கிறாய்?'' என்று சேதுவைப் பார்த்துக் கேட்டார் முருகர்.

''சுவாமி, என்ன பாவம் செய்ததற்காக நான் இவ்வாறு அலைந்து கொண்டிருக்கிறேன்? பிள்ளையைப் பிரிந்து கஷ்டப்படுவதற்கு என்

பெற்ளுேர் என்ன பாவம் செய்தார்கள்?'' என்று சேது, திருத்தணி கேசரிடம் கேட்டான்.

அப்போது தணிகேசர் சேதுவின் முற்பிறவியை நினைவுபடுத்தி சில நிகழ்ச்சிகளைக் கூறினுர்.

''அப்பனே, நீ முன் ஜென்மத்தில் இடையர் குலத்தில் பிறந்திருந் தாய். இப்போது உன் தாயாக இருப்பவள், முன் பிறவியிலும் பிராம்மண குலத்தில் பிறந்திருந்தாள். அவள் தன் மாடுகளை மேய்ப்பதற்கு ஆள் தேடியபோது நீயே அந்த வேலைக்கு வந்து அமர்ந்தாய். ஒரு நாள் நீ மாடு களை மேய்த்துவிட்டு, மாலையில் அவற்றை வீட்டுக்கு ஓட்டி வரும்போது, கன்றுக்குட்டி ஒன்று ஒரு பெரிய குழியில் விழுந்து, கத்திற்று. நீ அதை வெளியே தூக்கி விடாமல் தாய்ப் பசுவை மட்டும் தனியாக அழைத்து வந்து தொழுவத்தில் கட்டி விட்டு, நடந்ததை எஜமானியிடமும் சொல்லாமல் போய் விட்டாய். குழியில் விழுந்து விட்ட கன்றைத் தாயிடம் கொண்டு சேர்க்காத பாவத்திற்காகத்தான் நீ இப்போது உன் பெற்ளுேரைப் பிரிந்து துன்பப்படுகிருய்'' என்று கூறினுர்.

''அது சரி, என்னைப் பிரிந்து வாட என் தாயார் முன் பிறவியில் என்ன கொடுமை செய்தார்?'' என்று கேட்டான் சேது.

அதற்கான காரணத்தையும் தணிகேசர் கூறினுர்:

''முன் பிறவியில் உன் தாய்க்குக் குழந்தைச் செல்வம் இல்லை. அவள் வசித்த தெருவில் ஒருத்திக்கு ஐந்தாறு குழந்தைகள். திடீரென்று ஒரு நாள் ஒரு குழந்தை இறந்து விட்டது. அதைக் குறித்துப் பெற்றவள் கதறி அழுதாள். நினைத்து நினைத்துக் குமுறினுள். அவள் அழுததைக் கண்ட உன் தாயார், ''ஏனம்மா இப்படி அழுது கொண்டிருக்கிருய்? இறந்த குழந்தை மீண்டும் வருமா? இருக்கும் குழந்தைகளின் முகங்களைப் பார்த்து ஆறுதல் பெறு'' என்று சமாதானம் கூறினுள். குழந்தையைப் பறி கொடுத்த வளோ பொங்கி யெழுந்தாள். ''உனக்கொரு குழந்தை இருந்து, அது இறந்து போயிருந்தால் நீ இப்படிப் பேச மாட்டாய். குழந்தையே இல்லாததால் உன் மனம் கல்லாய் இருக்கிறது'' என்று கடிந்து கொண் டாள். உடனே உன் தாயார், ''தெரியாத்தனமாகச் சொல்லி விட்டேன். என்னை மன்னித்து விடம்மா'' என்று அவளுக்கு நமஸ்காரம் செய்து மன்னிப்புக் கேட்டாள். அப்போது அம் மாதிரி மன்னிப்புக் கேட்டதனுல் தான் இப்போது நீ உயிருடன் இருக்கிருய். இல்லாவிட்டால் உன் உயிருக்கே ஆபத்து நேரிட்டிருக்கும்......''

இவ்வாறு திருத்தணிகேசர் கூறியதும் சேது, ''இனி நான் என் பெற்ளுேரிடம் போய்ச் சேருவேனு மாட்டேனு?'' என்று கேட்டான்.

''நிச்சயம் போய்ச் சேருவாய். குழியில் விழுந்த கன்றுக் குட்டியை அவர்களே வந்து அழைத்துச் சென்றது போல் உன்னையும் உன் வீட்டாரே வந்து அழைத்துச் செல்வார்கள். கவலைப்படாதே'' என்று கூறி, திருத் தணிகேசரும் வள்ளிமலை சுவாமிகளும் மறைந்து விட்டார்கள்.



பள்ளிச் சிறுவன்
சேதுராமன்

அரையாண்டுப் பரீட்சை எழுதாமல் வீட்டை விட்டுச் சென்ற சேது, ஆண்டுத் தேர்வில் எப்படியோ தேறிவிட்டான். குருநாதரின் ஆசியாலேயே தேர்வில் வெற்றி பெற்றதாக எண்ணினுன் சிறுவன் சேது.

1952-ம் ஆண்டில் சேதுராமன், எஸ். எஸ். எல். சி. தேர்வு எழுத வேண்டும். பரீட்சைக்குப் பணம் கட்ட வீட்டில் பதினைந்து ரூபாய் கொடுத்தார்கள். ஆனுல், அவன் அதைக் கட்டவில்லை. ஒரு ரூபாயை மட்டும் எடுத்துக் கொண்டு, மீதி பதினுன்கு ரூபாயைப் பெட்டியில் வைத்து விட்டான். ஒரு சீட்டில், ''எனக்கு இந்தப் படிப்புப் படிக்க இஷ்டமில்லை. இதற்காகப் பதினைந்து ரூபாய் செலவு செய்ய வேண்டாம்'' என்று எழுதி அத்துடன் பெட்டியில் வைத்து விட்டு யாரிடமும் கூருமல் காஞ்சீபுரத்திற்குச் சென்று விட்டான்.

பின்னர், அங்கிருந்து எங்கெல்லாமோ சென்று, மகாபலிபுரத்தில் இருந்த ஒரு சத்திரத்தில் படுத்து உறங்கும்போது வள்ளிமலை சுவாமிகள் கனவில் தோன்றினுர்.

''சேது, நீ வீட்டை விட்டு வந்தது நன்மையும் தீமையும் கலந்தது. நடமாடும் தெய்வங்களான தாய் தந்தையரைத் துயரத்துக்குள்ளாக்கிப் பிரிந்து வந்தது தவறு. நீ நாளைக்குத் திருப்போரூருக்குப் போ. கந்தசுவாமி ஆலயத்தில் ஒரு கிழவரைக் காண்பாய். அவர் உனக்கு நல்வழி காட்டுவார்'' என்று கூறி மறைந்தார்.

**வீ**ட்டில் யாரிடமும் சொல்லிக் கொள்ளாமல் வெளியே புறப்பட்டு வந்த சிறுவன் சேதுராமன், மகாபலிபுரம் சத்திரத்தில் உறங்கிக் கொண்டிருந்தான். அப்போது கனவு ஒன்று கண்டான். அந்தக் கனவு அவன் வாழ்க்கைப் பாதையையே மாற்றி யமைத்தது.

கனவு கலைந்ததும் தூக்கத்திலிருந்து விழித்துக் கொண்டான் சேதுராமன். 'நீ திருப்போரூருக்குப் போ' என்று குருநாதரான ஸ்ரீ வள்ளிமலை சுவாமிகள் கனவில் கூறியதைப் பற்றித் தீவிரமாகச் சிந்தித்தான். முதல் நாள் திருப்போரூருக்குச் சென்று முருகனை வழிபட்டுத் திரும்பியதை அவன் நினைவுபடுத்திக் கொண்டான். சுவாமிகளோ அவனை மீண்டும் அங்கு போகச் சொல்கிருர். குருவின் கட்டளையை மீற முடியுமா? பொழுது விடிந்ததும் திருப்போரூருக்குப் புறப்பட்டுச் சென்ருன்.

திருக்குளத்தில் நீராடிவிட்டு, வேட்டியை உலர்த்தி உடுத்திக் கொண்டு, திருநீறு பூசி, ஆலய தரிசனத்திற்குச் சென்ருன். கண்கண்ட தெய்வமாம் முருகனை வழிபட்டான். ஏழைக்கிரங்கும் பெருமானின் பெருங் கருணையை நினைத்து, நெஞ்சம் நெகிழ்ந்து கண்ணீர் உகுத்தான். கருவறையை வலம் வந்தான். அரை மணிக்கு மேல் சந்நிதியில் தங்கியிருந்தான். வள்ளிமலை சுவாமிகள் கூறியது போல், அங்கு ஒரு கிழவரையும் காணவில்லை. ஏமாற்றத்துடன் திரும்பினுன்.

கோபுர வாசலை நெருங்கி யிருப்பான் சேதுராமன். பின்னால் யாரோ நடந்து வரும் ஒலி கேட்டது. திரும்பிப் பார்த்தான். என்ன ஆச்சரியம்!

குருநாதர் கூறியது போலவே அங்கு ஒரு கிழவர் தென்பட்டார்! அவருக்கு எண்பது வயதிருக்கும். மெலிந்த உருவம். நல்ல உயரம். நீண்ட வெண்தாடி அவர் மார்பில் புரண்டது. நெற்றியில் திருநீறு துலங்கியது. வெண்மை நிறத்தில் ஓர் அங்கி அணிந்திருந்தார். அந்த உருவத்தைப் பார்த்ததும் மெய்ம்மறந்து நின்று விட்டான் சேதுராமன். சிறுவனின் உடல் சற்று நடுங்கியது. அவனுக்குப் பேச நா எழவில்லை.

கிழவர் அவனை அன்புடன் அருகில் அழைத்தார். ஆதரவோடு முதுகில் தடவிக் கொடுத்தார். ''உன் பையை என்னிடம் கொடு'' என்றார். பதில் பேசாமல் தன் கைப் பையை அவரிடம் கொடுத்தான் சேது. கிழவர் தன் கையில் மடித்து வைத்திருந்த ஒரு காகிதத்தை அந்தப் பையில் போட்டுவிட்டு, அதைச் சிறுவனிடமே திருப்பிக் கொடுத்தார்.

பின்னர், சேதுவை கோயிலுக்குள் அழைத்துச் சென்று அவன் பார்க்காத இடங்களை யெல்லாம் சுற்றிக் காட்டினார். நன்றாக சுவாமி தரிசனம் செய்து வைத்தார். சிறுவனின் பேரானந்தத்தைக் கேட்கவா வேண்டும்?

திருப்போரூரிலுள்ள உணவு விடுதி யொன்றில் சேதுவுக்கு ஆகாரம் வாங்கிக் கொடுத்து விட்டு, அவனைத் திருக்கழுக்குன்றத்திற்கு அழைத்துச் சென்றார் அந்தக் கிழவர். மலைக் கோயிலில் தரிசனம் செய்து வைத்தார். மதியத்தில் பறவைகள் வந்து அமுதுண்ணும் அதிசயத்தையும் சிறுவனுக்குக் காட்டினார். இவன் மகிழ்ச்சிக்கு எல்லையேது?

குன்றிலிருந்து இறங்கி வந்து ஒரு வீட்டினுள் நுழைந்து, ''அம்மா, சாதம் போடம்மா'' என்றார் கிழவர். ஏற்கெனவே ஏற்பாடு செய்து வைத்திருந்தது போல் அந்த அம்மாள் இரு நுனி இலைகள் போட்டு, தயாரித்து வைத்திருந்த உணவு வகைகளைப் பரிமாறினாள். சேதுராமனுக்கு நல்ல பசி. வயிறார உண்டான். கிழவரும் ரசித்துச் சாப்பிட்டார்.

அடுத்து இருவரும் பஸ் ஏறி செங்கல்பட்டுக்கு வந்தனர். அங்கிருந்து மாலை ரயிலில் சென்னைக்குப் புறப்பட்டனர். சேதுவுக்குத் தின்பண்டங்களெல்லாம் வாங்கித் தந்தார் கிழவர். அவனைப் பற்றியும் வீட்டிலுள்ளோரைப் பற்றியும் அக்கறையுடன் விசாரித்தார்.

எழும்பூர் ரயில் நிலையத்தில் வந்து இறங்கி, இருவரும் சிந்தாதரிப் பேட்டை மங்கபதி நாயக்கன் தெருவை யடைந்தனர். தமது கையில் இருந்த மீதி சில்லறையை சேதுவின் பையில் போட்டார் கிழவர். ''வேண்டாம் தாத்தா'' என்று அவன் எவ்வளவு தடுத்தும் அவர் கேட்கவில்லை. ''சேது, உன் வீடு எங்கே யிருக்கிறது?'' என்று கேட்டார் கிழவர். ''அடுத்த தெருவில் இருக்கு தாத்தா'' என்று கூறி, கிழவரை வேதகிரி மேஸ்திரி தெருவுக்கு அழைத்து வந்து, தன் வீட்டைக் காட்டினான் சேது. கிழவர் வெளியே நின்று கொண்டு, ''உள்ளே போ'' என்றார். தன் பெற்றோரும் பிறரும் அந்த அதிசயத் தாத்தாவைக் காண வேண்டும் என்ற

கொள்ளை ஆசை சேதுவுக்கு. ''தாத்தா, நீங்களும் எங்க வீட்டுக்கு வாங்கோ'' என்று அழைத்தான். தாத்தா மறுத்தார். சிறுவன் பிடிவாதம் பிடித்தான். அவர் மசியவில்லை. ''நீ போய் உன் பையை வைத்து விட்டு வரப் போகிறாயா, இல்லையா?'' என்று சற்று உரிமையோடு கடிந்து கொண்டார் கிழவர். சேது துள்ளிக் குதித்துக் கொண்டு வீட்டுக்குள் ஓடினான்.

காணாமற் போன பிள்ளையைக் கண்டதும் தர்மாம்பாளின் பெற்ற வயிற்றில் பால் வார்த்தது போலாயிற்று. ''சேது, வந்துட்டியாடா கண்ணே? எங்கேடா போயிருந்தே? எப்படிடா வந்தே?'' என்று கேட்டாள் உணர்ச்சி வசப்பட்டவளாய்.

''அம்மா, எல்லாம் அப்புறம் சொல்றேன். சீக்கிரம் வாசலுக்கு வாயேன். என்னைக் கொண்டு வந்துவிட்ட தாத்தாவைப் பாரும்மா. அவரை நீ உள்ளே கூப்பிடேன். நான் கூப்பிட்டா வர மாட்டேங்கிறார்'' என்று உற்சாகத்துடன் கூவிக் கொண்டே வாசல் பக்கம் ஓடி வந்தான் சேது. வீட்டிலிருந்தவர்கள் அவன் பின்னால் ஓடி வந்து தெருவில் எட்டிப் பார்த்தார்கள். ஆனால், அங்கு கிழவரைக் காணவில்லை. அதற்குள் அவர் எங்கோ போய் விட்டார். இந்த ஏமாற்றத்தை சேதுராமனால் தாங்க முடியவில்லை. தனக்குப் பெரும் ஆதரவாகவும் அருந் துணையாகவும் இருந்த கிழவரைப் பிரிந்திருக்க அவனால் முடியவில்லை. ''தாத்தா, தாத்தா, என்னை விட்டுட்டு எங்கே தாத்தா போயிட்டே'' என்று கதறிக் கொண்டே நடுத் தெருவில் ஓடினான். தாயும் சகோதரனும் பின்னால் ஓடிச் சென்று, அவனைக் கட்டிப் பிடித்து, வலுக்கட்டாயமாக வீட்டுக்குள் அழைத்து வந்தனர்.

இரவு சாப்பிடாமலேயே உறங்கி விட்டான் சேதுராமன்.

கனவில் ஸ்ரீ வள்ளிமலை சுவாமிகள் தோன்றினார். ''உன்னுடன் வேறு யார் வருவார்கள்? நான்தான் வந்தேன். உன்னை உன் வீட்டில் கொண்டு போய்ச் சேர்க்கலாம் என்று வந்தால்,எல்லாருக்கும் தரிசனம் கொடுக்கச் சொல்கிறாயே? உன் பொருட்டுதான் வந்தேன். அதனால்தான் ஒருவர் கண்ணிலும் படாமல் சென்று விட்டேன். பைக்குள் நான் வைத்த காகிதத்தைப் பிரித்துப் பார். நாளை மாலை, குத்து விளக்கின் ஐந்து முகங்களையும் ஏற்றி வைத்து, வீட்டிலுள்ளவர்களெல்லாம் காகிதத்திலுள்ள பாடல்களைக் கும்மியடித்துப் பாடுங்கள். உங்களுக்கு எல்லாவித நன்மைகளும் உண்டாகும்'' என்று குருநாதர் கூறிவிட்டு மறைந்து விட்டார்.

மறு நாள் ஆவலுடன் அந்தக் காகிதத்தை எடுத்துப் பார்த்தான் சேதுராமன். அதில் நூற்றெட்டு 'ஹர ஹரோ ஹர' நாமாவளிகள் எழுதியிருக்கக் கண்டான். திரு முருகனின் பெருமை பேசும் அந்தக் கும்மிப் பாடல்கள் தன் கையெழுத்திலேயே இருந்த அதிசயத்தையும் கண்டு வியந்தான். திருப்போரூர் முருகர், கிழவராக வேடம் புனைந்து வந்து, தந்தருளிய அந்த நாமாவளியை வீட்டிலுள்ளோர் அனைவரும் பக்தி சிரத்தையுடன் கும்மியடித்துப் பாடி மகிழ்ந்தனர்.

இந்தப் பாடல்களே சாதாரண சேதுராமனை 'அருட்கவி' சேதுராமன் ஆவதற்கு மூல காரணமாக அமைந்தன. இந்தக் கும்மி கிடைத்த சில நாட்களுக்குள் சேதுராமன் ஆசு கவிகள் பாடத்_தொடங்கினன்.

சேதுராமன், அருட்கவியாவதற்குக் காரணமாக அமைந்த கும்மிப் பாடலைக் கீழே காணலாம்.

**திருமுருகன் ஹர ஹரோ ஹரா கும்மி:**

திருப்பரங்குன்றத் தெய்வத்திற்கு ஹர ஹரோ ஹரா
விருப்புறுவார் வினையறு வேற்(கு) ,,
திருப்புகழ்த் தமிழ்த் தெய்வத்திற்கு ,,
பொருப்புதொறும் இருப்பவற்கு ,,

திருமாலார் மருமகனுக்கு ,,
பெருமால்கீழ்ப்பரமர் பிள்ளைக்(கு) ,,
தருமால் கட்டலையாள் தோன்றற்(கு) ,,
வருமால் திரு குருநாதற்கு ,,

திருச்செந்தூர்த் தலைவனுக்கு ஹர ஹரோ ஹரா
செருச்சென்றசெல்வன் தனக்(கு) ,,
அருச்சுனனின் அதிபர் மருகற்(கு) ,,
திருச்சூருறை முருகன் தனக்(கு) ,,

கடம்பணியும் கந்தனுக்கு ,,
திடம்பணியும் தீரனுக்கு ,,
விடம்பணிதாம் அணிந்தார் குருவுக்(கு) ,,
நடம்புரிவார் நல்கியவற்கு ,,

பழநி வாழுங் கிழவனுக்கு ,,
மழலைக் குழவி குருபரற்கு ,,
தழல்நிறத்தார் தந்தை என்றூற்(கு) ,,
கழலணியும் குமர வேட்கு ,,

வடபழநிவாழ் வேலவற்கு ,,
மடப்பிடியாள் மணவாளற்கு ,,
படர்கொடியின் பாகனுக்கு ,,
தடம்புயத்தான் தணிகையானுக்(கு) ,,

குருமலைதனில் மருவியவற்(கு) ,,
திருமுருகன் தேவ தேவற்(கு) ,,
ஒருபிரமனை உளைய வைத்தாற்(கு) ,,
பெருபரமற்கு உபதேசித்தாற்(கு) ,,

பொய்யா மொழியைப் பொய்க்கச் செய்தாற்(கு)
மெய்யாய் வள்ளியைப் பணிந்தவற்கு ,,
செய்யா வினைதீர் செவ்வேளவற்கு ,,
உய்யாறுதந்து உம்பரைக் காத்தாற்(கு) ,,

திருத்தணியில் உதித்தவற்கு ஹர ஹரோ ஹரா
உருத்திர சன்மன் ஊமைப்பிள்ளைக்(கு) ,,
விருத்தனான வள்ளி மணாளற்(கு) ,,
திருத்திய புனத் தருவானாற்கு ,,

சம்பந்தனாய் அன்றுதித்தாற்(கு) ,,
சம்பந்தமே தெளிய வைப்பாற்(கு) ,,
சம்பந்தமாய்த் தோன்றியவற்(கு) ,,
சம்பந்தமாய் உளரைச் சேராற்(கு) ,,

வள்ளி மலைவாழ் வேந்தனுக்கு ,,
வள்ளிதனை வந்தணைந்தாற்(கு) ,,
கள்ள வேடத்தில் உள்ளே வைத்தாற்(கு) ,,
தெள்ளமுதமும் மாவு முண்டாற்(கு) ,,

அருணகிரி அருட் புகழுருவுக்(கு) ,,
வருணனாகப்பொழிந்தார் குருவுக்(கு) ,,
கருணைாகக் கொடுத்தார் திருவுக்(கு) ,,
தருண மிதெனத் தந்து போந்தார்க்(கு) ,,

பழமுதிர் சோலை யுடையோனுக்கு ,,
மழமுதிர்களி றழைத்தோனுக்(கு) ,,
கிழவன் திருப்புகழ்ச் சாமி தோழற்(கு) ,,
குழவியுங்கொள் குமர நாதற்(கு) ,,

சிக்கல் சிங்கார வேலவனுக்(கு) ,,
விக்க லெடுக்கையில் தக்க நீருண்டவற்(கு) ,,
பக்கல் யானையைப் பரிவுடன் பெற்றவற்(கு) ,,
சிக்கல்தீர்த்துச் சேவடிசேர்ப்பவற்(கு) ,,

கிரிவதஞ் செய்திரி சரவண பவற்(கு) ,,
கரியுருவானவர் கணபதி இளவற்கு ,,
நரிபரி யாக்கினார் எரிதனிற் றோன்றினாற்(கு) ,,
புரிதவன் குறுமுனி தனக்கருள் புரிபவற்(கு) ,,

அறுவர் முலையுண்ட அறுமுகத்தோனுக்கு ,,
உறுபவம் ஒழித்தருள் ஓங்காரரூபற்கு ,,
குறிஞ்சிக் கோட்டத்துக் குமரவேள்தனக்(கு)
செறிதரு விரிஞ்சைச் செல்வச்செழியற்(கு) ,,

எட்டிகுடி வேலன் எம்குல தெய்வத்திற்கு ,,
மட்டறு புகழுங்கொள் சக்திச் சரவணற்(கு) ,,
கட்டழகன் கந்தன் குளத்திற் பிறந்தவற்(கு)
சிட்டரும் பாடிடும் சடாக்ஷர ரூபற்(கு) ,,

கந்தகோட்டத்துறை கந்த பிரானுக்கு ,,
தந்தியின் கொம்பைப் புணர்ந்தவர் தமக்(கு)
தந்தைதனக்கே தாம்குருவானவற்(கு) ,,
சந்ததமும் பந்தத் தொடரறுப் பார்தமக்(கு)

போரூரிலே வாழும் புண்ணியனுக்கு ஹர ஹரோ ஹரா
ஆரூரிலே தேரும் ஆண்டவனுக்கு ,,
ஈரிரண்டோ டிரண்டு வீடற்கு ,,
யாரும் போற்றிடும் கலி வரதற்(கு) ,,

எண்கணிலும் இருப்பவற்கு ,,
எங்கனுமே வாழ்பவற்கு ,,
தங்கமயில் வாகனற்கு ,,
சங்கரியும் பழமென் றுரைத்தாற்(கு) ,,

குகவேலன் குருப ரோத்தமற்(கு) ,,
இகபரமும் இன்பம் தருவாற்(கு) ,,
சகமுழுதும் சாற்று புகழோற்(கு) ,,
மகமாயை பெற்றெடுத்தவற்(கு) ,,

குமர கோட்டத்துக் குக தேவனுக்(கு) ,,
அமரரும் போற்றும் அன்பனவற்(கு) ,,
சமர்தனில் வென்ற சண்முகற்(கு) ,,
சமய வாதம் தீர்த்தவற்(கு) ,,

செங்கோட்டுக் கார்த்திகேயற்(கு) ,,
செங்கோட்டு யானை கணவற்(கு) ,,
பொங்கேட்டிற் பாதம் பதித்தாற்(கு) ,,
நங்கேட்டை யுடனே தீர்ப்பாற்(கு) ,,

நாகை வாழும் நம்பெருமாற்(கு) ,,
வாகை சூடும் வெற்றி வேலற்(கு) ,,
தோகை மயிலன் திருவருணையோற்(கு) ,,
கேகையமும் வேலுங் கொண்டாற்(கு) ,,

அரசவையில் அன்று நின்றாற்(கு) ,,
சிரசதனிற் கால்வைத்தார் மருகற்(கு) ,,
சரசமாகச் சண்டை தீர்த்தாற்(கு) ,,
முரசமொலிக்க மரத்தை யறுத்தாற்(கு) ,,

பச்சை மாலின் மருகோன் தனக்(கு) ,,
இச்சா சக்தி தெய்வ வள்ளிக்கு ,,
சச்சிதானந்த ஞான சக்திவேற்(கு) ,,
வச்சிரனேல் கிரியா சக்திக்(கு) ,,

ஓங்கார ரூப மயிற்(கு) ,,
தாங்காத புகழுரை சேவற்(கு) ,,
காங்கேயன் காலரவத்திற்(கு) ,,
நீங்கேதும் வாராதருள்வாற்(கு) ,,

திருப்போரூர் முருகரே பாடித் தந்துள்ள இந்த நாமாவளிகள், ஜபத்துக்குரிய நூற்றெட்டு என்னும் எண்ணில் அமைந்திருப்பதால் இதைப் பாராயணம் செய்வதும், பெண்மணிகள் கும்மியடித்துப் பாடுவதும், மண்ணுலக நல்வாழ்வுக்கும் விண்ணுலகப் பெரு வாழ்வுக்கும் உறுதுணையாய் அமையும்.



ஸ்ரீ சோமநாதேச்வரர் ஆலயம் (மேல்பாடி)

அருட்கவி சேதுராமனின் உள்ளியங்கிய தெய்விகப் பேராற்றலைக் கேட்டு உளம் மகிழ்ந்தார், தமிழ்ப் பேரறிஞரான தணிகைமணி வ. சு. செங்கல்வராயப் பிள்ளையவர்கள். பெரும் பேறு பெற்ற அந்தப் பிள்ளை, தெய்வ சந்நிதிகளின் முன் அருட்பாக்களை வழங்கும் அதிசயக் காட்சியை நேரில் காண வேண்டும் என்று விழைந்தார். அவரைத் தமது இல்லத்திற்கு அழைத்தார். பூஜை அறையில் கொலுவீற்றிருக்கும் குல தெய்வமாம் தணிகேசன் மீது பாடல்கள் இயற்றும்படி கேட்டுக் கொண்டார். தணிகேசனும் சேதுராமனைக் கருவியாகக் கொண்டு தன் பெருமையை அருட்புகழாகப் பாடிக் கொண்டார். ராக, தாளத்தோடு, வெள்ளமெனப் பாய்ந்து பெருகிய அந்தப் பாக்களையும், விருத்தங்களையும், கீர்த்தனங்களையும் கேட்டுக் கேட்டு உருகிப் போனார் பிள்ளையவர்கள். பலவற்றைத் தமது கையாலேயே எழுதிக் கொண்டார். தமது முதிர்ந்த அறிவைக் கொண்டு அவற்றை ஆராய்ந்தார். இணையிலா அந்தப் படைப்புக்களில் இழையோடிய அருள் லயத்தையும் பொருள் நயத்தையும் கண்டு

23

அதிசயித்தார். முருகனின் பெருங் கருணையை நினைந்து நினைந்து நெஞ்சம் கரைந்தார். இறைப் பணியாற்றும் சேதுராமனிடம் பெற்றோர்க்குரிய பாசமும் பரிவும் காட்டி, அன்போடு அரவணைத்து, ஆதரவோடு போற்றி வந்தார். ஐந்தாறு ஆண்டுகளில் அன்னார் இல்லத்தில் மட்டும் ஆயிரம் பாடல்களுக்கு மேல் தோன்றின. அவற்றில், முதல் ஆறு மாதங்களில் பாடப்பெற்ற 233 பாடல்களைத் தொகுத்து, 'திருத்தணித் திருவிதிகை அருட்புகழ்' என்ற தலைப்பில், பிள்ளையவர்கள் ஒரு நூலை வெளியிட்டிருக்கிறார்கள்.

அருளமுதம் வற்றாமல் பொங்கியது. சேதுராமன் பல தலங்களுக்குச் சென்றார். பல தெய்வங்களை வழிபட்டார். தெய்வப் பணி புரியும் நல்லோர் கூட்டம் அவரை நாடி வந்து, 'எங்கள் ஊர் ஆலயத்திற்கு வாருங்கள்' 'எங்கள் ஊர் பெருமானைத் தரிசனம் செய்யுங்கள். அவர் புகழ் பாடுங்கள்' என்று வருந்தி அழைத்துச் சென்று திருத்தொண்டாற்றினார்கள்.

இவ்வாறு திருவருளால் உந்தப்பட்டு பல்வேறு ஆலயங்களில் பத்தாயிரத்திற்கும் அதிகமான பாடல்களைப் பாடியருளினார் சேதுராமன். அன்னாரது அன்புச் சகோதரர் அருளிசைமணி சுப்ரமணியமும் உடனிருந்து, அவற்றை எழுதி வைத்துக் கொண்டார். சில அன்பர்களது நன்முயற்சியாலும், இவரது நல்லாதரவாலும் அவ்வப்போது சில பாடல்கள் நூல் வடிவத்தில் வெளி வந்திருக்கின்றன. இன்னும் எண்ணாயிரத்துக்கு மேற்பட்ட பாடல்கள் அச்சேறாமல் நோட்டுப் புத்தகங்களிலேயே இருக்கின்றன. செல்வம் படைத்துள்ளவர்கள் முன் வந்து இப்பாடல்கள் நூல் வடிவம் பெற உதவினால் செந்தமிழுக்கும் நம் சமயத்திற்கும் சன்மார்க்கத்திற்கும் அரும்பணி யாற்றியவர்களாவார்கள். ஆத்திக உலகம் அவர்களுக்கு நன்றி செலுத்தும்; நாட்டில் தெய்வ நெறி தழைக்கும்; அருட் செல்வர் கூட்டம் பெருகும்; அறம் வளரும்; அன்பு சூழும்; அமைதி நிலவும்.

அருட்கவி சேதுராமனை வைஷ்ணவி தேவி ஆட்கொண்டாள். தன் பக்தனைத் திருவடி தேடி வந்த அன்பரைத் தன் அடிமை ஆக்கிக் கொண்டதோடு அவர் ஆச்ரமத்தையும் மாற்றி அமைத்து, அருட்பணிக்குக் கருவியாக்கிக் கொண்டாள் வைஷ்ணவி தேவி. தேவியின் அதிசய சக்தியை நினைத்துப் பார்க்கும் போது, பக்திப் பரவசமாகி, மெய் சிலிர்க்க, கண்ணீர் மல்கி, அப் பெருங் கருணைக் கடலில் நீந்தித் திளைத்து, கரைந்து, மறைந்து விடுகின்றோம்.

எஸ். பார்த்தசாரதி, இன்ஷ்யூரன்ஸ் கம்பெனியின் அதிபராக இருந்த போது அவருக்குக் கீழ் ஓர் ஊழியராகப் பணியாற்றி வந்தார் சேதுராமன். அப்போது ஏற்பட்ட தொடர்பு, தெய்வச் சேர்க்கையாகி, வைஷ்ணவியின் சந்நிதியில் அன்புப் பிணைப்பால் இறுகியது. ஆலயத்திற்கு வந்து போன சேதுராமனை உன்னிப்பாகக் கவனித்து வந்தார் சாது பார்த்தசாரதி. தமக்குப் பின் தம்மைத் தொடர்ந்து வைஷ்ணவி தேவிக்குத் தொண்டு புரியப் பிறந்திருப்பவராகவே சேதுராமனைக் கருதினார். குடும்ப வாழ்க்கையில் ஈடுபட்டு, வயிற்றுப் பிழைப்புக்காக உத்தியோகம்

பார்த்தாலும், சில ஆண்டுகளில் அவரும் சந்நியாசம் மேற்கொள்வார் என பார்த்தசாரதிக்கு நிச்சயமாகத் தெரிந்திருந்தது. அந்த ரகசியத்தை அவர் யாரிடமும் கூறவில்லை. 1957-ம் ஆண்டில் சேதுராமனுக்கு எழுதிய கடிதம் ஒன்றில், ஆன்மிக வாழ்க்கை மேற்கொள்ளும்படியும் அதற்காகத் தமிழிலுள்ள பக்தி இலக்கியங்களை நன்கு படித்து உணரும்படியும், நமது புராண இதிகாசங்களையும் பகவத்கீதையையும் வடமொழியிலேயே படித்தறியும் திறன் பெறும்படியும் அவரைக் கேட்டுக் கொண்டார். இதற்கெல்லாம் அவருடைய அலுவலகப் பணி தடையாக இருக்கும் என்பதையும் அதில் எடுத்துக் கூறியிருந்தார்.

அதற்கு அடுத்த ஆண்டு, ஒரு நாள் தியானத்தில் இருந்தபோது வைஷ்ணவி தேவியின் திருவுளப்பாங்கை அறிந்து, அதை மற்ருெரு கடிதத்தின் மூலம் சேதுராமனுக்குத் தெரிவித்திருந்தார் பார்த்தசாரதி. குடும்பத்திற்கு ஆற்ற வேண்டிய கடமைகளைச் செய்த பிறகு, தேவியின் தொண்டிற்குத் தன்னை அர்ப்பணித்துக் கொண்டு, இறுதியில் அன்னையுடனேயே ஐக்கியமாகி விடப் போவதைப் பற்றி அதில் குறிப்பிடப்பட்டிருந்தது. கடிதங்கள் எழுதியதோடு நேரிலும் தேவியின் கருத்தையும் தமது எண்ணத்தையும் சேதுராமனுக்கு மிகவும் தெளிவாக எடுத்துரைத்தார் பார்த்தசாரதி. ஆனுல், சேதுராமன் எதற்கும் செவி சாய்க்கவில்லை. சாது கூறியதற்கு இணக்கம் தெரிவிக்கவில்லை. தமக்குப் பிறகு வைஷ்ணவி ஆலயத்தின் நிர்வாகத்தை எப்படி நடத்துவது என்பதைப் பற்றித் தீர்மானிப்பதற்காக 1968-ம் ஆண்டு தொடக்கத்தில், 'ஸ்ரீவைஷ்ணவி தொண்டர் படை' என்ற குழு ஒன்றை அமைத்தார் சாது பார்த்தசாரதி. தம்முடன் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்த தேவி பக்தர்களில் முப்பது பேரை அதில் அங்கத்தினர்களாகச் சேர்த்து வைத்திருந்தார். அப் பட்டியலில் சேதுராமனின் பெயர் இல்லாதது அவருக்குப் பெருங் குறையாக இருந்தது. ''இவன் இப்படிப் பராமுகமாக இருக்கிருனே, இவன் சற்று அக்கறை காட்டியிருந்தால் இவன் பெயரையல்லவா முதலில் எழுதி யிருப்பேன்'' என்று ஏக்கப் பெருமூச்சு விட்டார் பார்த்தசாரதி.

தமிழ் வருடப் பிறப்புக்கு முதல் நாள். பௌர்ணமி புண்ணிய தினம். 'ஸ்ரீ வைஷ்ணவி தொண்டர் படை'யின் பெயர்கள் அடங்கிய பட்டியலையும் அந்த அமைப்பின் விதி முறைகளையும் எழுதி பூஜையின்போது அன்னையின் பாதங்களில் வைத்து அவளது ஆசியைக் கோரினுர் பார்த்தசாரதி. பின்னர், அப் புத்தகத்தைத் தமது அறையில் கொண்டு வந்து வைத்தார்.

மறு நாள் புத்தாண்டு பிறந்தது. கண் விழித்து, அறையிலிருந்து வெளியே வந்த பார்த்தசாரதி, வெளித் திண்ணையில் உறங்கிக் கொண்டிருந்த சேதுராமனைக் கண்டு பேராச்சரியம் அடைந்தார். அவரை எழுப்பி, முதல் நாள் இரவு அவர் அங்கு வந்து சேர்ந்த விவரத்தை அறிந்தார். ஆலயத்திற்குள் சென்று தேவியைத் தரிசித்து, கற்பூரார்த்தி காட்டி விட்டு, ''அம்மா, இது உன்னுடைய திருவிளையாடல்தான். இனி என் கவலை விட்டது'' என்று கூறி மகிழ்ச்சியில் திளைத்தார் சாது பார்த்தசாரதி. பின்னர், தாம் சற்றும் எதிர்பாராத வகையில் அங்கு

வந்த சேதுராமனைத் 'தொண்டர் படை'யில் 31-வது நபராகச் சேர்த்துக் கொண்டு அவர் கையெழுத்தையும் பெற்றுக் கொண்டார்.

பௌர்ணமியன்று தேவி தரிசனம் செய்யப் புறப்பட்டு வந்த சேது ராமன், நேரத்தில் பஸ் கிடைக்காததால், நேரம் கழித்து ஆலயத்திற்கு வந்து சேர்ந்தார். கோயில் பூட்டியிருந்தபடியால், திருவிளக்கு எரிவதை ஜன்னல் வழியாகக் கண்டு, தேவியையே தரிசித்து விட்டதாகத் திருப்தி அடைந்து, அன்றிரவு ஆச்ரமத்திலேயே தங்கி விட்டார். மறு நாள் விடுமுறையானதால் புத்தாண்டு பூஜையைப் பார்த்து விட்டுப் போகலாம் என்ற எண்ணத்தில் ஆலயத்தில் ஓரிரவு தங்கியவரை, தேவி தன்னிழலி லேயே தங்கி விடும்படி செய்து கொண்டு விட்டாள்.

''சேது, நீ ஆச்ரமத்திலேயே தங்கி, இங்கிருந்து ஆபீஸ் போய் வரு கிறாயா?'' என்று சாது கேட்டதற்கு, ''சரி, தங்கள் இஷ்டப்படியே செய் கிறேன்'' என்று சேதுராமன் கூறவே, அன்று முதல் 'ஸ்ரீனிவாஸ் குடி' ரில் ஓர் அறையில் தங்கினார். இரண்டு மாதங்கள் கழித்து அவருக்கு சமைத் துப் போட அவரது தாயார் தர்மாம்பாள் வந்து சேர்ந்தார். ஒரு வாரத் திற்கெல்லாம் பெரிய தாயாரும் வந்து உடன் தங்கினார்.

அந்த ஆண்டு ஆடி அமாவாசை தினத்தன்று (25-7-68) சேதுராமன் விடியற்காலையில் ஒரு கனவு கண்டார். அது அவர் துறவறம் மேற் கொள்வதற்கு முதற் கட்டமாக அமைந்தது.

ஆச்ரமத் தோட்டத்திலுள்ள திருக்குளத்தில் சேதுராமன் நீராடிக் கொண்டிருக்கிறார். திருத்தணிக்கோ, திருப்பதிக்கோ சென்று பிரார்த் தனை செலுத்திவிட்டு வந்தவர் போல் தலை மொட்டை அடிக்கப்பட்டிருந் தது. நீந்தி விளையாடியதில் அவருடைய கடைசி ஆடையும் உடலை விட்டுப் பிரிந்து விட்டது. பூணூலும் கழன்று எங்கோ விழுந்து விட்டது.

சேதுராமனை வெட்கம் பற்றிக் கொண்டது. அரையில் வேட்டி யில்லாமல் எப்படிக் கரை ஏறுவது? குளக்கரையில் நாற்புறமும் பெருங் கூட்டமாக மக்கள் நின்று கொண்டிருக்கிறார்கள். 'இத்தனை பேர் வேடிக்கை பார்த்துக் கொண்டு நிற்கிறார்களே, யாராவது எனக்கு ஓர் ஆடை கொடுத்து உதவக் கூடாதா?' என்று சேதுராமன் மனத்திற்குள் நினைத்துக் கொள்கிறார்.

அப்போது வடப்புறத்திலுள்ள படிகளின் வழியே சாது பார்த்த சாரதி இறங்கி வருகிறார். அவர் கையில் எட்டு முழம் காவித் துணி இருக் கிறது. ''இந்தா சேது, இதை உடுத்திக் கொள்'' என்கிறார் சாது.

சேதுராமனுக்கு தூக்கி வாரிப் போட்டது. ''இதென்ன, காவித் துணி தருகிறீர்களே. எனக்குப் பெற்றோர் இருக்கின்றனர். அவர்களைக் காப்பாற்றும் பொறுப்பு எனக்கு இருக்கிறது. உத்தியோகத்தில் இருக்கும் என்னைத் திடீரென்று சந்நியாசம் வாங்கிக் கொள்ளச் சொல்கிறீர்களே, முடியவே முடியாது'' என்று சேதுராமன் சாதுவுடன் வாதாடுகிறார்.

அடுத்த கணம், பார்த்தசாரதிக்குப் பின்னால் வள்ளிமலை சுவாமிகள் கம்பீரமாகக் காட்சி தருகிறார். சேதுராமனைப் பார்த்து சற்றுக் கடுமையா கவே பேசுகிறார்:

''பார்த்தசாரதிதாண்டா உனக்குக் குரு. அவனிடம் போய்ச் சிறு பிள்ளைத்தனமாக ஏதோ வாதாடிக் கொண்டிருக்கிறாயே. பெரியவா ஒரு பொருளைக் கொடுத்தால் பதில் பேசாமல் அதை வாங்கிக் கொள்வதுதான் சிறியவர்களுக்கு அழகு. அசடு, அவன் கொடுக்கும் துணியைப் பேசாமல் வாங்கிக் கொள்'' என்று கூறிவிட்டு, சுவாமிகள் மறைந்து விடுகிறார். சேதுராமன் கூச்சத்துடன் கரையேறி வந்து, சாது பார்த்தசாரதியிட மிருந்து காவித் துணியைப் பெற்றுக் கொள்கிறார். அத்துடன் கனவும் கலைகிறது.

அடி முடி காண முடியாத பரம்பொருள், ஞான ஒளியாய்த் தரிசனம் தந்த திருத்தலம் திருவண்ணாமலை. ஒவ்வோர் ஆண்டும் கார்த்திகை மாதத்தில் கிருத்திகை நட்சத்திரத்தன்று மாலையில், மலைவடிவிலிருக்கும் அண்ணாமலையார், மனிதகுலம் வாழ செஞ்சுடர் சோதியாய்த் தோற்றமளிக்கிறார். மலையுச்சியில் தோன்றும் அத் தீப தரிசனத்தைக் காணக் கொடுத்து வைத்தவர்கள் 'அண்ணாமலைக்கு அரோஹரா' என்று விண்ணதிர முழக்கமிடுகிறார்கள்.

1968-ம் ஆண்டு அருணாசலத்தில் கார்த்திகை தீப தரிசனத்தைக் கண்ட லட்சக்கணக்கானவர்களில் அருட்கவி சேதுராமனும் ஒருவர். உலக பந்தங்களிலிருந்து சிறுகச் சிறுக விலகிச் சென்று, உள்ளொளி பளிச்சிட்டதன் காரணமாக, சத்திய ஒளி காட்டும் பாதையில் நற்பயணம் தொடங்கி விட்டதற்கு அடையாளமாக ஞானச் சுடரைத் தரிசித்தார். கூப்பிய கரத்தை சிரமேல் உயர்த்தி, இமை மூடி, 'அண்ணாமலைக்கு அரோஹரா' என்று நெஞ்சம் கரைய, புண்ணியம் சேர, உடல் குலுங்க உரக்கக் கூவினார். அருவமாய் அருகில் நின்றிருந்த ஸ்ரீ அருணகிரிநாதரும், ஸ்ரீ சேஷாத்ரி சுவாமிகளும், ஸ்ரீ ரமண மகரிஷியும், ஸ்ரீ வள்ளிமலை சுவாமிகளும் அருட் செல்வருக்கு அருளாசி வழங்கினார்கள்.

பின்னர், சேதுராமன் தம் நண்பர் ஒருவருடன் கிரிவலம் செய்யப் புறப்பட்டார். அண்ணாமலையார் ஆலயத்திலிருந்து புறப்பட்டவர், தித்திக்கும் திருப்புகழ் உள்ளத்தில் பொங்கி வர, தம் குருநாதருக்குத் திருப்புகழ் உபதேசம் செய்த ஸ்ரீ சேஷாத்ரி சுவாமிகளின் சமாதி ஆலயத்திற்குச் சென்றார். அங்கு வழக்கமாக வழிபாடு செய்யும் பாஸ்கராசாரிய அருணாசலம், அன்று ஏனோ சேதுராமனையே தீபாராதனை காட்டச் சொன்னார். எதிர்பாராமல் கிடைத்த இந்த வாய்ப்பைப் பெரும் பாக்கியமாகக் கருதி சேதுராமன், பரமகுருவின், சமாதி ஆலயத்திற்குப் பூஜை செய்து, குருஸ்துதிகள் சொல்லிக் கற்பூரார்த்தி காட்டினார்.

அடுத்து, ரமணாச்ரமத்திற்குச் சென்று மகரிஷியின் சமாதி ஆலயத்தைத் தரிசனம் செய்து கொண்டு, கிரிவலத்தைத் தொடர்ந்தார். தேவார,

ஸ்ரீ ஞானானந்த கிரி சுவாமிகள்



திருப்புகழ் பாக்களை ஓதிக் கொண்டு, அருட்பெருஞ் சோதியை திருவலம் செய்து முடித்தார் அருட்கவி சேதுராமன்.

அருணசல ஒளி, திருக்கோயிலூருக்கு வழி காட்டியது. மறு நாள், தபோவனத்திலிருக்கும் ஞானப்பழத்தைத் தரிசிக்கச் சென்றார் சேதுராமன். அருள் விழியாலும், புன்சிரிப்பாலும் இன்சொல்லாலும் தம்மை நாடி வருபவர்களுக்கு நற்கதி காட்டும் அப் பெருந்தகை, சேதுராமனுக்கு ஞானோபதேசம் செய்தருளினார்.

அன்று சேதுராமனுடன் ஞானனந்தகிரி சுவாமிகளைத் தரிசித்த ரிடையர்டு தாசில்தார் சிவராமகிருஷ்ண ஐயருக்கு ஓர் ஆசை தோன்றியது. பேரருளாளரின் திருச்சந்நிதியில் சேதுராமன் திருப்புகழ் பாட வேண்டும் என்று அவர் விரும்பினார். அதற்காக சுவாமிகளிடம் ஹார்மோனியப் பெட்டியைக் கேட்டு வாங்கி வர இருவரும் புறப்பட்டனர்.

சுவாமிகள் எதிரில் வந்து கொண்டிருந்தார். சிவராமகிருஷ்ண ஐயர் அவரை அணுகி, ''சுவாமி அனுக்கிரகம் செய்தால், சேதுராமனை சிறிது நேரம் திருப்புகழ் பாடச் சொல்லலாம் என்று உத்தேசம்'' என்றார் சற்றுத் தயங்கியவாறே.

சுவாமிகள் புன்முறுவல் பூத்தார்: ''சும்மா பாடிப்பாடி என்ன செய்வது? பாடியதெல்லாம் போதும். ஆடிப் பாடியது அடங்க வேண்டாமா? பாட்டு எங்கிருந்து பிறக்கிறது என்று பாட்டின் மூலத்தை ஆராய்ந்து பார்த்து அதைக் கண்டு பிடிக்க முயற்சி பண்ணட்டும். அது தெரியாமல் சும்மா பாடிக் கொண்டிருப்பதில் பிரயோசனமில்லை'' என்று சொல்லி விட்டு வேகமாக நடந்து சென்று விட்டார் சுவாமிகள்.

அருட்கவிக்கு இந்த அமுத சொற்கள் அருளுபதேசமாகத் தோன்றின. 'நான் யார்?' என்ற ஆன்மிக ஆராய்ச்சியில் இனி ஈடுபட்டு, ஆன்ம ஞான சர்ச்சையில் மனம் லயித்து, மோன நிலை எய்த சுவாமிகள் அருளாசி வழங்கி விட்டதாகவே நினைத்தார்.

சிவராமகிருஷ்ண ஐயர் சுவாமிகளைப் பின் தொடர்ந்து சென்றார். எப்படியோ மன்றாடி சுருதிப் பெட்டியை வாங்கி வந்து, தரிசன மண்டபத்தில் அன்று சேதுராமனைத் திருப்புகழ் பாட வைத்தார். சுவாமிகளும் வந்து தமது ஆசனத்தில் சிறிது நேரம் வீற்றிருந்தார். விநாயகர் துதி முடிந்ததும் எழுந்து சென்றவர், ஒன்றரை மணி நேரம் நடை பெற்ற பாராயணத்திற்குக் கடைசி வரை வரவேயில்லை.

தபோவனத்திலிருந்து புறப்பட மறுநாள்தான் சேதுராமனுக்கு உத்தரவு கிடைத்தது.

விடை பெறுவதற்கு முன் சேதுராமன் ஞானனந்தரை வணங்கி விட்டுப் பணிவுடன், ''சுவாமி, நேற்று தாங்கள் கூறிய பொன்மொழிகள் என் காதுகளில் ஒலித்துக் கொண்டே யிருக்கின்றன. அந்த உபதேச வார்த்தைகள் என் இதயத்தில் ஆழப் பதிந்து விட்டன. நான் பாடுவது அடங்கி, ஆன்மஞானம் பெற தாங்கள்தான் ஆசி வழங்க வேண்டும். அந்த நிலை சீக்கிரமே ஸித்திக்கும்படி தாங்கள் அனுக்கிரகம் புரிய வேண்டும்''

என்று கேட்டுக் கொண்டார். அதைக் கேட்டு ஞானனந்த சுவாமிகள் மீண்டும் புன்னகைத்தார்.

''அப்படியொரு நிலை ஏற்பட வேண்டுமா? எங்கே யிருந்து ஸித்திப்பது? அது அங்கேயேதானே இருக்கிறது. அது, அதுவாகத்தான் இருந்து கொண்டிருக்கிறது. ஏற்கெனவே உள்ளதைச் சீக்கிரமே நீ உணருவாய். கவலைப்படாதே. முருகனை வேண்டுவோம். அமைதியும் சாந்தியும் ஏற்படப் பிரார்த்திப்போம்'' என்று ஞானனந்தர், சேதுராமனுக்கு உள்ளன்புடன் ஆசி கூறி, விடை கொடுத்தனுப்பினர்.

தபோவனத்தை விட்டுப் புறப்பட்ட சேதுராமன், கலசப்பாக்கத்திற் கருகிலுள்ள பூண்டி கிராமத்தில் எழுந்தருளி யிருக்கும் ஆற்று சுவாமிகளைத் தரிசிக்கச் சென்றர். வட ஆற்காடு மாவட்டத்திலுள்ள மேல்மாயில் ஸ்ரீ விலட்சணனந்தாச்ரமத்தில் அருட்பணியாற்றிக் கொண்டிருந்த அன்பர் சீனுவாசன்தான் சேதுராமனைப் பூண்டி சுவாமிகளிடம் அழைத்துச் சென்றர்.

உலகத்தை மறந்து, உன்மத்தரைப் போல் திண்ணையில் அமர்ந் திருந்த அந்த மகானைக் கண்டதும் சேதுராமன் அவரிடம் தம் உள்ளத் தைப் பறி கொடுத்தார். ஒருவரிடமும் ஒரு வார்த்தை கூடப் பேசாமல், வருவோர் போவோரைப் பரிதாபமாகப் பார்த்துக் கொண்டிருந்த அந்த பரதேசியின் தோற்றம் சேதுராமனின் கண்களைக் கலங்கச் செய்தது. தம் கையிலிருந்த பூவன் வாழைப் பழத்தைப் பிட்டு மகானின் வாயில் திணித் தார். அவர் அதை மென்று தின்று சிறிய பகுதியை வெளியே துப்பி விட் டார். அது தனக்களிக்கப்பட்ட பிரசாதமாகக் கருதிய சேதுராமன், சிறிதும் அருவருப்பில்லாமல் அந்த அமுதை எடுத்து வாயில் போட்டுக் கொண்டார்.

பூண்டி மகானின் கண்களையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தார் சேதுராமன். 'பளிச் பளிச்'சென்று மின்னெளி போல் அம் மகானின் பார்வை தன்னைத் தாக்கிய போதெல்லாம், ஆன்மிக அதிர்ச்சிக்கு ஆளாகிய அற்புதத்தை உணர்ந்தார் அவர்.

தபோவனத்தில் ஞானேபதேசம் பெற்றர். பூண்டியில் நயன தீட்சை பெற்றரோ?

மகானிடம் இரண்டு வார்த்தைகளாவது பேச வேண்டும், அவரது ஆசி மொழிகளைக் கேட்க வேண்டும் என்று துடித்தார் சேதுராமன். ஆனல், பேசுவதற்குத் தைரியம் வரவில்லை. அன்பர் சீனுவாசன், சுவாமிகளிடம் இரண்டு வார்த்தைகள் பேசிய பிறகே இவருக்குச் சற்றுத் தைரியம் வந்தது. ''சுவாமி, தாங்கள் அடியேனை ஆசீர்வதிக்க வேண் டும்'' என்று கேட்டுக் கொண்டார். முதலில் அதை சுவாமிகள் காதில் போட்டுக் கொண்டதாகவே தெரியவில்லை. எங்கோ நிலைத்து விட்ட பார்வையைச் சட்டென்று திருப்பி, பேசினர்:

''காடு, மேடு, நாடு, வீடெல்லாம் தேடித் தேடி ஓடி அலைந்து என்ன பண்ணுவது? ஆடிப்பாடிய தெல்லாம் அடங்கி, ஓர் இடத்தில் அமைதியாய், உறுதியாய் அமர்ந்து, நல்லதையே நினைத்து, நல்ல தையே பண்ணிக் கொண்டு வந்தால், நல்லதே நடக்கும்.''

ஒரு கிராமவாசிக்கே உரிய நடையில், எளிய மொழியில், அரிய கருத்தைக் கூறி விட்டார் பூண்டி சுவாமிகள்.

அதையே அருளாசியாக ஏற்றுக் கொண்ட சேதுராமன், ''நான் ஊருக்குப் போய் வரேன், சுவாமி'' என்று உத்தரவு கேட்டார்.

''நல்லது, போய் வா'' என்று அன்புடன் விடை கொடுத்து அனுப்பினுர் பூண்டி சுவாமிகள்.

சென்னைக்குத் திரும்பிய சேதுராமன் மகிழ்ச்சிக் கடலில் நீந்திக் கொண்டிருந்தார். திருவண்ணமலையிலும், திருக்கோயிலூரிலும், பூண்டியிலும் தமக்கேற்பட்ட அனுபவங்களை சாது பார்த்தசாரதியிடம் கூறிக் கூறித் திளைத்துப் போனுர். ''எல்லாம் நல்லதுக்குத்தான் அறிகுறி'' என்று சுருக்கமாகப் பதில் கூறினுர் சாது.

அடுத்த தை அமாவாசை (18-1-69) விடியற்காலை சேதுராமன் ஒரு கனவு கண்டார்.

அவர் வைஷ்ணவி தேவியின் சந்நிதியில் நின்று கொண்டிருக்கிருர். சாது பார்த்தசாரதி அனைவருக்கும் பால் பிரசாதம் வழங்கிக் கொண்டிருக்கிருர். சேதுராமனின் அருகில் வந்ததும், அவருக்குப் பால் வழங்கிவிட்டு, எல்லோர் காதிலும் விழும்படி, ''நீ சிவராத்திரி அன்றே ஏன் சந்நியாசம் மேற்கொள்ளக் கூடாது''என்று ஆங்கிலத்தில் கேட்கிருர். இதைச் சற்றும் எதிர்பாராத சேதுராமனுக்குத் தூக்கிவாரிப் போடுகிறது. ''இப்படி திடீரென்று கேட்டால் நான் எப்படிப் பதில் சொல்ல முடியும்? நான் இதைப் பற்றி உடனே முடிவு செய்ய இயலாது. யோசித்து நிதானமாகப் பதில் சொல்கிறேன்'' என்று கூறுகிருர். உடனே கனவு கலைந்து விடுகிறது. விழித்துக் கொண்டு விட்டார்.

சிவராத்திரியன்று சேதுராமன் சந்நியாசி ஆக வேண்டும் என்று வைஷ்ணவி தேவி முடிவு செய்து விட்டாள். தன் முடிவுக்கேற்ப, தன் பக்தர் சாது பார்த்தசாரதியை இயக்கிக் கொண்டிருந்தாள் அன்னை.

சந்நியாசம் மேற்கொள்வதற்கு முன் குருநாதரான வள்ளிமலை சுவாமிகள் பிறந்த மண்ணை மிதித்து, புண்ணியம் பெற்று வந்தார் சேதுராமன். கோவையிலுள்ள பூநாச்சிபுதூருக்குச் சென்று, சுவாமிகள் அவதார ஸ்தலத்தைப் புகைப்படம் எடுத்து வரும்படி சேதுராமனைச் சாது பார்த்தசாரதி அனுப்பியதற்கு அதுதான் காரணமாக இருக்க வேண்டும். வைஷ்ணவி தேவியின் பக்தர்களில் ஒருவரான ரஞ்சித் சிங்குடன் பூநாச்சிபுதூருக்குச் சென்று திரும்பி வந்த சேதுராமனின் உள்ளத்தில் பெரும் புயல் வீசத் தொடங்கியது. அமைதிக்கு முன் வீசும் புயலாகவே அது அமைந்தது.

சில நாட்களாகவே சேதுராமனுக்கு அலுவலகத்தில் வேலையே ஓடவில்லை. அடிக்கடி தேவியும் சாதுவும் அவருடைய எண்ண ஓட்டத்தின் குறுக்கே வந்து, அவர் மனத்தைக் குழப்பினுர்கள். எந்நேரமும் ஏதோ நினைவாக இருந்த அவர், தப்பும் தவறுமாக எதையோ எழுதி, மேலதிகாரிகளின் கோபத்திற்கு ஆளானுர். நண்பர்களுக்கு எழுதிய கடிதங்கள்

கோவையாக இல்லாமல் விபரீத அர்த்தங்களைக் கொடுத்தன. அவர் நினைத்தது ஒன்று, எழுதியது வேறொன்றாக இருந்தது. தனக்கு சீக்கிரத்திலேயே சித்தம் தடுமாறி, பைத்தியம் பிடித்து விடப் போகிறது என்று சேதுராமன் அஞ்சினார். மன நோய் மருத்துவமனையில் சேர்க்கப்பட்டு, எல்லோருக்கும் மனக் கஷ்டத்தைக் கொடுப்பது போன்ற காட்சியைக் கூடக் கற்பனையில் கண்டு வேதனைப் பட்டார் அவர்.

இனி ஒரு கணமும் பொறுக்க முடியாது என்று உணர்ந்தார் சேதுராமன். சாது பார்த்தசாரதியிடம் போய் முறையிட்டார். சந்நியாச ஆச்ரமம் மேற்கொள்ள எப்படியாவது தமக்கு அனுமதியளிக்கும்படி மன்றாடிக் கேட்டுக் கொண்டார். அதற்கான வேளை வந்து விட்டது. சாது பார்த்தசாரதியும் தமது சம்மதத்தைத் தந்து விட்டார்.

தேவியின் உத்தரவையும் பெற்றுத் தரும்படி சேதுராமன் கேட்டதற்கு, தியானத்தில் ஆழ்ந்த சாது பார்த்தசாரதி, தேவியின் அனுக்ரகமான பதிலையும் எழுதிக் கொடுத்தார்.

அன்று மாலை, ஸ்ரீ சிருங்கேரி சங்கராசாரிய சுவாமிகளைத் தரிசித்து ஆச்ரமம் மேற்கொள்வதற்கு முன் அவரது ஆசியையும் பெற்றுக் கொண்டார் சேதுராமன்.

ஆச்ரமம் மாறப் போகிற சேதுராமன், குடும்பத்தாரிடமும், நண்பர்களிடமும் விடை பெற்றுக் கொண்டார். அவர்களை நமஸ்கரித்து ஆசியைப் பெற்றார். அப்போது அருமை நண்பர் டன்லப் கிருஷ்ணன் அவருக்கு ஒரு யோசனையைக் கூறினார்:

''சேது, உன் முடிவுக்குக் குறுக்கே நிற்பதற்கு நான் யார்? இருந்தாலும் எனக்கு ஓர் எண்ணம் தோன்றுகிறது. நீ வைஷ்ணவி தேவியின் சந்நிதியில் நின்று அருட்புகழ் பாடு. அவள் உத்தரவு எப்படி அமைகிறதோ, அதன்படி நடந்து கொள்'' என்றார்.

தம் தெய்வப் பணிக்கு என்றுமே உற்ற துணையாயிருந்து வருபவரும், உயரிய எண்ணங்கள் கொண்டவரும், தூய்மையான உள்ளம் படைத்தவருமான அன்பர் கூறியதை வேதவாக்காக ஏற்றுக்கொண்டார் அருட்கவி சேதுராமன்.

சிவராத்திரிக்கு முதல் நாள். இல்லறத்தை வெறுத்து, நல்லறமாம் துறவறம் வேண்டி வடமுல்லை வாழ் வைஷ்ணவி தேவியின் முன் பாடுகிறார் அருட்கவி சேதுராமன். 'அறுசீரடி ஆசிரிய விருத்தத்தில் பதினைந்து பாட்டுக்கள், பத்தரைமாற்றுத் தங்கக் கவிகளாகப் பொங்கிப் பெருகுகின்றன. முதற் பாட்டில் தேவியின் கடைக்கண் அருளை வேண்டித் துதிக்கிறார்:

உள்ளத் துறவும் உடற்றுறவும்
உண்மைத் துறவாய் உயர, அவை
கள்ளத் துறவாய் அமையாமைக்
காப்பாய்! உன்றன் கடைக்கணருள்

வெள்ளத் துறவை ஒரு போதும்
விட்டுப் பிரியா விதமெனையாள்!
பள்ளத் துறவை விழை புனல்போற்
பாயும் கருணை வைஷ்ணவியே!

தேவியே அவரைத் துறவறம் மேற்கொள்ளுமாறு பணிக்கிருள் என்பதை இரண்டாம் பாட்டில் அறிகிருேம்:

மாணியாக வாழ்வேனை
மாயைக் கடலாம் ஸமுசாரம்
நாணித் துரீயாச் சிரமத்தை
நண்ணுமாறு பணிக்கின்ருய்!
தோணி யாமுன் மலரடியால்
துக்கப் பிறவிக் கடல் கடத்திக்
கோணி டாநன் னெறிப்படுத்திக்
கூவிக்கொள்ளாய்! வைஷ்ணவியே!

சிவராத்திரி புண்ணிய தினம். பகலவன் கிழக்கே தோன்றிவிட்டான். திருமாலுக்குகந்த திருவோண நட்சத்திரத் திருநாளன்று, சிவனுக்குகந்த புனித நாளன்று, தேவியின் மலரடிகளிலும் குருநாதர் வள்ளிமலை சுவாமி களின் படத்தின் முன்னும் படைக்கப்பட்ட காவியாடைகளை, சாது பார்த்தசாரதி எடுத்துக் கொடுக்க, சேதுராமனின் தாயாரும், பெரிய தாயாரும் அவற்றை உடுத்துக் கொண்டனர். பின்னர் சேதுராமன் துறவுக் கோலத்திற்கு அடையாளமாக முண்டநம் செய்து கொண்டு, முன்பு கனவு கண்ட அதே திருக் குளத்தில் நீராடி விட்டு, ஆலயத்தினுள் வந்தார். அங்கு, தேவி, பரமகுரு சேஷாத்ரி சுவாமிகள், குரு ஸ்ரீ வள்ளிமலை சுவாமிகள் இவர்கள் திருமுன் சமர்ப்பிக்கப்பட்ட காவி ஆடையை, சாது பார்த்தசாரதி அவர்கள் திருக்கரம் தொட்டுக் கொடுக்க, சேதுராமன் அவற்றைப் பணிவுடன் பெற்றுக் கொண்டு, அன்னையரிடம் தந்தார். பின்னர், குளத்தில் மூழ்கி, நீரில் நின்றபடியே தமையனர், புத்தகத்திலிருந்து படித்த மந்திரங்களை மும்முறை கூறி, பூணூலைக் கழற்றி எறிந்து விட்டு, மீண்டும் நீரில் மூழ்கினர். உற்ருரும் சுற்ருரும் கரையில் சுற்றி நிற்க, அன்னையரிடமிருந்து காவித் துணிகளை வாங்கி, உடுத்திக் கொண்டு, சேதுராமன், சுவாமி சாதுராமாக மாறி, வைஷ்ணவி தேவியின் திருச் சந்நிதிக்கு வந்தார். சற்று நேரம் இமைகளை மூடித் தியானத்தில் ஆழ்ந்திருந்து விட்டு, 'சின்னமாம் ஏகதாரை திருக் கையிலேந்தி' என்ற குரு தோத்திரத்துடன், 'உம்பர்தரு', 'வங்கார மார்பிலணி', 'உருவாய் அருவாய்', 'காவியுடுத்தும்' முதலிய அருணகிரியாரின் திருப்புகழ்ப் பாக்களையும் பாடித் துதித்து, உருகித் தொழுது, நமஸ்கரித்து எழுந்தார். பின்னர் ஆச்ரமத்தில் உள்ள சாதுக்களுக்கும் சாதுநிகளுக்கும் ஒவ்வொருவராக நமஸ்காரம் செய்து அவர்களது ஆசியைப் பெற்றுக் கொண்டார்.

அன்று சிவராத்திரி விரதம் இருந்து ஸ்ரீ தட்சிணுமூர்த்திக்கு நடைபெற்ற நான்கு கால பூஜைகளிலும் கலந்து கொண்டதோடு, தேவியின் சிவாலங்காரத்திலும் ஈடுபட்டு மனத்தைப் பறி கொடுத்தார் சுவாமி

சாதுராம். தேவார, திருவாசகத் திருமுறைகளைப் பாடி, திருப்புகழ் ஓதி, அபேதானந்தா பஜனை கோஷ்டியாருடன் கலந்து நாம சங்கீர்த்தனம் செய்து, நான்காம் கால பூஜையைத் தரிசிக்க மாசிலாமணீச்வரர் ஆலயத்திற்குச் சென்றார். அங்கு திருக்குளத்தில் நீராடி, சிவ சின்னங்கள் தரித்து, சுவாமியின் முன்பு பஞ்ச புராணம் பாடி, அம்பிகையின் முன்பு அபிராமி அந்தாதி பாடி, சுந்தரரின் பதிகங்களை வாய் மணக்க, மனங் குளிரப் பாடி, சிவப் பிரசாதம் பெற்று, வைஷ்ணவி ஆச்ரமத்திற்குத் திரும்பி வந்தார்.

**சா**துராம் வள்ளிமலைக்குக் கிழக்கே ஒரு மைல் தொலைவில் இருக்கும் மேல்பாடி என்ற அழகிய கிராமத்தில் தங்கி, அங்கு தேவாரத் திருப்புகழ் வகுப்புகள் நடத்தி வருவதாக அறிந்தேன். அங்கு பழம் பெரும் சிவாலயம் ஒன்றிருப்பதாகவும் அதற்குத் திருப்பணி செய்ய அவ்வூர் மக்கள் பெரு முயற்சி எடுத்து வருவதாகவும் அறிந்திருந்த நான், சாதுராம் அங்கு தங்கியிருக்கும் வாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்டு அந்த ஆலயத்தைத் தரிசித்து விட்டு வரலாம் என்று சென்றேன்.

பாலாற்றின் கிளை நதியான, நீவா நதி யென்னும் பொன்னையாற்றின் மேற்குக் கரையில் இருக்கும் மேல்பாடி, சரித்திரச் சிறப்பும், புராணப் பெருமையும் கொண்ட அழகிய கிராமம். கந்த புராணத்தில், வள்ளி திருமணப் படலத்தின் தொடக்கத்தில் கச்சியப்ப சிவாசாரியார்,

அயன்படைத்திடும் அண்டத்துக் காவியாய்ப்
பயன்படைத்த பழம்பதி என்பரால்
நயன்படைத்திடு நற்றொண்டை நாட்டினுள்
அயன்படைத்து விளங்குமேற்பாடியே

என்று வியந்து பாடியுள்ளார்.

'மேல்பாடி' என்ற பெயர் ஏற்பட்டதற்குச் செவி வழி வந்த ஒரு நிகழ்ச்சியைக் காரணமாகக் கூறுகிறார்கள்.

தேவாரம் பாடிய மூவர் இவ்வூருக்கு அருகில் வந்த போது, ஆற்று நீர் கரை புரண்டு ஓடியதால் அவர்களால் ஆற்றைக் கடந்து மேல்பாடிக்கு வர முடியவில்லையாம். அதனால் 'சோமநாதீச்வரரை இனிமேல் பாட

ஸ்ரீ சோமநாதீச்வரர் ஆலயத்திலுள்ள சப்த கன்னியர் சிலைகள்



வருவோம்' என்று கூறி அந்தக் கிராமத்திற்கு வராமலே சென்று விட்டனராம்! அன்றையிலிருந்து 'இனிமேல் பாடலாம்' என்பது, 'மேல் பாடலாம்' என்ருகி, இறுதியில் 'மேல்பாடி' என்று மருவி, நாளடைவில் அதுவே ஊர் பெயராகவும் வழங்கப்பட்டு வருகிறதாம்!

அந்தக் காலத்தில் போர்ப் படைகள் முகாமிட்டிருந்ததால் அது 'பாடி' யானதாகவும், ஆற்றுக்கு மேற்புறமாக இருந்ததால் மேல்பாடி யானதாகவும் அங்கிருந்த நண்பர் ஒருவர் வேருெரு விளக்கம் தந்தார்.

ஸ்ரீ சோம நாதேச்வரர் ஆலயத்தைக் காணச் செல்கிருேம்.

தெற்குப் பார்த்த நுழைவாயில். மொட்டைக் கோபுரத்தைக் கடந்து சென்ருல், இடப்புறம் வாகன மண்டபமும், வலப்புறம் வசந்த மண்டபமும் காணப்படுகின்றன. தெற்கு நோக்கியுள்ள கோபுர வாயிலைக் கடந்து, உள்ளே நுழைந்தால் வெளிப் பிராகாரத்தை அடைகிருேம். வலப்புறம் கம்பிகளால் அடைக்கப்பட்ட தாழ்வாரம் ஒன்று இருக்கிறது.

''இதோ பாருங்கள், நாகராஜ யக்ஞோபவீத கணபதி. எவ்வளவு அழகாக இருக்கிருர்? தலையில் கிரீடம் இல்லாமல் இம்மாதிரிப் பிள்ளையாரைப் பார்த்திருக்கிறீர்களா?'' என்று உற்சாகத்துடன் எங்களுக்குக் காட்டினுர் சாதுராம்.

வழு வழுப்பான கல்லில் வடித்தெடுக்கப்பட்டிருக்கும் அந்த விநாயக ரைத் தொட்டு மகிழ வேண்டும் என்ற ஆவல் பிறக்கிறது. ஆகா! நாகப் பாம்பினுல் ஆன அந்தப் பூணூல்தான் பார்க்க எத்தனை அழகாக இருக் கிறது! அவரது வலது மேல் கையில் மழுவும்,இடது மேல் கையில் அங்குச மும் உள்ளன. வலது கீழ்க் கையில் உடைந்த தந்தமும், இடது கீழ்க் கையி லுள்ள பாத்திரத்தில் கொழுக்கட்டையும் இருக்கின்றன. அந்தப் பணி யாரத்தை ஆசையுடன் துதிக்கையால் அவர் எடுக்கும் பாவம் மிக அருமையாயிருக்கிறது.

ஸ்ரீ விநாயகரை வணங்கி விட்டுத் திரும்பியவுடன் நம் பார்வை அங்கு வரிசையாக வீற்றிருக்கும் சப்த கன்னியர் சிலைகள் மீது படிகிறது. ''வாகனங்களுடன் கூடிய சப்த மாதாக்களைப் பாருங்கள். ஒவ்வொரு சிலையும் தனிக் கலையழகுடன் திகழ்கிறது'' என்று சுவாமி சாதுராம் ஆர்வத்துடன் ஒவ்வொன்ருக விளக்கிக் காட்டுகிருர்.

கன்னியர் எழுவரும் இடது காலை மடித்து வலது காலைத் தொங்க விட்டுக் கொண்டு ஒய்யாரமாக அமர்ந்திருக்கின்றனர். எல்லோருக்கும் வலது கீழ்க்கரம் அபயமாக அமைந்திருக்க, இடது கீழ்க்கரத்தை துடை யில் வைத்துக் கொண்டிருக்கின்றனர். சாமுண்டியைத் தவிர, மற்ற அறுவரும் திருமார்பில் கச்சையணிந்திருக்கின்றனர்.

மிகப் பழைய சிலைகளாதலால், அங்குமிங்குமாக காலத்தின் கைவரிசையைக் காண முடிகிறது. சற்றுக் கூர்ந்து கவனித்த பிறகுதான் பீடத்தில் தனியே செதுக்கப்பட்டுள்ள வாகனங்களையும் அடையாளம் கண்டு கொள்ள முடிகிறது.

பிராம்மிக்கு அன்னப் பறவையும், மகேச்வரிக்கு ரிஷபமும், கௌமாரிக்கு மயிலும், வைஷ்ணவிக்கு கருடனும், வாராஹிக்கு

எருமையும், இந்திராணிக்கு ஐராவதமும், சாமுண்டிக்குப் பூதமும் வாகனங்களாகப் பொறிக்கப்பட்டிருக்கின்றன.

சப்த கன்னியரைத் தவிர, அங்கு வேறு சில தெய்வங்களின் உருவச் சிலேகளும் காணப்படுகின்றன. மேற்குக் கோடியிலிருக்கும் மகா கணபதி பார்க்க கம்பீரமாக இருக்கிருர்.

காலபைரவர், சந்திரன், ரிஷபாரூடர் முதலிய கற்சிலேகளுடன், அடையாளம் கண்டு கொள்ள முடியாத வேறு சில தேவியரின் சிலேகளே யும் அங்கு காண்கிறேம். இடுப்புக்கருகில் விரிசல் கண்டு, கரங்கள் மூளியான நிலேயில் ஒரு கணபதியைக் காணும்போது நம் மனம் உடைந்து போகிறது.

வலது கரத்தில் தண்டாயுதத்தை ஏந்தி,மடக்கிய இடது காலுடனும் இடுப்புடனும் சேர்த்துக் கட்டப்பட்ட யோகப்பட்டத்துடன் வீற்றி ருக்கும் மகா சாஸ்தா, பின்னம் ஏதுமின்றி, நம் கண்ணேயும் கருத்தை யும் கவருகிருர். எங்கெல்லாமோ இருந்த உருவச் சிலேகளே அங்கு பாது காப்பாகக் கொண்டு வந்து வைத்துள்ள புண்ணியவான்களே வாயார வாழ்த்திக் கொண்டே அந்த மேடையை விட்டு இறங்கி, பிராகாரத்தில் மேற்கு நோக்கி நடக்கிறேம்.

வடமேற்கு மூலேயிலிருக்கும் அம்பிகையின் ஆலயத்திற்குள் நுழை கிறேம். பாவம், உலகநாயகி கவனிப்பாரற்று ஏழைமைக் கோலத்தில் ஒரு பச்சைத் துணியால் உடலே மறைத்துக் கொண்டு நிற்பதைக் கண்டு நெஞ்சம் குமுறுகிறேம். நகையாக அன்னேக்கு ஒரு திருகாணியைக் கூடக் காணேம்.

அழகுத் தமிழில் அம்பிகைக்கு 'அருந்தவம் பயில் உமை' என்று பெயரிட்டிருக்கிருர்கள். வட மொழியில் அவளே 'தபஸ்க்ரூதீ தேவி' என்று விளிக்கிருர்கள். யோக நிஷ்டையில் ஆழ்ந்திருக்கும் அன்னே, ஜடை முடியுடன் தோற்றமளிக்கிருள். மோன தவம் மேற்கொண்டிருப்பதால், அவள் உள்ளத்தில் நிலவும் பேரமைதி, திருமுகத்தில் சாந்தமாகத் தவழ் கிறது. மேற் கரங்களில் பாசாங்குசம் ஏந்தியிருக்க, அபயவரதங்களான கீழ்க் கரங்களால் அன்னே அருள்பாலிக்கிருள். சாதுராம் பாடிய அருட் புகழ் தேனுக ஒலிக்க, தேவியைத் தரிசிக்கிறேம். 'சர்வ அணியலங்காரங் களுடன், கண்ணேப் பறிக்கும் எழில் தோற்றத்துடன் விரைவிலேயே நீ எங்களுக்குக் காட்சி தர வேண்டுமம்மா' என்ற பிரார்த்தனேயுடன் வெளியே வருகிறேம்.

வாயிற்படியின் வடப்புறத்தில், தேவி பாகவத நிகழ்ச்சிகளும், தென் புறத்தில் கிருஷ்ண லீலேகளும் சின்னஞ் சிறு சுவர் சிற்பங்களாக வடிக்கப் பட்டிருக்கும் பேரழகைக் காணக் கண்கோடி வேண்டும்.

அம்பிகையின் சந்நிதிக்கு நேரே, ஈசானிய மூலேயில் யாகசாலே யிருக்கி றது. மண்டபத் தூண் ஒன்றில், கிழக்கு நோக்கி யிருக்கும் ஸ்ரீ பாலசுப்பிர மணியர் சிற்பத்தை மூலவராக்கி, ஸ்ரீ முருகருக்கு ஒரு சந்நிதி ஏற்படுத்தி

யிருக்கிருர்கள். அந்தக் கோயிலில் முருகருக்கு தனியாக வேறு சந்நிதி கிடையாது. அந்த மண்டபத் தூண்களில் ஸ்ரீராமர், ஸ்ரீ ஆஞ்சநேயர் சிற்பங்களும் காட்சியளிக்கின்றன.

கொடி மரம் நெடிதுயர்ந்து கம்பீரமாக நிற்கிறது. அதன் பீடத்தி னருகில், நாற்புறமும் அழகிய வேலைப்பாடுகளுடன் மரத்தில் செதுக்கப் பட்ட சிறு உருவங்கள் இருக்கின்றன. கிழக்கில் வல்லப கணபதி, தெற்கே உமாமகேச்வரர், வடக்கே வள்ளி, தேவசேனு சமேத ஸ்ரீ சுப்பிரமணியர் காட்சி தருகின்றனர். மேற்கில் சூலம் காணப்படுகிறது. நந்தியும் பலிபீட மும் உள்ளன.

பிராகாரத்தின் தென்கிழக்குப் புறத்தில் மடைப்பள்ளி யிருக்கிறது. அங்கிருக்கும் கருங்கல் அண்டாக்களையும், சாதம் வடித்துக் கொட்டும் மேடையையும், அதிலுள்ள பட்டை போடும் குழிகளையும் பார்க்கும் போது ஒரு காலத்தில் அந்தக் கோயில் எத்தனை செழிப்பாக இருந்திருக்க வேண்டும் என்பது நமக்கு நன்ருகப் புரிகிறது. அங்கிருக்கும் கருங்கல் கிணற்றின் அமைப்பையும், சூரிய ஒளிபடுவதற்கும், மழை நீர் வடிவதற்கும் தக்கவாறு செய்யப்பட்டுள்ள வசதிகளையும் பார்க்கும் போது அக்காலக் கட்டடக் கலைஞர்களின் நுண்ணறிவை நாம் வியந்து பாராட்டுகிருேம்.

பின்னர், நாம் சுவாமி சந்நிதி இருக்கும் மண்டபத்தின் பக்கம் திரும்பு கிருேம். வெளியில் நவக்கிரக சந்நிதி இருக்கிறது. அதற்கு மேற்கேயுள்ள அறையைக் காட்டி 'இதுதான் சண்முகர் மண்டபம்' என்கிருர் ஒருவர். எட்டிப் பார்த்தேன். அங்கு ஒரு சிலையுமில்லாமல் வெறிச்சோடிக்கிடந்தது.

''இங்கு ஒரு காலத்தில் முருகர் சந்நிதி இருந்திருக்கும் போலிருக் கிறது'' என்றேன் நான்.

''அதென்னமோ நிச்சயமாகத் தெரியாது. இதை சண்முகர் மண்ட பம் என்று தான் சொல்லுகிருர்கள்'' என்று கூறி, சுவாமி சந்நிதிக்கு எங்களை அழைத்துச் சென்ருர் சாதுராம்.

கருங்கல் தூண்களான பதினுறுகால் மண்டபத்தினுள் நுழைகிருேம். தூண்களில் சிற்பங்கள் கிடையாது. கிழக்குக் கோடியில், மூலவரை நோக்கி நந்திகேச்வரர் இருக்கிருர். நடராஜர் மேடை யிருக்கிறது. ஆனுல், சிலையைக் காணவில்லை. அதற்கடுத்த மண்டபத்தில் நுழைகிருேம், கருவறை பிராகாரத்தைச் சுற்றுகிருேம்.

கோஷ்ட கணபதிக்கும் தட்சிணுமூர்த்திக்கும் இடையில் கீழே காசி விசுவநாதர் லிங்கமும், அதன் எதிரே முகம் பின்னமான சிறு நந்தியொன் றும் காணப்படுகின்றன.

தட்சிணுமூர்த்தி பெரிய ஜடையுடன் சாந்தமூர்த்தியாக வீற்றிருக்கி ருர். கீழே இரண்டு முனிவர்கள்தான் கண்ணுக்குத் தெரிகிருர்கள்.

தென் மேற்கு மூலையில் வடக்கு நோக்கி பிட்சாடனரின் அற்புத உரு வச்சிலை நம் கவனத்தைக் கவருகிறது. அவரைச் சிறிது நேரம் உற்றுப் பார்த்து விட்டு, கன்னி மூலைக் கணபதியை வழிபட்டு விட்டு, திருமாலைத் தரிசித்து விட்டு, வடக்குப் பிராகாரத்திற்கு வருகிருேம்.



அருஞ்சயேச்வரர் ஆலயம் (மேல்பாடி)

அங்குள்ள துர்க்கையம்மன் 'வா வா' என்று கருணையோடு நம்மை அருகில் அழைக்கிறுள். எருமைக் கடா பீடத்தில் நின்றிருக்கும் திருக் கோலத்தில் அம்மன் சங்கு சக்கரம் ஏந்திய வைஷ்ணவி, துர்க்கையாக ஒய்யார எழிலுடன் தோற்றமளிக்கிறுள்.

கருவறைப் பிராகாரச் சுவர்களில் சிறிய ரகசியப் பாதுகாப்பு அறைகள் இருக்கின்றன. அந்தக் காலத்தில் மத விரோதிகளின் தாக்கு தலிலிருந்து, விக்ரகங்களையும் நகைகளையும் காப்பதற்காக நம் முன் னேர்கள் முன் யோசனையுடன் இம்மாதிரியான ஏற்பாடுகள் செய்து வைத்திருக்கிறுர்கள் என்று ஒருவர் கூறினர். இந்தக் காலத்தில் நம் ஆலயங்களில் இதை விடப் பாதுகாப்பான ரகசிய அறைகள் அமைக் கப்பட வேண்டிய அவல நிலை உருவாகி வருவதை நினைத்துக் கொண்டு பெருமூச்சு விட்டேன் நான்.

கருவறையின் வெளிப்புறச் சுவர்களில் பாலி, தமிழ் கலந்த கல்வெட் டுக்குள் இருக்கின்றன. முன் மண்டபத்தில், வடபுறத்திலுள்ள மேடையில் ஒரு பாதாள அறை இருக்கிறது. எல்லாக் கோயில்களிலும் காட்டுவது போல் இங்கும் ஒரு சுரங்கப் பாதையைக் காட்டுகிறுர்கள்.

ஸ்ரீ சோமநாதேச்வரரின் கருவறையை நெருங்கி, சுவாமியின் முன்பு பயபக்தியுடன் நிற்கிறேம்.அப்பெரிய சிவலிங்கம் சிந்தையைக் கவர்ந்து, பக்தியைப் பெருக்குகிறது.ஆவுடையாரின் சுற்றளவும், லிங்கத்தின் உயர மும், தரிசிப்பவர் எண்ணங்களை உயர்த்தும்;சிறிய மனத்தையும் பெரிதாக் கும். சந்தேகமில்லை. சுவாமியின் மேலேயுள்ள மண்டப தளம்,ஆறு மரத் துண்டுகள் குறுக்கே போடப்பட்டு, எண்கோண வடிவத்தில் மிக நேர்த்தி யாக அமைக்கப்பட்டிருக்கிறது.

கருவறைக்கு முன்னுள்ள சிறிய மண்டபத்திலும் ஓர் ஓரமாக ஒரு லிங்கம் காணப்படுகிறது. பகைவர் படையெடுத்து வந்தால், மூலவரை சுவரால் மறைத்து விட்டு, இந்த லிங்கத்தை வைத்து ஏமாற்றி விடுவார்க ளாம்! ஏதோ அவர்கள் கேள்விப்பட்டதைக் கூறுகிறுர்கள். வேறு வழி யின்றி நாமும் அதைக் கேட்டுக் கொள்கிறேம்.

ஆலயத்தை விட்டு வெளியே வரும் போது, தெற்கேயுள்ள மொட்டை மண்டபத்தில் மறைந்தும் மறையாமலும் இருக்கும் சிற்பங்களை ஒவ்வொன்ருக விளக்கிக் கூறுகிருர் சாதுராம்.

காமாட்சியன்னை, ஏகாம்பரநாதரை வழிபடுவது, கண்ணப்பநாயனர், காளத்தியப்பனைத் தொழுவது, ஸ்ரீ ஆஞ்சநேயர், சிவலிங்கத்தை ஆராதிப்பது, காமதேனு, சிவலிங்கத்தின்மீது பால் சுரப்பது, கருடவாகனப் பெருமாள் போன்ற கலை வடிவங்களைக் கண்டு களிக்கிருேம்.

சோமநாதேச்வரர் ஆலயத்திலிருந்து பார்த்தால் தெற்கே சற்றுத் தொலைவில் மற்ருெரு சிறு கோயில் தெரிகிறது.

'அது என்ன கோயில்?' என்று அருகிலிருந்த அந்த ஊர்வாசி ஒருவரைக் கேட்டேன். அவரிடமிருந்து சில சரித்திர நிகழ்ச்சிகளைத் தெரிந்து கொண்டேன்.

மேல்பாடி கிராமம் ஒரு காலத்தில் சோழ மன்னர்களின் ஆட்சிக்கு உட்பட்டிருந்தது. அப்போது அதற்கு இராசாச்ரயபுரம் என்ற பெயர் வழங்கி வந்தது. தஞ்சைப் பெரிய கோயிலைக் கட்டிய இராஜ இராஜ சோழனின் காலத்தில் கட்டப்பட்டதுதான் சோமநாதேச்வரர் ஆலயம். ஆலயத்தில் உறையும் இறைவனுக்கும் சோழேந்திர சிம்மேச்வரர் என்ற திருநாமமும் வழங்கப்பட்டது. அந்த மன்னனின் நினைவாக மேல்பாடியில் அருள்மொழி தேவர் வீதியும், மும்முடிச் சோழ வீதியும் இருந்திருக்கின்றன.

இராஜராஜ சோழனின் பாட்டனர் அருஞ்ச சோழன். அவன் வட ஆற்காடு மாவட்டத்திலுள்ள ஆற்றூர் என்ற இடத்தில் போரிட்டு உயிர் நீத்தான். அதனுல் அவனுக்கு 'ஆற்றூர் துஞ்சிய சோழன்' என்ற பெயரும் உண்டு. தன் பாட்டனுரின் நினைவாக இராஜராஜ சோழன் மேல்பாடியில் ஒரு கலைக் கோயில் எழுப்பினுன். அங்கு உறையும் இறைவனுக்கு அருஞ்சயேச்வரர் என்றும் சோழேச்வரர் என்றும் மகாதேவர் என்றும் காரணப் பெயர்கள் ஏற்பட்டன.

போரில் மாண்ட பாட்டனுரை அங்கு சமாதி வைத்து, அதன் மீது லிங்கப் பிரதிஷ்டை செய்து இராஜராஜன் கோயில் கட்டினுன் என்றும், அது சமாதிக் கோயில் அல்ல, அருஞ்ச சோழனின் நினைவாகக் கட்டிய கோயில்தான் என்றும் இருவிதக் கருத்துக்கள் நிலவுகின்றன.

இதெல்லாம் ஆராய்ச்சியாளர்களுக்குரிய பிரச்னைகள். நாம் சுவாமி தரிசனம் செய்து விட்டு வருவோம்.

மகாதேவர் கோயிலுக்குள் நுழைந்த பிறகுதான், அது தற்போது பூஜையற்ற ஒரு கலைக் கூடமாகத்தான் இருக்கிறது என்றும் தெரிந்து கொள்கிருேம். பசுமை இழையோடும் அற்புதக் கருங்கல்லில், அருமையானதொரு கலையுணர்வோடு மா மன்னர் எழுப்பிய நினைவுச் சின்னத்தில், சிவலிங்கம் மட்டுமே இருக்கிறது. அம்மனுக்குச் சந்நிதியில்லை. பிராகாரத்திலுள்ள தட்சிணுமூர்த்தி சிலை மூளியாகிக் கிடக்கிறது.

கருவறை மண்டபத்தின் வெளிப்புறத்தில் நிறைய கல்வெட்டுக்கள் காணப்படுகின்றன. விமானத்தின் கீழ்ப் பகுதியில் விமானத்தை தாங்கு வது போல் பல கோணங்களில் பல முகபாவங்களுடன் சுற்றிலும் பூத கணங்கள் செதுக்கப்பட்டிருக்கின்றன. ஒவ்வொன்றும் ஓர் அருமையான 'கேலிச் சிற்பம்'. பார்த்துக் கொண்டே இருக்கலாம்,ரசித்துக் கொண்டே இருக்கலாம்.

கருவறையின் பின்புறச் சுவரில், அருஞ்சய சோழர் போர்புரிவது போன்ற சிறு சுவர்ச் சிற்பமும், வடப்புறத்தில், வாலி-சுக்ரீவ சிற்பங் களும் கண்டு அதிசயிக்கத் தக்கவை.

கருவறை விமானமும், கோயில் மதிற் சுவரும் கருங்கல்லால் ஆனவை. விமானத்தின் கிழக்கில் யானை மீது ஏறிய அருஞ்சய சோழனும், வடக்கில் பிரமனும், தெற்கில் வீணாதர தட்சிணாமூர்த்தியும், திருமாலும் சிலா மூர்த்திகளாக வீற்றிருக்கின்றனர்.

பொன்னையாற்றின் மேற்கரையில், இயற்கையன்னை கோலோச்சும் பகுதியில், அமைதியான சூழ்நிலையில் தோற்றமளிக்கும் அவ்விரு கோயில் களையும் திரும்பித் திரும்பிப் பார்த்துக்கொண்டே எல்லோரும் வீராஞ்ச நேய சுவாமி ஆலயத்திற்கு வந்து சேர்ந்தோம். ஆஞ்சநேயரின் உருவச் சிலை, நதிப்படுகையில் கிடைத்ததாகவும், அது சோமநாதேச்வரர் கோயிலைச் சேர்ந்ததாகத்தான் இருக்க வேண்டும் என்றும் கூறினார்கள். அவ்வூர் மக்கள் வீராஞ்சநேயருக்கு சிரத்தையுடன் லட்சார்ச்சனையும், உற்சவங்களும் செய்து வருகிறார்கள். அந்தச் சிறு கோயிலில்தான் சேக்கிழார் சங்கத்தின் சார்பில் தேவார திருப்புகழ் வகுப்புக்களும் நடை பெறுவதாகக் கூறினார்கள்.

மேல்பாடியிலுள்ள தோழர்களின் அன்புப் பிணைப்பிலிருந்து பிரிய மனமில்லாமல் விடைபெற்றுக் கொள்கிறோம். சுவாமி சாதுராம் வழி காட்ட, தங்கால் என்ற இடத்தில் தற்போது ஆச்ரமம் அமைத்துக் கொண்டிருக்கும் ஸ்ரீ வள்ளிமலை மௌனகுரு சுவாமிகளைத் தரிசிக்கச் சென்றோம்.

இரண்டாம் பாகம் நிறைவுற்றது



திருப்புகழைத் திக்கெட்டும் பரப்பிய
சச்சிதானந்த சுவாமிகள்

நூற்றியோரு பகுதிகளாக, இரண்டாண்டுகள் தொடர்ந்து விகடனில் பிரசுரமான போது வாசகர்களிடையே மகத்தான வரவேற்பைப் பெற்ற 'அருணசல மகிமை' புத்தக வடிவில் மூன்று பாகங்களாக வெளிவருகின்றன. முதல் முப்பத்தோரு பகுதிகள் முதல் பாகமாகவும், அறுபத்தைந்து பகுதிகள் வரை இரண்டாம் பாகமாகவும், மிகுதியுள்ளவை மூன்றும் பாகமாகவும் தொகுக்கப்பட்டிருக்கின்றன.

